# பச்சைக் கிளி

-சிறு கதைகள்-

கி. சந்திரசேகரன்






பதிப்புரிமை ] கலைமகள் காரியாலயம் [ விலை ரூ. 2/-
மயிலாப்பூர் :: சென்னை-4

# குறிப்பு

கலைமகள் பிரசுராலயம் என்னுடைய சிறு கதைகளைத் தொகுத்து வெளியிட அனுமதி கேட்டதும், பெருமை ஒன்றும் அதனால் எனக்கு ஏற்படவில்லை. உண்மையில் மனத்தில் போராட்டமே எஞ்சியது. சிறு கதைகளுக்கு உரிய உயர்ந்த அம்சங்கள் எல்லாம் என் கதைகளில் காணப்படாவிட்டால் வாசகர்களுக்கு இன்பம் கிடைக்குமா என்ற கேள்வியே என்னை மிகவும் பாதித்தது.

தமிழ் நடை அழகும், வருணனை வளமும், அதிசயிக்கத் தக்க நிகழ்ச்சிகளும் அமைந்து உருவாகாத கதைகளை, உள்ளடங்கிய கருத்திற்காக மட்டும் இலக்கியமாகக் கொள்ள இயலுமா என்பதுதான் முக்கியமான பிரச்னை. இவ்விதச் சந்தேகம் தீராதிருக்கையில், புத்தக வடிவில் வரும் இக்கதைகளைப் படிக்கும் பிறர் வாயினின்றும் விடையை எதிர்பார்க்கும் காலம் நெருங்கிவிட்டது.

கதைகளைச் சிருஷ்டி செய்யச் சொந்த அநுபவங்களே ஒருவருக்குப் போதுமானவை. எழுதியவைகளில் எங்காகிலும் பொருத்தமான உணர்ச்சியின் வலிவும், உண்மையான வாழ்க்கைச் சம்பவமும் பிரதிபலிக்க வேண்டுமானால், முழுவதுமே கற்பனையாக நேராமல், சொற்பம் அவரவர் பெற்ற அநுபவமாகவும், அவரவர் செய்த மன ஆராய்ச்சியின் நற்பயனாகவும் இருப்பதிலும் தவறில்லை அல்லவா? இவ்வழியைப் பின்பற்றுவதில் எழுத்தாளனிடம் குறை சிலருக்குத் தோன்றலாம். ஆனால் எழுத்தாளனைத் தன்னை நினைப்பவனுக்கல்லவா அதனால் கலக்கம் ஏற்படக் கூடும்!

இக்கதைக் கோவையில் சேர்ந்திருக்கும் கதைகளில் சில 'ஆனந்த விகடனி'லும், சில 'கலைமகளி'லும், ஒன்றே ஒன்று மட்டும் 'பாரத மணி'யிலும் ஏற்கனவே

வெளியானவை. புத்தகமாக இவைகளைச் சேர்த்து அச்சிட அநுமதி அளித்த பத்திரிகைகளுக்கு என் நன்றி என்றும் உள்ளது.

'வள்ளி பெற்ற பட்டாசு' என்னும் கதையை மேல் நாட்டு ஆசிரியர்களில் சிறந்த ஒருவருடைய கதை ஒன்றை வாசித்து அநுபவித்த பின் எழுதியதால், முழுவதும் என் சொந்தம் என்று சொல்ல முடியாது. அதே விதம், 'பெற்ற மனம் பித்து' என்னும் கதையும் திரைப் படத்தில் வந்த கவர்ச்சி பெற்ற நிகழ்ச்சி ஒன்றை வைத்தே கதை ரூபத்தில் ஜோடனை ஆக்கப் பெற்றது.

மற்றவைகளுக்குப் பிறர் கற்பனைகளில் பங்கு எதுவும் கிடையாது; எல்லாப் பொறுப்பும் என்னுடையதே.

ஆச்ரமம், மயிலாப்பூர்.
11-10-'43

—கி. ச.

## இரண்டாம் பதிப்புக் குறிப்பு

பதின்மூன்று வருஷங்களுக்குப் பின் இரண்டாம் பதிப்பு, தயாராகி இருக்கிறது. நேயர்கள் என் கதைகளில் எங்காகிலும் துளி இன்பம் பெற்றிருந்தால், அதற்கு அவர்களுடைய தாராள மனப்பான்மையேதான் காரணம்.

சொற்செறிவும், நிகழ்ச்சி வளமும், காதல் கனிவும், கதைச் சுவாரஸ்யமும் கலந்து உருவாகும் தற்காலச் சிறுகதை யுலகில், எனக்கும் ஓர் இடம் கிடைத்திருப்பதைப் பெரும் பாக்கியமெனவே கருதுகிறேன். கலைமகள் காரியாலயம் என்றென்றும் என் நன்றிக்குப் பாத்திரமாகி விட்டது.

13-6-56.

—கி. ச.

# பொருளடக்கம்

பக்கம்





என் அன்னையின்
நினைவு கூர்வது

# பச்சைக் கிளி

## 1

"அப்பா, அப்பா, அதைப் பாரேன்; ரெண்டு கிளி ஜோடியா யிருக்கு" என்று சொல்லிக்கொண்டே வாஸு ஓடிவந்து கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய கையைப் பற்றி இழுத்தான். அவனுடைய குரலில் பரபரப்பும், கொஞ்சம் பயமும் கலந்திருந்தன. தன் குரலைக் கேட்டுக் கிளிகள் சட்டென்று மரத்தை விட்டு எங்கே பறந்து போய்விடுமோ என்ற பயந்தான் அவன் குரலில் தொனித்த கவலைக்குக் காரணம்.

"தடிப் பயலே! பாடத்தைப் படிக்காமே, மரத்திலே கிளியைப் பாரு, அணிப் பிள்ளையைப் பாருன்னு தான் உன் நச்சரிப்பு!" என்று கடிந்துகொண்டே பல் விளக்கிக்கொண்டிருந்த அவன் தகப்பனார் அவன் பிடித்து இழுத்த கையை உதறிக்கொண்டு தம் காரியத்தைக் கவனித்தார்.

"அப்பா, சத்தம் போடாதே. அதுகள் ஓடிப் போயிடும் அப்புறம். பச்சை வர்ணம் என்னமாயிருக்கு! கண்ணைக் கூசறது! அதன் மூக்கைப் பாரு அப்பா. எவ்வளவு சேப்பா யிருக்கு! ஒண்ணுக்குக் கழுத்தைச் சுத்திக் கறுப்புக் கோடுகூட இருக்கு" என்றெல்லாம் வாஸு விடாமல் தகப்பனாரிடம் சொல்லியதையே சொன்னான்.

அவர் அவனைக் கவனிக்கவில்லை என்பதையும், கிளிகளையும் பார்க்கவில்லை என்பதையும் அவன் அறிந்துகொள்ளவில்லை.

"அடசீ! பாடத்தைப் படிடா! வாத்தியார் வந்தா வம்பு பண்றயே" என்று எரிந்து விழுந்துகொண்டே அவன் முதுகில் ஓர் அடி அடிப்பதற்காக அவன் தகப்பனார் உயரக் கையையும் ஓங்கிவிட்டார். அந்த அடி தன்மேல் விழாமல் காப்பாற்றிக்கொள்ள வாஸுவும் ஒரே தாண்டலில் குதித்து அப்புறம் போனான்.

இந்தச் சப்தத்தினால் எதிரில் கொய்யாமரக் கிளையின் மேல் உட்கார்ந்திருந்த கிளிகள், கால் விரல்களின் இடுக்கில் பிடித்திருந்த கொய்யாப் பழங்களை அப்படியே மூக்கினால் கொத்திக்கொண்டு ஆகாயத்தில் பறந்துபோய்விட்டன. போகும்பொழுது 'கீ, கீ' என்று கத்திக்கொண்டே அவைகள் சென்றன. தகப்பனார் தன்னை அடித்திருந்தால்கூட வாஸுவுக்கு அவ்வளவு துக்கமிராது; ஆனால் பக்ஷிகள் போய்விட்டனவே, இனிமேல் திரும்பியும் வராவிட்டால் என்ன செய்வது என்ற ஏக்கந்தான் அவன் மனத்தை வாட்டியது.

கிளிகள் சென்ற திக்கையே பார்த்தவண்ணம் சற்று நேரம் நின்றான் வாஸு. ஆனால் அப்பொழுது அவனுக்கு எதிரில் தோற்றம் அளித்தவர், அவனுக்கு வீட்டில் பாடம் சொல்லித் தரும் உபாத்தியாயர்தாம். வாஸுவின் முகத்தில் தேங்கி நின்ற துக்கத்தைத் தமக்கு அவன் அளிக்கும் வரவேற்பாகவே முதலில் அவர் நினைத்துக்கொண்டு, "என்ன, வாஸு! உடம்பு சரியாயில்லையா? மூஞ்சி வாட்டமாயிருக்கே! ஸ்கூல்லே 'ஹோம் வர்க்' கொடுத்திருக்காளோ? கணக்கு ஒண்ணும் நான் இல்லாமே வரமாட்டேனென்கிறதோ?" என்று பரிகாசமாய்ச் சொல்லிவிட்டு, அங்கிருந்த நாற்காலியை மேஜையண்டை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார்.

நின்ற இடத்தை விட்டு வாஸு நகரவில்லை. கணக்கு நோட்டுப் புத்தகம் மேஜையின்மேல் திறந்து கிடந்தது.

"ஏண்டா வாஸு! கொய்யாக் கிளையையே பாத்துண்டிருக்கே! கொய்யாக்கா திங்கணுமோ! சரிதான், ஜுரந்தான் வரும் உனக்கு! அப்பாகிட்டே சொல்லட்டுமா? மரியாதையாய் வறயா?" என்று உரக்கச் சொல்லிக்கொண்டே வாஸுவின் கையைப் பிடித்து வேகமாகத் தாம் இருந்த இடத்திற்கு அவனை இழுத்து வந்தார்.

"விடுங்கோ, ஸார், கையை!" என்று திமிறிக் கொண்டே வாஸு, "ஒங்களுக்கு எப்போதும் இதான் வேலை. நீங்க மாத்திரம் நான் பாத்த கிளிகளைப் பாத்திருந்தேள்னா அப்ப கேட்கணும் நீங்க சொல்றத்தே! வர்ணம் எல்லாம் எப்படி இருந்தது தெரியுமா, ஸார்! நல்ல கிளிப் பச்சை! ஆனா ஒண்ணுக்கு மட்டும் கழுத்தைச் சுத்திக் கறுப்பாய்க் கோடு இருந்தது. ஏன் ஸார், அதுக்கு மாத்திரம் அப்படி இருக்கு?" என்று கேட்டு, தனக்கு வந்த கோபத்தையும் மறந்து, வாஸு உபாத்தியாயரிடமிருந்து தன் கேள்விக்குப் பதிலை எதிர்பார்த்துக்கொண்டே அவருடைய முகத்தை நோக்கினான்.

"கிளியுமாச்சு, கோடுமாச்சு; எனக்கொண்ணும் தெரியாது! வா, வா, பாடத்தை வாசி. கணக்கு ஏதாவது போட்டேயா?" என்று அவர் அவனுக்குக் கணக்கைப் புகட்ட ஆரம்பித்தார். வாஸுவின் கவனம் சிறிதும் கணக்கில் செல்லவில்லை. மறுபடியும் மறுபடியும் பச்சைக் கிளிகளைப் பார்க்க வேண்டுமென்றுதான் அவன் கண்கள் தேடித் திரிந்தன.

தமக்கே கணக்குச் சரியாக வராததாலும், பையன் கவனத்தை எங்கேயோ வேறு விஷயத்தில் செலுத்தியதாலும், உபாத்தியாயருக்குக் கோபந்தான் மிஞ்சியது. தம் ஆத்திரத்தையெல்லாம் வாஸுவின் பேரில் காட்டிவிட்டார்.

"இந்தா: இன்னமே அந்தக் கிளியைப் பத்திப் பேசினையோ, அப்புறம் பூசைதான் கிடைக்கும். அப்பா

கிட்டே சொல்லி, உதை வாங்கி வைப்பேன். இனிமே ஜாக்கிரதை; நாழியாச்சு; பாடம் நாளைக்குத்தான்" என்று கூறிவிட்டு அவர் தம் கடனைத் தீர்த்துக்கொண்டார்.

இதற்குள் வாஸுவின் தாய் உள்ளே இருந்து, "வாஸு, வாஸு! வா, எண்ணெய் தேய்ச்சுக்கணும். ஸ்கூலுக்கு அப்புறம் நாழியாயிடும்" என்று அவனைக் கூப்பிட்டுக்கொண்டே முற்றத்தில் எண்ணெய் சீயக்காய் முதலியவைகளைக் கொண்டு வந்து வைத்தாள்.

"நாளைக்காகட்டும், அம்மா! இன்னிக்கு 'லேட்' டாயிடுத்து. ஸ்கூல்லே வாத்தியார் கோவிச்சுப்பார்" என்று வாஸு பதில் சொல்லிவிட்டு, கொய்யா மரத்தின் மேற்கிளையில் தெரிந்த இரண்டு இலைகளைப் பார்த்தான். அவைகள் கிளிகள்தாமோ என்ற பிரமையில், மறுபடியும் அவற்றை அண்ணாந்து பார்க்கத் தொடங்கினான்.

"இந்தப் பிள்ளையெப் பாரேன். அழும்பு பண்றதே! எண்ணெய்ன்னா இந்தப் பாடுதான் என்னிக்கும்!" என்று வைதுகொண்டே அவன் தாய் வாசலில் வந்து அவனை அப்படியே கரகரவென்று கைகளைச் சேர்த்துக் கட்டி இழுத்துச் சென்றாள். அவன் பார்வை கொய்யா மரத்தில் பதிந்திருந்ததைக் கண்டு அவள், கொய்யாக்காய்ப் பைத்தியம் அவனுக்கு உண்டாகி விட்டதென்றுதான் முதலில் நினைத்தாள். அவன் தலையில் இரண்டு கை எண்ணெய் வைத்துத் தேய்த்தாகி விட்டது. அப்பொழுது எங்கிருந்தோ 'கீ, கீ' என்று சப்தம் கேட்டது. அவ்வளவுதான்! வாஸுவின் உடம்பெல்லாம் ஒரு புதிய உணர்ச்சியினால் சிலிர்த்தது. அவன் அப்படியே தலைமயிரிலிருந்து எண்ணெய் சொட்ட, அண்ணாந்து பார்த்துக்கொண்டே நின்று விட்டான்.

மூன்று நான்கு கிளிகள் படபடவென்று இறக்கைகளை அடித்துக்கொண்டு கொய்யா மரத்தின் உச்சாணிக்

கிளையில் வந்து இறங்கின. வாஸுவின் ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

"அம்மா, இரையாதே!" என்று எச்சரிக்கை செய்துவிட்டு, அவன் ஓரமாக ஒளிந்துகொள்வதுபோல் நின்றுகொண்டு அவைகள் செய்யும் சேஷ்டைகளைக் கண்கொட்டாமல் கவனித்துக்கொண்டிருந்தான். முதலில் அவை ஒன்றின் பக்கத்தில் மற்றொன்று உட்காருவதும், திடீர் திடீரென்று கிளைக்குக் கிளை பறந்துபோய் உட்காருவதுமாக இருந்தன. பிறகு கொய்யாப் பழங்களைக் கொத்தித் தின்ன ஆரம்பித்தன. எங்கே காலையில் ஆனதுபோல் சப்தம் ஏதாவது கேட்டு அவை ஓடிவிடுமோ என்ற பயம் ஒரு பக்கமும், அவைகளுடைய உத்ஸாகத்தைக் கண்டு தானும் பறந்து போய் அவைகளுடன் கூடக் கிளையின்மேல் தாவ வேண்டுமென்ற புதியதோர் உணர்ச்சி மற்றொரு பக்கமுமாக வாஸுவின் இதயத்தைப் பகிர்ந்துகொண்டன.

"ஏண்டா, பிள்ளை, இப்படிக் கூத்தடிக்கறே?" என்று அவன் தாய் அடிக்கடி அவனிடம் சொன்னதையும் அவன் கவனிக்கவில்லை. "அம்மா, பாத்தயா, என்னமாயிருக்கு பட்டாட்டமா!" என்று கிளிகளைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தன் வாயில் கைவிரலை வைத்துத் தாயைப் பேச வேண்டாமென்று எச்சரித்தான்.

"ஆமாண்டாப்பா, கிளியோன்னோ! நன்னாயிருக்கு. அதுக்கென்ன? நீ அங்கேயே நின்னுக்கோ. நான் தலேலே சியக்காய் வைத்துச் சத்தம் செய்யாமே தேய்க்கறேன். தலேலே எண்ணெய் ஊறப்படாது. கண்ணோன்னோ! சமத்து, வாடா! நீ குளிச்சுட்டு வரவரைக்கும் கிளி அங்கேதான் இருக்கும்" என்றெல்லாம் நல்ல வார்த்தைகளை மெதுவாகச் சொல்லி அவனுக்கு ஒரு மாதிரி குளிப்பாட்டி வைத்தாள் அவன் தாய். தான் எண்ணெய் தேய்த்துக்கொண்டதாவது, ஜலம் விட்டுக்கொண்டதாவது, துடைத்துக்கொண்டதாவது

வாஸுவுக்கு ஒன்றுமே தெரியாது. அவன் அப்படியே கிளிகளின் உலகத்தில் இருந்தான். மடி வேஷ்டியை அவன் தாய் எடுத்துவந்து, எச்சரிக்கையின்றி ஞாபகமில்லாமல் உதறியதும், அந்தச் சப்தத்தில் கிளிகள் ஒன்ருகச் சேர்ந்து மேலே பறந்து சென்றன. வாஸுவுக்கு அப்போதுதான் தன் சுய ஞாபகம் வந்தது. அம்மாவின் பேரில் கோபங்கூட அவனுக்கு. இருந்தாலும் "சூ" என்று சொல்லிக்கொண்டே முற்றத்தை விட்டுத் தாழ்வாரத்தில் ஏறினன்.

## 2

ஒளித்தான பிறகு பள்ளிக்கூடத்தின் ஞாபகமே இல்லாமல், கணக்கு நோட்டுப் புத்தகத்தின் தாளின் மேல் இரண்டு கிளிகளை வரைந்தான் வாஸு. பச்சை வர்ணப் பென்ஸிலை எடுத்து அவைகளுக்கு வர்ணம் தீட்டினன். மூக்குக்குச் சிவப்பு வர்ணம் போட்டான். படம் எழுதிய உத்ஸாகத்தில் பக்கத்தகத்து அம்பிப் பயல் தன் அருகில் வந்து நின்றதையும் அவன் பார்க்கவில்லை.

"வாஸு, ஸ்கூலுக்கு வரலே? நாழியாச்சுடா" என்று அம்பி கத்தியதை அவன் காதுகள் அவனுக்குத் தெரிவிக்கவில்லை. அம்பி மாத்திரம் அவன் என்ன எழுதுகிருனென்று கவனித்துவிட்டு, "ரொம்ப நன்ருக்குடா? நீயாவா முழுக்கப் போட்டே! எனக்குடா!" என்று நோட்டுப் புத்தகத்தைக் கையால் பிடுங்கினன். வந்துவிட்டது வாஸுவுக்குக் கோபம்!

"டே, தொட்டேயான்ன தெரியுமா!" என்று பயமுறுத்தி, தலையை இப்படியும் அப்படியும் சாய்த்துக் கொண்டே படத்தின் அழகைப் பார்த்துவிட்டு, மேலும் அதை ஒழுங்கு பண்ணிக்கொண் டிருந்தான்.

பிறகு இரண்டு நிமிஷத்தில் சாப்பாட்டை முடித்து விட்டுப் புத்தகங்களையும் நோட்டுப் புத்தகங்களையும்

வாரி எடுத்துக்கொண்டு அம்பியுடன் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான். வழியில் தங்கள் வீட்டில் காலையில் தான் பார்த்த கிளிகளைப்பற்றியே அம்பியிடம் சொல்லிக்கொண்டு நடந்தான். தானும் பெருமை அடித்துக்கொள்ள வேண்டுமென்று அம்பிக்கும் ஆசை உண்டாயிற்று. அதனால் அவன், "நேத்திக்கு எங்காத்துலேகூட ஓட்டுமேலே கிளி வந்து உட்கார்ந்தது" என்று ஆரம்பித்தான்.

வாஸுவுக்கு அதை நம்ப முடியவில்லை. பரிகாசமாய் அவனும் அம்பியை, "எப்படி இருந்தது, சொல், பார்ப்போம்" என்று கேட்க, அம்பி, "அதாண்டா. இறக்கை நீளமாயிருந்தது" என்று சந்தேகத்துடன் பதில் உரைத்தான்.

"அது என்னமாக் கத்தித்து?" என்று மறுபடியும் வாஸு அம்பியைப் பரீக்ஷிக்க, அவன், " 'கூக்கூ' என்றுதான் கத்தித்து; எனக்கென்ன தெரியாதோ?" என்று சொல்லவும், வாஸு இடியிடியென்று சிரித்துவிட்டான். அம்பிக்கு அவமானமாக இருந்தது. வாஸு தன் வெற்றியை இவ்விதம் நிலை நாட்டிக் கொண்டான்.

பள்ளிக்கூடத்தில் அன்று ஒரே அமளி. பையன்கள் வாஸு எழுதிய கிளிப் படத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். வாஸுவும் படத்தைத் தன் கையில் வைத்துக்கொண்டே அவர்களுக்குக் காட்டினனே தவிர, அவர்கள் கையில் அதைக் கொடுக்க மறுத்துவிட்டான்.

வகுப்பு உபாத்தியாயர் வந்து நாற்காலியில் உட்கார்ந்தார். பையன்கள் அவரவர்கள் நோட்டுப் புத்தகங்களைக் கொண்டுபோய், தாங்கள் செய்து வந்த 'ஹோம் வர்க்'கை அவரிடம் காட்டினார்கள். அவரும், நீட்டிய புத்தகங்களில் கண்ட கணக்குகள்

சரியாகப் போடப்பட் டிருக்கின்றனவா என்று பார்வை யிட்டுவிட்டு, அவைகளுக்கு மார்க்குகளையும் கொடுத்துக்கொண்டு இருந்தார். வாஸு என்ன செய்வான், பாவம்! கணக்கு ஒன்றும் காலையில் வீட்டில் போடவில்லையே! அதற்குப் பதிலாக நோட்டுப் புத்தகத்தில் கிளிப்படமொன்றை எழுதியிருந்தான் அல்லவா? பயத்துடன் உபாத்தியாயரிடம் நிஜத்தைச் சொல்லிவிட்டான்.

அதற்கு அவர், "எங்கே உன் நோட்டுப் புத்தகம்? கொண்டு வா!" என்று கர்ஜித்தார். இன்னது செய்வதென்று அறியாமல் அதை அவரிடம் நீட்டினான். அவர் அதில் பச்சை வர்ணம் பூசிய இரண்டு கிளிகளைக் கண்டதும், இரண்டு தடவை ஏற இறங்க அதைப் பார்த்துவிட்டு, "இதான் 'ஹோம் வர்க்'கோ! நன்னாயிருக்கு!" என்று சொல்லி அவனைப் பார்த்து முறைத்தார்.

வாஸு கலவரத்தால், "இல்லே ஸார், நான் ........நான்......." என்று ஏதோ உளற ஆரம்பித்தான்.

"என்ன இல்லே......!" என்று அதட்டிக் கொண்டே அவர் அந்தப் படத்தை நோட்டுப் புத்தகத்திலிருந்து கிழித்து, அதை மறுபடியும் இரண்டு துண்டாகக் கிழித்து எறிந்தார்.

"ஸார், ஸார்" என்று கதறிக்கொண்டே வாஸு அவரிடம் பாய்ந்து கிழிந்த தாள்களைக் கைகளில் வாங்கிக்கொண்டான்.

படம் இரண்டு பாதியாகக் கிழிந்து கிடந்தது. வாஸுவின் கண்களில் கண்ணீர் பெருகியது. ஒன்றுமே சொல்லாமல் தன் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டு விம்மி விம்மி அழுதான். சில பையன்களுக்கு அதில் சந்தோஷங்கூட. ஆனால் சிலர் மாத்

திரம் அவனிடம் அநுதாபம் காட்டினார்கள். வாஸு சிறிது நேரம் அழுது பிறகு ஓய்ந்தான்.

## 3

சாயங்காலம் வீட்டிற்கு வந்ததும் வாஸுவின் முகத்தைப் பார்த்த அவன் தாய், "ஏண்டா அப்பா, கண் சிவந்து இருக்கு? குரலும் கம்மியிருக்கே. அழுதையா? அட இழவே! எண்ணெய் தேச்சுண்டு அழுதா ஜுரந்தான் வரும்" என்று அவனைத் தன் இரண்டு கைகளாலும் சேர்த்து அணைத்துக்கொண்டாள்.

வாஸுவுக்கு மறந்திருந்த துக்கமெல்லாம் மறுபடியும் பொத்துக்கொண்டு வெள்ளம்போல் கரை புரண்டோடியது. வார்த்தைகளே சிறிது நேரம் வாயில் வரவில்லை. அப்படியே கிழிந்த படத்தை அவளுக்குக் காட்டிவிட்டு, 'ஓ'வென்று அழுதுவிட்டான். முதலில் அவன் தாய்க்கு ஒன்றுமே ஏற்படவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் விஷயம் தெளிவு பட்டது.

"நீயா எழுதினே! யார் கிழிச்சுப் போட்டா? வாத்தியாரா? அவருக்கென்ன அவ்வளவு கொழுப்பு? அப்பா வரட்டும், அவரைக் கேக்கச் சொல்றேன். நீ அழாதேடா" என்று அவள் சொல்லி, பிள்ளை பேரில் தனக்கு இருந்த வாஞ்சையைக் காண்பித்தாள். வாஸுவுக்குத்தான் அப்பாவின் சமாசாரம் நன்றாகத் தெரியுமே! அதனால் அவன், "போ அம்மா, அப்பா தான் கார்த்தாலே கிளீன்னு நான் சொன்னத்துக்கே அடிக்க வந்தாளே!" என்று சொல்லி ஒருவாறு யோசனையில் ஆழ்ந்து, அழுகையை மறந்தான்.

அதற்குள் அவர்கள் வீட்டு மோட்டார் வண்டியின் சப்தம் காதில் கேட்டது. வண்டி வந்து வாச

யில் நிற்கவும், அவன் தகப்பனார் அதிலிருந்து மற்றொருவருடன் கீழே இறங்கினார். டிரைவரும் ஒரு ரோஜா மாலையை வண்டியிலிருந்து எடுத்து வந்து வாசலில் போட்டிருந்த நாற்காலியின் கையில் மாட்டிவிட்டுச் சென்றான். அப்பா அன்று எங்கேயோ பொதுக் கூட்டத்தில் பேசியிருக்கிறாரென்று பூமாலையிலிருந்து வாஸு ஊகித்தான். அவருடன் வண்டியில் வந்து இறங்கின பண்டிதரும் அவன் தகப்பனார் அருகில் நாற்காலியில் உட்கார்ந்தார். வண்டியில் வந்த சிரமத்தைப் போக்கிக்கொள்ள இருவருமாக வாசலிலேயே சிறிது நேரம் சம்பாஷணை செய்யத் தொடங்கினார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பார்த்து, "இன்று தாங்கள் பேசிய விஷயம் அபூர்வம்" என்று பண்டிதர் புகழ்ந்தார்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரும், "என்ன அப்படிச் சொல்லிவிட்டேள்! எல்லாம் தெரிந்த விஷயங்கள் தானே?'' என்று விநயமாகப் பதிலுரைத்தார்.

பண்டிதர் மேலும் விடாமல் சொன்னார்: "அப்படியா? இவ்வளவு நன்றா யார் சொல்லுகிறார்கள்! வால்மீகியைப் படித்துவிட்டு, அழகாகப் பேச வராமே எத்தனை பேர்கள் தவிக்கிறார்கள்! நீங்கள் இன்று எத்தனையோ சமாசாரங்கள் சொன்னீர்கள்! பக்ஷிகளைப்பற்றிக்கூட ஒரு தனி ஆராய்ச்சி அல்லவா செய்திருக்கிறீர்கள்?''

வாஸுவின் தகப்பனாருக்கு அதில் திருப்திதான். இருந்தாலும் அதை வெளிக்காட்டாமல், "பக்ஷிகளுக்கென்ன! வேண்டியமட்டும் நம்மைச் சுற்றி இங்கில்லையா? கவனித்தால் தெரியும். நாம் எங்கே அவைகளைப் பார்க்கிறோம்? நமக்குத்தான் சொந்த வேலை சரியாயிருக்கே! பார்த்தால் அல்லவா தெரியும், கவியின் வர்ணனை

எவ்வளவு சரியாக இருக்கிறதென்று! கிளிகளைப்பற்றி மாத்திரமே எவ்வளவு சொல்லியிருக்கிறது ராமாயணத்தில் தெரியுமா?" என்று சற்று நிமிர்ந்து உட்கார்ந்து, ஆவேசத்துடன் பேச ஆரம்பித்தார்.

பக்கத்து அறையில் பதுங்கி அதைக் கேட்டுக் கொண்டிருந்த வாஸுவுக்கு, 'ஏது, அப்பா கிளியைப் பற்றிப் பேசுகிறாரே!' என்று சந்தோஷம் ஒரு பக்கத்திலும், தன்னையும் மறந்து அவரிடம் ஒரு கேள்வி கேட்க வேண்டுமென்ற அவா மற்றொரு பக்கத்திலும் தூண்ட, வெளியே ஓடி வந்து, "ஏன் அப்பா, அப்படீன்னா நம்மாத்துலே கார்த்தாலே வந்ததே கிளி—அதைப்போல உள்ள கிளியைப்பற்றியும் சொல்லி இருக்கா ராமாயணத்துலே? சிலதுக்குக் கழுத்துலே கறுப்புக் கோடு இருந்ததுன்னுகூட இருக்கா அதுலே?" என்று வேகமாகக் கேட்டான்.

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குப் பதில் என்ன சொல்வதென்று புலப்படவில்லை. அவர், "போடா, அதிகப் பிரசங்கி! பெரியவா பேசச்சே உனக்கென்ன வேலை இங்கே?" என்று அவனை அதட்டினார்.

ஆனால் பண்டிதர் மாத்திரம் கம்பீரமான குரலில் அவனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "நல்ல துடிப் பயல்! ராமாயணத்தில் எல்லாம் இருக்கு. கவலைப் படாதே. கறுப்புக் கோடுள்ள கிளி மாத்திரமா? வெளுப்பு, சிவப்பு, இன்னும் எல்லாக் கோடுகளும் பச்சைக் கிளிகளுக்கு உண்டு என்று இருக்குடா!" என்று தட்டிக் கொடுத்துக் குஷால்படுத்தினார்.

அதைக் கேட்டவுடன் வாஸுவுக்குச் சந்தோஷமும் சந்தேகமும் ஒருங்கே மனத்தில் கிளம்பியதில் என்ன ஆச்சரியம்?

# குந்தளம்

## 1

ஐப்பசி மாதத்து அடை மழையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? 'சோ'வென்று இராப் பகலாகக் கொட்டிக்கொண்டிருந்தது. குந்தளம் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தாள். சாதாரணமாய் இடியோசையைக் கேட்டு நடுங்கும் அவள் இருதயம், அடிக்கடி பளீர் பளீரென்று தோன்றி மறையும் மின்னலையும், காதைத் துளைக்கும் இடியையும் அன்று சட்டை செய்யவில்லை என்றால் எவ்வளவு தன் ஞாபகத்தை அவள் துறந்திருக்க வேண்டுமென்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

விரல்களுக்கிடையில் பிடித்திருந்த பென்ஸிலை அடிக்கடி துடையின்பேரில் உருட்டிக்கொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள் குந்தளம். அவள் எழுதிய கதையும் அநேகமாக அவள் கருத்துக்களை எடுத்துக் காட்டியது. ஆனால் அதன் உட்கருத்து வாசிப்போர்க்குப் பளிச்சென்று தெரியும் விதம் முடிவடைய வேண்டுமென்றுதான் அவளும் யோசனை செய்து மண்டையை உடைத்துக்கொண்டிருந்தாள். அதிக துக்ககரமான கட்டத்தில் நிறுத்தினால் வாசிப்பவர்கள் ஒருகால் உள்ளடங்கிய விஷயத்தை மறந்து மனச் சலிப்படையலாம் அல்லவா? துக்க சம்பவங்களுடனேயே ஆரம்பித்த அக்கதையை கடைசியில் துக்ககரமாகவே முடிப்பதில் அவளுக்கு இஷ்டமில்லை. ஏன் சந்தோஷமாக முடிக்கக் கூடாது? ஆனால் எவருடைய மனத்தில் அக்கதை நன்றாகப் பதிய வேண்டுமோ அவர் அதன் உட்பொருளை நன்று உணராவிதம் அதை முடித்து விட்டால் அப்புறம் என்ன பிரயோஜனம்?

இம்மாதிரியான மனப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்ததில் வாசற் கதவை யாரோ தட்டுவதைக்கூட அவள் உணரவில்லை. அதனுடன் மழையும் காதைச் செவிடாக்கியதல்லவா?

"குந்தளம்! குந்தளம்!" என்று குரலொன்று இரைந்து கூப்பிட்டது அவள் காதுகளில் முதலில் விழவே இல்லை.

அநேக முறை அந்தச் சப்தம் கேட்ட பிறகே அவளுக்குத் தன் கணவன் ஆபீசிலிருந்து வரும் நேரமாகிவிட்டது ஞாபகத்திற்கு வந்தது. சட்டென்று எழுந்தவள் அப்படியே அவசரத்தில் மேஜையின்மீது காகிதத் துண்டுகளையும் அவற்றின்மேல் பென்ஸிலையும் வைத்துவிட்டு, வாசற்கதவை வந்து திறந்தாள். கதவு திறந்ததும் கழுத்திலிருந்து கால் வரையிலும் மூடிய 'வாட்டர் புரூப்' கோட்டைப் போட்டுக்கொண்டு நிற்கும் தன் கணவனைக் கண்டாள்.

"இருட்டிவிட்டதே! விளக்கைக் கூடப் போடாமல் என்ன செய்கிறாய்? நானும் எவ்வளவு தரம் கத்துகிறது?'' என்று மஹாதேவன் கோபத்துடன் கேட்டுக்கொண்டே வந்தான். என்ன பதில் சொல்வது என்று யோசித்துக்கொண் டிருந்தபோதுதான் குந்தளம் மஹாதேவனுடைய சட்டையின்மேல் எங்கே பார்த்தாலும் சேறும் தண்ணீருமாயிருப்பதைக் கவனித்தாள்.

"என்ன இது? மோட்டார் பஸ்ஸிலிருந்து சறுக்கி விழுந்தீர்களா? காயமொன்றுமில்லையே?" என்று கவலையுடன் அவனைப் பார்த்துக் கேட்டாள்.

''காயம் வேறு வேண்டுமா! அட அப்பா! உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொண்டதிலிருந்து இன்னும் எத்தனை மானக் குறைவுதான் எனக்கு உண்டாக வேண்டுமோ, தெரியவில்லை" என்று தன்னையும் அவளையும் வெறுத்துப் பதிலளித்தான் மஹாதேவன்.

## 2

குந்தளம் பட்டணத்தில் ஒரு பெரிய வக்கீலின் பெண். அவளுக்குக் கல்யாணமாகி இப்பொழுது பத்துப் பதினைந்து வருஷங்களாகி யிருக்கலாம். ஒரே பந்தலில் அவளுக்கும் அவளுடைய தங்கை அலமுவிற்கும் கல்யாணம் நடந்ததைப்பற்றி எல்லோருக்கும் தெரியும். அலமுவின் கணவன் சீமையில் உயர்ந்த டாக்டர் பரீக்ஷைகளில் தேர்ச்சி பெற்றுச் சமீபத்தில்தான் சர்க்கார் உத்தியோகத்தில் ஜில்லா வைத்திய ஆபீஸராக அமர்ந்தான். மஹாதேவன் துரதிருஷ்டத்தால் ஒரு வேலையிலும் அதிக நாள் தங்க முடியவில்லை. வீட்டில் பெண்டாட்டியை ஸதா ஸர்வ காலமும் வதைத்துக் கொண்டிருக்கும் சுபாவமுடையவனாக ஆய்விட்டான். கல்யாண காலத்தில் அவனுடைய களையான முகத் தோற்றத்தைப் பார்த்த குந்தளத்தின் தகப்பனார் நல்ல புத்திசாலியா யிருப்பானென்ற நம்பிக்கையில் வேறு ஒன்றையும் கவனியாமல் பெண்ணை மஹாதேவனுக்கே தாரை வார்த்துக் கொடுத்தார். அதிசீக்கிரத்தில் தாயை இழந்ததால் குந்தளத்திற்குத் தகப்பனாரிடத்தில் பரம பக்தி ஏற்பட்டிருந்தது. அவரும் மற்றக் குழந்தைகளிடம் காட்டியதைவிட அவள் மேல் அதிகமாகவே அன்பு வைத்திருந்தார். தம் பெண்ணுக்கு வேண்டிய சொத்தைக் கொடுத்துவிட்டால் போகிறது, கணவன் ஏழையாயிருந்தால் என்ன, என்பது அவருடைய யோசனை. பெண்டாட்டி பணக்காரி என்ற எண்ணமே புருஷனை அநாவசியமாய் அவள்பால் துவேஷம்கொள்ளச் செய்யுமென்பது அந்தப் பெரிய வக்கீலுக்குத் தோன்றவில்லை. நாளடைவில் அவருடைய மனத்தில் சந்தோஷம் குறைந்து கொண்டுதான் வந்தது. தம் வீட்டிலேயே மாப்பிள்ளையை வைத்துக்கொண் டிருந்ததில் அவனுக்குத் தன் பேரிலுள்ள நல்லபிப்பிராயம் குறைந்து வருவதை அவர் அறிந்து என்ன செய்ய முடியும்? பெண்ணைத் தம் ஆயுட்

கால பரியந்தமாவது சமீபத்தில் இருக்கச் செய்யலா மென்றுதான் அவரும் சும்மா இருந்தார். பெண் படித்த வளென்று இருந்தோமே, இப்படியா அவள் அதிருஷ்டம் இருக்க வேண்டுமென்று, சில சமயங்களில் எண்ணி உருகுவார். மனைவியின்மேல் அபிமானம் ஏற்படுவதற்குப் பதிலாக அவளைக் கண்டு நாளுக்கு நாள் பொறாமையும் அவநம்பிக்கையுமே மஹாதேவனுடைய மனத்தில் குடிகொண்டன. அவளுடைய நடத்தையில் எப்பொழுதும் பண கர்வத்தின் அறிகுறிகளையே அவன் கண்டதாக நினைக்கலானான்.

மஹாதேவனுடன் பழகினதில் குந்தளம் உலகத்தில் பணம் இல்லாக் குறையால் உண்டாகும் தீவினைகளை நன்குணர்ந்தாள்.

"பொன்போல் விளங்குமனம்
சஞ்சலத்தால் குரங்காம்"

என்ற முதுமொழிக்கு ஒப்ப ஏன் சரியான மனத்தை இவ்விதம் தானாகவே கெடுத்துக்கொள்ள வேண்டும் என்றுகூடக் கணவனை நினைத்துத் தனியாக மனம் கசிவாள்.

குந்தளத்தின் நிலைமையை நன்குணர்ந்து தம்மாலான மட்டும் அவளை நன்றாகக் கவனித்துவந்த அவள் தகப்பனாரும் காலமானார். தனிக் குடித்தனம் செய்ய நேர்ந்த தினத்திலிருந்து வேறொருவரும் தன்னிடம் அநுதாபம் காட்டுவாரில்லாமல் குந்தளம் தத்தளித்தாள். அவளுக்கு மூத்த சகோதரன் ஒருவன் உண்டு. பிறவிச் செல்வமும் செல்வாக்கும் அவனைப் பிறரிடம் அநுதாபமற்றவனாகச் செய்தன. தன் மனத்தைச் சோதித்துப் பார்த்துக்கொள்ளும் கெட்ட வழக்கம் அவனிடம் இல்லை. ஒரு ஹிந்து குடும்பத்தில் ஒருவரோடு ஒருவர் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகப் பழகாமல் இருக்கிறார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு சௌகரியமாகவே வாழலாம் என்பது அவன் முடிவு. ஆகை

யினால் அவன் தன் சகோதரியின் கஷ்டங்களில் தலையிடுவதே இல்லை. அவளை அதிகமாகப் பார்ப்பதும் இல்லை; பார்த்தாலும் சாதாரணமாகப் பேசுவதுகூட இல்லையென்றே சொல்லலாம். ஒரு சமயம் யாராவது அவன் அப்படி நடந்துகொள்வது அவ்வளவு சரியல்ல என்று அபிப்பிராயப்பட்டாலும், தான் காரணத்துட னேயே அவ்விதம் நடப்பதாகவும், நீடித்த காலத்தில் தன் கொள்கைகளே எல்லாருடைய க்ஷேமத்திற்கும் உதவி யாக இருக்குமென்றும் அவன் எடுத்துக் காட்டுவான்.

தன் மனத்தில் தோன்றும் குயுக்தி எண்ணங்களை அடக்க வகையற்று மஹாதேவனும் வர வரத் தன்னைக் குரங்காக அடித்துக்கொண்டான். யாரிடத்திலும் பழ கத் தெரியாமலே நடந்துவந்தான். வேலை ஒன்றும் சரி யாகச் செய்வதில்லை. ஆபீசிலோ மனஸ்தாபமும் சண் டையுமே மேலிட்டன. நிச்சயம் வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டுத்தான் வரப் போகிறானென்று குந்தளம் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அவனுக்கு எவ்விதமாவது தன்மேல் இருக்கும் தப் பெண்ணம் குறைய வேண்டுமென்பதுதான் அவளு டைய ஆசை. எப்படியாவது தான் செய்வது பிசகு என்று அவன் மனத்தில் கொஞ்சமாவது தோன்றச் செய்ய வேண்டுமென்று அடிக்கடி முயன்று வந்தாள். அவன் புத்தி மாறினால் நல்ல காலம் தனக்குக் கிட்டு மென்றும் நம்பினாள். அதற்காகவே அநேக உபாயங் களினால் அவனை நல்வழிக்குக் கொண்டு வர எத்தனித் தாள். "எதுக்கு வேலையும் வெட்டியும்? ஏதோ எங் கப்பா பணம் வைத்திருக்கிறார், சுகமாய்ச் செலவு செய்து காலத்தைப் போக்கினால் போகிறது" என்று எப்பொழுதாவது அவள் வாய்விட்டு அவன் வேலைக் காக வீட்டில் சிரமப்படுவதைச் சகியாமல் சொல்லி விட்டாளோ, அவ்வளவுதான், குடி கெட்டுவிடும். "போதும் போதும்! அந்த வெட்கக்கேடு வேறேயா நமக்கு? ஏற்கனவே உங்கப்பா தர்மத்தில்தான் நான்

பிழைக்கிறேனென்று ஊரெல்லாம் சொல்கிறது போதா தோ? இது வேறே வேண்டுமா?'' என்று அவள் பேரில் எரிந்து விழுந்து அமர்க்களப்படுத்துவான். எத்தனை காலம் இந்த மாதிரி ஜன்மத்தை மனத் தவிப்பிலேயே செலவழிப்பது? "ஹே, ஈச்வரா! எனக்கு விடுதலையே இல்லையா?'' என்றுகூடக் குந்தளம் மனத்திற்குள் பிரார்த்தித்துக்கொள்வாள்.

தமிழில் நல்ல ஞானம் இருந்ததாலும், காவியச் சுவையை நன்கு உணர்ந்தவளானதாலும் அவள் பத்திரிகைகளுக்கு அடிக்கடி கட்டுரைகள் எழுதி அனுப்புவது வழக்கம். எழுத்து வேலையில் ஈடுபட்டிருப்பதில் அவள் மனம் ஒருவாறு நிம்மதியடையும். அவளுடைய கணவனுக்கு இதில் அவளிடம் மிகுந்த பொறுமையே. ஆனால் அவன் அறியாவண்ணமும் புனைபெயருடன் அவள் சில சமயங்களில் கட்டுரைகளை எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பி வந்திருக்கிறாள். 'எத்தனையோ பத்திரிகைகளுக்குக் கதைகள் தேவையாயிருக்கின்றன. ஏன், நம்முடைய வாழ்க்கையின் விசித்திரங்களையும் அநுபவங்களையும் வைத்து ஒரு சிறு கதையை எழுதலாகாது? ஒருகால் அச்சில் பார்த்தால் சிலருக்குப் பிறரிடம் நேரில் கண்டபோது தோன்றாத அநுதாபம் வாசித்தபிறகாவது ஏற்படும்' என்று எண்ணித்தான் இன்று அவள் ஒரு கதையை எழுதிக்கொண்டிருந்தாள்.

கதை என்னவோ நன்றாக அமைந்திருப்பதாக அவள் நினைத்து மனக் கோட்டை கட்டிக்கொண்டிருந்தாள். தன் கணவன் அதைக் கவனித்துப் பார்த்தாலும் தான் எழுதியதென்று தெரியாதவண்ணம் அமைக்க வேண்டுமென்று யோசித்தாள். அதை வாசித்துப் பார்த்து அதன் உட்கருத்தை அவன் உணர்ந்தால் அதிலிருந்து தன் மனத்தைக்கூட நன்றாய் அறிய நேரிடலாம். அவ்விதம் செய்தால் அவனுக்குத்

தன் சொந்தக் குறைகள் விளங்கும். கேவலம் காரண மற்ற அருவருப்பினாலும், அந்தஸ்து வித்தியாசத்தில் கல்யாணம் செய்து கொண்டதாலும் மனைவியைத் தெரிந்துகொள்ளாததை உணர்வான். கதைக்கு, "பணம் செய்யும் விரோதம்" என்று பெயர் போட்டிருந்தாள். ஒரு பணக்காரனுடைய மகள் மாமியாரின் கொடுமைக்கு ஆளாகிப் புருஷனுடைய உதவியும் இல்லாமல் தவிப் பதை அவள் விவரித்திருந்தாள். கதைக்கு வேண்டிய சம்பவங்களையெல்லாம் நேர்த்தியாகவே தயாரித்திருந் தாள். தாத்பர்யம் கவனித்தால் இதுதான்: 'குடும்பங் களில் பல மனவேற்றுமைகளுக்கும் சந்தோஷக் குறைவு களுக்கும் காரணம், பிறரிடம் காரணமில்லாமல் வேற் றுமை கொள்வதுதான். அதன் மூலம் நல்லவர்கள் பல பேர் கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். நாம் ஒவ்வொரு வரும் பிறரிடம் துவேஷம் கொள்ளுமுன் அதற்குள்ள காரணத்தை நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்தக் கருத்தை எப்படி நன்றாக மனத்தில் பதியச் செய்வது என்று குந்தளம் யோசித்துக்கொண் டிருந்த போதுதான் மஹாதேவன் கதவைத் தட்டிக் குந்தளத் தைக் கற்பனையுலகை விட்டு எழுந்திருக்கச் செய்தான்.

அவனுடைய கோபமும் களைப்பும் நிறைந்த பேச்சி லிருந்து அன்றைத்தினம் வரும் வழியிலேயோ அல்லது ஆபீஸிலேயோ ஏதாவது அவனுக்குத் தொந்தரவு நேர்ந் திருக்க வேண்டுமென்று குந்தளம் ஊகித்தாள். ஆனால் வழக்கத்தைவிட வசை மொழிகள் மிகுதியென்றே அவளுக்குப் புலப்பட்டது. எதற்கும் மனத்தை அமைதிப்படுத்திக்கொள்ளக் கெஞ்சுவது போல் கண் களால் ஒரு முறை அவனைப் பார்த்தாள். ஆனால் அவளைப் பார்க்காமலே அவன் ஏதோ முணுமுணுத் ததை அப்பொழுதுதான் கவனித்தாள்.

"அப்பா! பணம் இன்னதுதான் செய்யுமென்று கிடையாது போலிருக்கு. நல்ல வேளை! எங்கப்பா

எனக்கு எதையாவது பாங்கியில் வைத்துவிட்டு என்னைக் கழுதையாக்காமல் போனாரே! கொஞ்சம் மாத்திரம் புத்திசாலிகளா யிருந்தால் இந்தப் பயல்களெல்லாம் பெரிய பெரிய மோட்டாரிலே போவார்களா? அதிலே இருக்கிற ஒரு ஆணி கழன்றால் இவன்களுக்குத் திருப்பிச் செய்ய யோக்கியதை இல்லை. என்ன ஜம்பம் பின்னே அதுலே ஏறிக்கொண்டு போகிறதிலே? முட்டாள்கள்! சுயராஜ்யமாம்! எதுக்கோ தெரியவில்லை. மோட்டாரிலே மாத்திரம் உட்கார்ந்து போய்விட்டால் போதுமோ? இவன்களுக்கெல்லாம் ஒரு காலம் வரும். ரொம்ப நாளாகாது. எல்லாருக்கும் ஒரே மட்டை அடிதான். இவன்கள் பணமெல்லாம் பறக்கணும்.''

குந்தளத்திற்கு இந்த வார்த்தைகளிலிருந்து ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் இவ்வளவு எரிச்சலுக்கும் காரணம் வழியில் ஏதோ விபத்து நடந்திருக்கவேண்டுமென்று தீர்மானித்து, "வண்டியிலிருந்து கீழே விழுந்துவிட்டீர்களா?'' என்று கேட்டாள்.

"நான் என்ன, கீழே விழுகிறதற்குக் கைக்குழந்தையா? என்னெல்லாம் கேள்வி? எனக்கு வண்டி வைத்துக்கொள்ளச் சக்தி இல்லாவிட்டாலும், பஸ்ஸிலேகூடப் போகத் தெரியாதா என்ன? அப்படி ஒன்றும் எனக்குத் தலைக் கிறுக்கல் வந்துவிடவில்லை'' என்று ஆத்திரத்துடன் பதில் சொன்னான்.

குந்தளம், "பின்னே, வண்டி ஏதாவது இடித்துவிட்டதா?'' என்று மறுபடியும் விடாமல் கேட்டாள்.

"சீ! என் வாயைப் பிடுங்குகிறாயா? போ, போ! உன் வேலையைப் பார்'' என்று சீறி விழுந்தான்.

பேச்சை மாற்றி அவனுடைய மனத்தைச் சாந்தப்படுத்த எத்தனித்துக் குந்தளம், "ஏன் இவ்வளவு நாழிகை? எங்கண்ணாவை இன்று பார்த்தீர்களா? அவனிடமிருந்து கடிதம் வாங்கிக்கொண்டு போய்

பாங்கி செகிரிடெரியைப் பார்க்க வேண்டுமென்றீர்களே, பார்த்தாகிவிட்டதா?” என்றாள்.

கழற்றிய சட்டையின் மேல் தெறித்திருந்த சேற்றுத் தண்ணீரைப் பார்த்துக்கொண்டிருந்த மஹாதேவன் இந்தக் கேள்வி காதில் விழவும், “என்ன! உங் கண்ணாவா? அவன்தான் ஏதோ பெரிய ஜமீன்தார் என்றல்லவா நினைத்துக்கொண்டிருக்கிறான்! வேறே அவமானமில்லாமல் வந்தேனே! கொஞ்சம் மாத்திரம் ஜாக்கிரதையாயிருந்தால் சேற்றிலேகூட விழுந்திருக்க வேண்டாம். நம்ம துரதிருஷ்டம்” என்று கோபமாய்ச் சொன்னான்.

எவ்வளவுதான் அவ்விஷயத்தைப் பற்றியே பேச வேண்டாமென்று தோன்றியபோதிலும் என்ன நடந்ததென்று அறிய விரும்பிக் குந்தளம், “உங்களை அவமானப்படுத்தினானா எங்கண்ணா!” என்று வருத்தமாகச் சொன்னாள்.

“அடேயப்பா! என்ன அநுதாபம் என்னிடத்தில்! இதுவரைக்கும் பார்த்ததில்லையே இந்த மாதிரி! பிறந்தகத்துக் கௌரவத்திலே உனக்கு இருக்கிற கர்வம் எனக்கென்ன தெரியாதா? எதற்கு என் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறாய்? பாம்புப் புற்றிலே மாட்டிக் கொண்டுவிட்டேனே; என் கதியைச் சொல்லு” என்று பெருமூச்சு விட்டான்.

குந்தளத்தால் அவனுடைய பாணங்கள் போன்ற மொழிகளைத் தாங்க முடியவில்லை. அவள் கண்கள் கலங்கின. முகத்தை அப்புறம் திருப்பிக்கொண்டே யோசித்தாள். அவளுடைய கஷ்டத்தைப் பார்த்துக் கொஞ்சம் மனச் சந்தோஷத்தை அடைந்த மஹாதேவன் விடாமல் சொல்லலானான்:

“அண்ணாவாம்! எவ்வளவு மரியாதை தெரிந்தவன்! மோட்டாரிலே பக்கத்திலே உட்கார இடம்

கொடுத்தால் இவன் ஏழையாய்விடுவானோ? இவன் தான் எனக்குக் கிட்டின பந்துவாம்! மச்சினனாம்! அப்படியே காறி மூஞ்சியிலே உமிழ்ந்திருக்கணும். அதுக்குள்ளேதான் நமக்கே ஆபத்து வந்துவிட்டதே! அவன் என்றைக்காவது என் விஷயத்திலே சரியா நடந்திருந்தாலல்லவா, நான் நமக்காக அவன் வண்டியை நிறுத்தினானென்று நினைத்துக் கொள்கிறதற்கு? நம்ம முட்டாள்தனம் அப்படி எண்ணி, எல்லாரும் சிரிக்கக் கீழே விழுந்தாச்சு. என்ன அலசிட்யம்? பார்க்காதது போலே போனானே! இவனோடேதான் இவன் காரும் போகப் போறதாக்கும்!" என்று இடைவிடாமல் சரமாரியாகப் பொழிந்தான்.

பாவம்! மஹாதேவன், ஒரு மோட்டார் பஸ்ஸில் ஏற எண்ணியவன், மைத்துனன் கார் சமீபத்தில் வந்து நிற்பதைப் பார்த்ததும் தனக்காகத்தான் அது நிற்கிறதென்று எண்ணி, பஸ்ஸில் வைத்த காலைச் சட்டென்று எடுத்துக் கீழே இறங்கினான். இதற்குள் மோட்டார் டிரைவர் 'ஸ்கிரீன்'களை மழைக்காக மாட்டியவன், கவனியாமல் மேலே வண்டியை ஓட்டி விட்டான். அப்பொழுது பின்னால் வந்துகொண்டிருந்த மற்றொரு மோட்டார் பஸ்ஸினுடைய 'மட் காடு' அவனைச் சேற்றில் தள்ளிவிட்டது. நல்ல வேளையாய்க் காயமொன்றும் இல்லாமல் பிழைத்தோமென்று சேற்றுடன் எழுந்து வேறு ஒரு வண்டியில் வீடு திரும்பினான். இந்த விஷயங்களைக் குந்தளம் ஒருவாறு புரிந்து கொண்டாளானாலும் அவனுடைய மனத்தில் கொதித்துக்கொண்டிருக்கும் எண்ணங்களைக் குறைக்க வகை அறியாமல் நின்றாள்.

அன்று சாயங்தரந்தான் மஹாதேவனுக்கும் அவன் மேலதிகாரிக்கும் வெகு நாளாகக் குமுறிக்கொண்டிருந்த விரோதம் வாய் வார்த்தையில் முற்றிற்று. வேலையை விட்டுப் போகும்படி அதிகாரி உத்தரவிட்டு

விட்டார். மஹாதேவனுக்குத் தான் ஒரு தப்பும் செய்த தாகவே தோன்றவில்லை. அவன் மனச்சோர்வடைந் திருந்தான். குந்தளம் அவனை மறுபடியும் மறுபடியும் சாந்தப்படுத்திக்கொள்ள வேண்டுவதுபோல் கண் களால் பார்த்தாள். அவளுடைய பார்வையினால் எங்கே தன் மனம் சாந்தமாகி விடுமோ என்றுகூட மஹா தேவனுக்குக் கவலை. எதுவாயிருந்தாலும் இன்றைக்கு இவளுக்கு நம் சமாசாரத்தை முழுவதும் சொல்வ தில்லை என்று தீர்மானித்து, அவளை அங்கிருந்து விரட்டும் உத்தேசத்துடன், "தலையை உடைக்கிறது. காபி கீபி ஒன்றும் இந்த வீட்டிலே கிடையாதா? எபபோதும் பிடுங்கல்தானா?" என்று அவள்மீது குற்றத்தைச் சுமத்திக் கத்தினான்.

குந்தளத்திற்கு வழக்கமாய்ச் செய்யும் காரியங் கள் ஒவ்வொன்றாக மெதுவாகத்தான் ஞாபகத்திற்கு வந்தன. கதையில் முழுகிய இவளுக்கு இதிலெல்லாம் எப்படி ஞாபகம் இருந்திருக்கும்? வீட்டிலோ வேலைக் காரி வைத்துக்கொள்ளக் கூடாது என்பது கணவன் கட்டளை. அவள் ஒன்றும் படித்துப் புரட்ட வேண்டாம் என்பது அவனுடைய தீர்மானம். "இதோ காபி கொண்டு வருகிறேன்" என்று உள்ளே சென்றாள்.

## 3

அடுப்பைப் பார்த்தாள். அதில் நெருப்பைக் காணவில்லை. கெட்டிலில் ஜலம் ஜில்லென்றிருந்தது. கட்டை மழையில் நனைந்து எரிய மாட்டேனென் றது. என்ன செய்வாள்? மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சிரமப்பட்டு அடுப்பில் கட்டைகளை வைத்து நெருப்பை மூட்டினாள். ஒருவாறு புகையின் நடுவில் அக்கினியின் ஜ்வாலையும் கிளம்பத் தொடங்கிற்று. ஆனால் வெந்நீர் காயக் கொஞ்சம் தாமதம் ஆவது நிச்சயம். இதைச் சொல்வதற்குப் பயமாயிருந்தது.

எங்கே இதைச் சாக்கிட்டு மறுபடியும் மஹாதேவன் கோபிப்பானோ என்றுதான் அவள் தவித்தாள்.

மஹாதேவன் சட்டையைக் கழற்றினான். அப்போது மழையும் ஓய்ந்து, மெதுவாக மரங்களி லிருந்தும் கூரையிலிருந்தும் ஜலம் சொட்டும் சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது. குளிர்ந்த காற்று மெது வாக ஜன்னல் வழியாகவும் அடிக்க ஆரம்பித்தது. ஒவ்வொன்றாகக் குந்தளம் வைத்துப்போன காகிதத் துண்டுகள் காற்றில் அடிபட்டுக் கீழே விழுந்தன. மஹா தேவனும் அவற்றைப் பார்த்துச் சந்தேகத்துடன் கையிலெடுத்து எல்லாவற்றையும் பக்க வாரியாகச் சேர்த்துப் பார்த்தான். "ஓஹோ! ஏதோ கதை ராய ஸம்போலேயிருக்கு! மத்தியானமெல்லாம் இது தான் வேலை. அதனால்தான் காபி அடுப்பிலே பூனை படுத்திருந்தது'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு அந்தப் பக்கங்களை வாசிக்க ஆரம்பித்தான். கதையின் தலைப்பே அவனைக் கவனிக்கத் தூண்டியது. கதையை மேலெழுந்தவாரியாகப் படித்துக்கொண்டு போனான். இன்னும் காபி வரவில்லை. மறுபடியும் வாசித்த பக்கங்களைத் தள்ளிக்கொண்டே போனான். கதை முடியாவிட்டாலும் எப்படி முடியுமென்று அவன் ஊகித்தான். தன்னை அறியாமலே அவனுக்குக் கோபமும் அவமானமும் பொங்கி எழுந்தன. தன் னைத் தவிர வேறொன்றும் கதைக்கு விஷயமாக அகப் படவில்லையா என்று சினந்துகொண்டான். 'ஆம், நம்மைப் பார்த்து இவள் ஏளனம் அல்லவா செய் கிறாள்?' என்று எண்ணினான். வந்துவிட்டது அவ னுக்கு, அகங்காரம். அவ்வளவுதான், பென்ஸிலை எடுத்துக் கதை நின்ற இடத்தில் ஏதோ எழுதினான். பிறகு, அவ்விடம் விட்டு உடனே எங்கேயாவது தான் செல்ல வேண்டுமென்று ஒரு புதிய எண்ணம் மனத் தில் தோன்றியது. எழுந்தவன் சட்டையை மாட்டிக் கொண்டான். சட்டைப் பையில் ஒரு மணி பர்ஸை

யும் போட்டுக்கொண்டு சந்தடியின்றிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்றான்.

காபியை எவ்வளவு சீக்கிரமாகக் கொண்டுவர வேண்டுமென்ற பரபரப்புடன் உள்ளே சென்றாளோ, அதற்கு விரோதமாகவே வெகுநேரம் கழித்துக் குந்தளம் அதைத் தயாரித்தாள். எங்கே காபி நன்றாக இல்லா விட்டால் தன்னை இகழ்ந்து பேசுவாரோ கணவன் என்ற பயமே அதற்குக் காரணம். கணவனுடைய அறைக்கு வந்தவள், அங்கு அவன் இல்லாததால் படுக்கை யறைக் குச் சென்று பார்த்தாள். அங்கும் காணவில்லை. ஒரு வேளை வாசலில் இருப்பாரோ; கதவு திறந்திருக்கிறதே என்று அங்கும் பார்த்தாள். ஓரிடத்திலும் மஹா தேவனைக் காண முடியவில்லை. மறுபடியும் உள்ளே வந்து பார்த்தாள். சாமான்கள் போட்டது போட்ட படியே கிடந்தன. நாற்காலியின் கைகள்மேல் கழற்றி எறிந்த சட்டை இருந்தது. 'கோட்டு ஸ்டாண் டி'ல், நனைந்த 'வாட்டர் புரூப் கோட்' தொங்கியது. மூலையில் குடை பிரித்தது அப்படியே வைத்திருந்தது. ஒரு பக்கம் செருப்புகளும் கிடந்தன. எங்கே போயிருக்கலாம் என்று யோசித்து ஜன்னலைப் பார்த் தாள். அங்கே காகிதத் தாள்களைக் காணவும் ஒரு வேளை அவற்றைப் படித்துப் பார்த்துவிட்டாரோ என்ற கவலை மேலிட்டவளாய் அணுகினாள். காகி தங்களின் மேல் ஒரு பாரம் வைத்திருப்பதைக் காண வும் சந்தேகம் முற்றியது. தான் எழுதி நிறுத்திய இடத்தில் புதிய கையெழுத்தில் ஏதோ வரைந்திருப் பதைப் பார்த்ததும் வயிற்றில் பகீரென்றது அவளுக்கு. சட்டென்று எழுந்து அதை வாசித்தாள். பின்வருமாறு எழுதியிருந்தது:

"ஆம், வாஸ்தவமே. சம அந்தஸ்தில்லாத இருவர் எதற்காக வாழ்க்கையைச் சேர்ந்து நடத்த வேண்டும்? கணவனைச் சீர்திருத்தப் பெண்டாட்டி பாடுபடுவதைவிட,

அவளாகவே வெளிச் சென்று அந்தச் சிரமத்தை அவளுக்குக் கொடுக்காமல் தன்னைச் சீர்படுத்திக்கொள்வது உத்தமம்.''

இதைப் படித்துப் பிரமை பிடித்தவள் போல் நின்றாள் குந்தளம். கொஞ்சங் கொஞ்சமாக அந்த வாக்கியங்களின் அர்த்தம் அவளுக்குப் புலப்பட்டது. வெளியில் சென்று பார்த்தாள். ஒரே கும்மிருட்டாக இருந்தது. அவளுடைய மனத்திலும் இருட்டுச் சூழ்ந்துகொண்டது. "ஐயோ! என் கதையின் முடிவு இதுதானா?'' என்று கத்திக்கொண்டு கீழே விழுந்தாள். காற்றில் வெளிக் கதவு படாரென்று அடித்துக்கொண்டது. நிச்சப்தம் எங்கும் நிலவியது.

## 4

மேற்சொன்ன சம்பவங்கள் நடந்து அநேக நாட்கள் கழிந்தன. மாதங்களும் வருஷங்களுங் கூட வந்து சென்றன. மஹாதேவனைப்பற்றி ஒரு விஷயமும் குந்தளத்துக்குத் தெரிய வரவில்லை. பத்திரிகைகளில் அவனுடைய அங்க அடையாளங்களைத் தெரிவித்திருந்தும் பயனில்லை. மரியாதைக்காக அவளுடைய அண்ணா அவளைத் தன்னுடன் வந்து இருக்கச் சொல்லியும் அவள் அதற்கு இணங்காமல், தன் தங்கை இருக்குமிடம் போய்ச் சேர்ந்தாள். அவள் தங்கையின் புருஷன் அப்பொழுது மதுரையில் பெரிய ஐ. எம். எஸ் உத்தியோகஸ்தராக இருந்தான். ஆகையால் அங்கே போய் அவர்களுடன் வசித்து வந்தாள். குந்தளத்தைச் சிறு வயசில் பார்த்தவர்கள் அவளை அழகென்றே சொல்லுவார்கள். இப்பொழுதோ அவளுடைய கூந்தல்களில் நரை தோன்றி அவளை விகாரமாக்கின. அவளுடைய கம்பீரமான நெற்றியிலும் கோடுகள் அதிகமாகவே காணப்பட்டன. பூஜையும் ஜபமுந்தான் அவளுக்குச் சதா பொழுதுபோக்கு.

படிப்பதை நிறுத்திவிட்டாள். பேனாவைத் தொட்டு ஒரு கடிதங்கூட எழுதுவதில்லை.

தன் அசட்டு நம்பிக்கையினால் புருஷனை இழந்ததாகவே அவள் தன்னை நிந்தித்துக்கொண்டாள். அடிக்கடி அநேக நாட்கள் பட்டினி கிடப்பாள். ஒரு கால் எங்கேயாவது பிழைத்திருந்தால், மஹாதேவன் தன்னை மன்னித்துத் திரும்பி வருவானென்றுதான் அவளும் வெகு நாட்கள் காத்திருந்தாள். ஆனால் அந்த ஆசை இனிமேல் வேண்டாமென்று அவள் மனம் சொல்லியது. எனினும் அவளுடைய இருதயத்திலும் ஒரு விதமான அமைதி ஏற்பட்டது. உலகத்திலே விதி ஒன்று உண்டானால் அதை மதியால் வெல்ல முடியுமா?

காலையிலும் மாலையிலும் ஸ்நானம் செய்து மீனாக்ஷி அம்மன் கோவிலில் அம்மன் ஸந்நிதியில் ஜபம் செய்வாள். மதுரைக் கோவிலென்றால் சொல்லவும் வேண்டுமா! அதுவே பெரிய பட்டணம். எங்கும் கடைகளும் கும்பலுந்தான். வீதிகளில் செல்வது போல ஜனங்களும் திரள் திரளாகக் கோயில் பிராகாரங்களில் நடப்பார்கள். ஒரு நாள் சாயந்தரம் அஸ்தமன சமயம். கோவிலின் ஒரு பெரிய பிராகாரத்தில் ஜனங்கள் கூட்டமாய் நின்றுகொண்டு ஒரு சாமியாரின் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். குந்தளமும் தூரத்தில் நின்று அவர் பேசும் வார்த்தைகளைக் கவனித்தாள். பிரசங்கம் முடிவடைந்து கொண்டிருந்தது. பின் வருமாறு அவரும் சொல்லி முடித்தார்:

"....ஆகையால் ஜனங்களே, நான் புதிய விஷயங்களை உங்களுக்கு உபதேசிக்க வரவில்லை. எல்லாம் அவரவர்களுடைய வாழ்க்கையிலேயே நன்றாய் அறிந்து கொள்ளக்கூடிய விஷயங்களையே நான் எடுத்துச் சொல்லி வந்தேன். வாழ்க்கையில்

நம் மனம் பொல்லாதவர்களாயிருப்பவர்களை நிரா கரிக்கவாவது நிந்திக்கவாவது கூடாது. இவ்விஷயம் உங்களுக்கே தெரிந்திருக்கலாம். ஆனாலும் தெரிந்த தைத்தான் நான் உங்களுக்கு வற்புறுத்திச் சொல்லு கிறேன். ஒருகால் நீங்கள் அவரவர்களுடைய நித்திய காரியங்களில் இதை மறந்து போகலாம். ஒரு சமயம் தனக்காகத் தெரியாவிட்டாலும் பிறரிடமிருந்தாவது அறிவதில் தப்பொன்றும் இல்லையல்லவா?"

இவ்விதம் பிரசங்கம் செய்து முடித்து அவர் கையில் தடி எடுத்து வேகமாகக் கூட்டத்தினின்றும் வெளிக்கிளம்பினார். குந்தளமும் அவரையே பார்த்து நின்றாள். சற்றுச் சமீபத்தில் நெருங்கி அவருடைய மயிரடர்ந்த தாடியுடன் தடித்திருக்கும் உதடு களைப் பார்த்ததும் எங்கேயோ அவளுடைய ஞாப கங்கள் சென்றன. அதற்குள் சாமியார் அவளைத் தாண்டித் தெருக்களையும் கடந்து சென்றார். திடீ ரென்று அவள் வாயினின்றும் "அவராயிருக்குமோ?" என்று கிளம்பிய மொழிகள் அவள் காதுகளுக்கே எட்டுமுன், அவர் போன வழியே அவளும் பின் தொடர்ந்து ஓடினாள். யாரைக் கேட்டாலும் தெரி யாதென்றுதான் சொன்னார்கள்.

வைகையாற்றில் ஜலம் பத்துப் பதினைந்து நாளாக விடாது பெய்த மழையில் கரை புரண்டு ஓடிற்று. கண்டிராத காட்சி அல்லவா அது? வைகை யாற்றில் ஜலத்தையே பார்க்காத கண்களுக்கு அவ்வாற்றில் வெள்ளம் போகும் தோற்றம் கவர்ச்சி அளிக்கும். குந்தளம் அந்த ஆற்றைப் பார்த்து அப்படியே நின்றாள். அங்கோர் இடையன் எதிரே நின்றுகொண்டு அவளைப் பார்த்து, "ஏன் அம்மா நிக்கிறீங்க?" என்று கேட்டான்.

"அப்பா, யாராவது சாமியாரைப் பார்த்தாயா?" என்று குந்தளம் அவனைக் கேட்டாள்.

"ஆமாம் அம்மா, ஒரு சாமியார் இப்போதுதான் ஜலத்திலே குதிச்சு நீஞ்சிப் போறாரு. பாவம்! ரொம்பக் கஷ்டப்பட்டிருப்பாரு. இந்த வெள்ளத்திலே எதுக்கு ஜலத்திலே போறாருன்னுதான் பாத்தேன். அக்கரை சேர்ந்திருப்பாரு. இல்லேன்னா ஆத்தோடே போயிருக்கணும். எம்மா அழறீங்க? அவர் உங்களுக்கு வேணுமா? பிழைச்சிருப்பாரு, பயப்படாதீங்க" என்று குந்தளத்தைத் தேற்றினான்.

நதியின் பிரவாகம் கரை புரண்டோடிற்று. புது வெள்ளம் பழைய வெள்ளத்தைக்கூட அடித்துக் கொண்டு போகும் அல்லவா?

# குழந்தையின் கேள்வி

ஒரு நாள் சாயந்தரம் கலா பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்து பக்கத்தகத்துக் குட்டிகளுடன் விளையாடாமல் உட்கார்ந்திருந்தாள். அதைக் கண்ட அவள் பாட்டி, "ஏண்டியம்மா! நீ விளையாடாமல் உட்கார்ந்திருக்கே? அவா உன்னைச் சேத்துக்கல்லையா?" என்று கேட்டாள்.

"இல்லை, பாட்டி! நான்தான் விளையாடப் போகல்லே. ராஜம் என்னை வெறுமனே அழ விடறு. தீபாவளிக்கு அவ அப்பா பத்து ரூபாய்க்குப் பட்டாஸ் வாங்கித் தரப்போறுளாம். நம்மாத்துலே எத்தனை ரூபாய்க்கு அப்பா வாங்குவான்னு கேக்கறு, பாட்டி! அப்பாதான் கேட்டால் கோச்சுப்பாளே..... உம்....உம்...." என்று தொண்டை அடைக்க அழ ஆரம்பித்தாள்.

"அதற்காகவா அழறே? போ அசடே! 'எத்தனை ரூபாய்க்கானு என்ன? உங்காத்திலே எத்தனை பேருக்கு அந்தப் பட்டாஸுலே பங்கு? எங்காத்துலே நான்தானே வாங்கின பட்டாஸ் எல்லாத்தையும் சுடுவேன்'னு நீ பதில் சொல்லு. நன்னு அழுதே! வா, உள்ளே!" என்று அவள் பாட்டி கலாவைத் தூக்க முயன்றுள்.

"பாட்டி, அப்பா பட்டாஸ் விடக் கூடாதுன்னு சொல்லுவாளே! இன்னி ராத்திரி அப்பாவைக் கேக்கட்டுமா?" என்று சொல்லிய வண்ணம் பாட்டியின் மார்பின்மேல் சாய்ந்துகொண்டு அவள் கழுத்திலிருந்து தொங்கிக்கொண்டிருக்கும் ஸ்படிக மாலையைக் கைவிரல்களால் விஷமம் செய்தாள். பாட்டி

யும் பேத்தியின் காதண்டை மெதுவாகச் சொன்னாள்:—"நான் வாங்கித் தரேண்டி, கண்ணே! நீ மாத்திரம் இரையாதே. அப்பாவுக்குத் தெரியப்படாது. அப்பா கோர்ட்டுக்குப் போனப்பறம் சுடலாம்."

கலாவின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்துகொண்டே, "எத்தனை ரூபாய்க்கு வாங்கித் தரே, பாட்டி? அஞ்சு ரூபாய்க்கா?" என்று கை விரல்களைப் பிரித்துக் காட்டினாள். பாட்டியும், குழந்தையின் சந்தோஷத்தைப் பார்த்துக் கவலை நீங்கினவளாய், "ஆம்" என்று தலை அசைத்தாள்.

ஆனால் மறுபடியும் கலா, "எனக்குப் புதுப் பாவாடை, மேலாக்கு எல்லாம் உண்டோன்னோ? நான் அதையெல்லாம் கட்டிண்டுதான் பட்டாஸ் ஒண்ணொண்ணு விடுவேன்" என்றாள்.

பாட்டியின் முகம் வாடியது. கண்களினின்றும் நீர் கன்னங்களில் வழிந்தோடியது. குரலும் கம்மி வார்த்தைகள் மெதுவாகக் கிளம்பின. "இல்லேடி அம்மா! இந்த வருஷம் நம்மாத்துலே தீபாவளி கிடையாது" என்றாள்.

கலாவின் மனத்தில் கலவரம் உண்டாயிற்று. அவளும் அவ்விடத்தை விட்டு மெதுவாக நகர்ந்தாள். சிறு வயசானாலும் கலாவின் மனத்தில் படுவது என்னவோ அதிகந்தான். அவள் தாய் இறந்து நாலைந்து மாதங்களானாலும் இன்றைக்குப்போல் அந்தச் சம்பவம் அவள் கண்முன் தோன்றியது.

அவள் வாசலுக்கு வந்த அதே சமயம் அவள் அப்பாவும் கோர்ட்டிலிருந்து மோட்டார் வண்டியில் வந்து இறங்கினார். அவளைப் பார்த்தவுடன் அவள் தந்தை, "ஏன், விளையாடப் போகல்லையா?" என்றார்.

கலாவின் காதுகளில் அவ் வார்த்தைகள் விழவே இல்லை. அப்பா உள்ளே சென்றதையே கவனித்த அவள், மோட்டார் டிரைவர் கந்தசாமியைக் கூப்பிட்டு, "டேய், நாளைக்குப் பாட்டி பட்டாஸ் வாங்கித் தரப்போருடா. இங்கே கடையிலே நல்லதா ஆப்பிடுமாடா? மத்தாப்பு எல்லாத் தினுசும் ஆப்பிடுமாடா?" என்ருள்.

கந்தசாமி வாயைத் திறவாமல் உள்ளே சென்று, கேஸ் கட்டுகளையும் டிபன் பாத்திரங்களையும் வைத்து விட்டு வண்டியை லாயத்திற்குக் கொண்டுபோக முன் ஸீட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டான். கலா அவனை மேலும் மேலும் அதே கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கடைசியில் அவன் சிரித்துக் கொண்டே, "ஆமாம், அப்பாவைக் கேட்டாயா? என்ன சொன்னரு?" என்ருன்.

"பாட்டிதாண்டா வாங்கித் தரேன்ன" என்று மாத்திரம் பதில் கிளம்பியது.

கலாவின் தாய் இறந்துபோய்க் கொஞ்ச காலம் வரையில் அவள் தகப்பனர் ஒருவருடனும் கலக்காமல் தம் துயரத்தைத் தாமே வகித்தார். இப்பொழுது நான்கு மாதங்களுக்கு மேலானதும் அவருடைய தீர்மானங்கள் பறந்தோடின. தாமே தம் ஒரே புதல்விக்குத் தாயும் தகப்பனுமாய் நடந்துகொள்ளத் தீர்மானித்தவர், கொஞ்சம் கொஞ்சமாய் அமைதியை நழுவவிட ஆரம்பித்தார். எப்பொழுதும் கடுகடுப்பும், மனத்தின் கவலையினல் எல்லார் பேரிலும் எரிச்சலுமாய் மாறியது அவர் சுபாவம். அப்பாவின் கோபத்தைக் கண்ட கலாவும் பயத்தினல் பெட்டிப் பாம்புபோல் அடங்குவாள். தன் விசாலமான கண்களால் பிறரின் அநுதாபத்தை அவள் கொள்ளை கொள்வாள். அவள் பாட்டியும் இந்தச் சிறு வயசில்

எல்லாவற்றையும் நன்ருய் அறியச் சக்தி வாய்ந்த அவளைக் காண மனம் கரைவாள்.

மறுநாள் கலாவின் சந்தோஷத்திற்குக் கங்கு கரையே இல்லை. எப்பொழுது அப்பா வீட்டை விட்டுக் கோர்ட்டுக்கு நகரப்போகிருர் என்று எண்ண மிட்டுக்கொண்டிருந்தாள். அவள் பாட்டியும் பூஜை ஸம்புடத்தில் வைத்திருந்த இரண்டு ரூபாயை ஒருவருக்கும் தெரியாமல் வேலைக்காரப் பையன் சீனுவிடம் கொடுத்து, ஒரு ரூபாய்க்குச் சீன வெடியும் மற்ருெரு ரூபாய்க்கு மத்தாப்பு வகையராவும் வாங்கும்படி கொடுத்தனுப்பினுள். மத்தியான்னம் பள்ளிக்கூடத்திற்குச் செல்லக் கலாவிற்குப் பிடிக்கவே இல்லை. சீன வெடிக் கட்டுகள் வைக்கப்பட்ட அலமாரியின்மேல் ஏறி ஏறி அவைகளைக் கணக்குப் பார்ப்பதும், "பாட்டி, ஏன் ஊசிப் பட்டாஸ் வாங்கலே? அவாத்துலே வாங்கிருக்காளே? அப்பாவுக்குத் தெரியாமெ விடணுமில்லே?" என்றெல்லாம் உளறிக் கொண்டும் இருந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்தால் தீபாவளியானதால் அண்டை வீடுகளிலிருந்து முன்தினம் சாயந்தரமே சீன வெடிகளின் ஓசை கேட்கலாயிற்று. கலாவுக்குத் தானும் பட்டாசு சுட வேண்டும் என்ற ஆசை வரவர அதிகமாகவே கிளம்பியது.

அவள் தகப்பனுர் சாயங்காலம் கோர்ட்டிலிருந்து வழக்கம்போல் வந்ததும், கலாவுக்குத் தான் எவ்வளவோ ரகசியமாய் ஏற்பாடு செய்ததெல்லாம் மறந்து போய், "அப்பா, நான் ராத்திரி பட்டாசு சுடப் போறேன்" என்று சொல்லிக்கொண்டே அவரைக் கையால் பற்றி இழுத்து, சீன வெடிக் கட்டுகள் வைத்திருந்த அலமாரியைத் திறந்து காண்பித்தாள். ஒன்றும் பதிலுரைக்காமல் அவர் நிற்பதைப் பார்த்துக் கலாவின் மனத்தில் திகில் உண்டாயிற்று. அவர் முகம் சுளித்து,

"இது யார் வேலை?" என்று கர்ஜித்து, நாற்புறமும் நோக்கினார். புடைவையின் தலைப்பினுள் கையை விட்டுக் கொண்டு ஜபம் செய்துகொண் டிருந்த பாட்டி ஒன்றும் பதில் உரைக்காமல் இருப்பதைக் கண்ட அவர், "அடே கந்தா, இங்கே வா. இந்தப் பட்டாஸ் கட்டை எல்லாம் ஒன்றுவிடாமல் எடுத்துக் கடைக்காரனிடம் கொடுத்து விட்டு வா! அவன் வாங்க மாட்டேன் என்றால் குப்பைத் தொட்டியில் போடு! இங்கே அது கண்ணிலே படப் படாது!" என்று இடி இடித்தாற்போல் கோபித்தார். கலா நடுங்கிப் போய், "பாட்டிதான் அப்பா, வாங்கித் தந்தா" என்றாள்.

"பாட்டி, கீட்டி! அவள் ஒரு இரண்டாம் குழந்தை இந்தாத்துலே!" என்று அவர் சீறினார்.

கந்தசாமி உடனே அவ்வளவு பட்டாஸ் கட்டுகளை யும் பொட்டலம் கட்டித் தூக்கிக்கொண்டு வெளியே போனான். கலாவின் கண்களினின்றும் பிரவாகம்போல் நீர் பெருகியது. அவள் பாட்டி தன் பிள்ளையின் குணத் தைக் கண்டு வியப்பும் துக்கமும் அடைந்தாள். "அட பாவமே! அந்தக் குழந்தை என்ன செய்யும்? நம் பாவத் திற்கு அதுவா ஆளாகும்? ஐயோ பாவம்! தாயில்லாக் குழந்தையை இப்படியா அழ விடறது?" என்று முணு முணுத்தாள்.

கலாவும் பாட்டியின் மடியில் முகத்தை வைத்துத் தேய்த்துக்கொண்டே விம்மினாள். "பாட்டி! எனக்கு அப்பா கோவிச்சுக்குவான்னு அப்பவே தெரியும்!" என்ற வார்த்தைகள் அழுகையில் கலந்து வந்தன. எப்படித்தான் அந்தச் சிறுமியின் மனத்தைத் தேற்று வது? பாட்டி மெதுவாக அவளைத் தூக்கிக் கண்களைத் தன் துணியால் துடைத்துக்கொண்டு, "அழாதே, அம்மா. உங்கப்பாவுக்கு வீட்டில் ஒன்றும் விசேஷம் வேண்டாம் என்று இருக்கு. இப்பத்தானே உங்கம்மா செத்துப்போனா; நாலு மாசம் ஆகல்லே? அதுக்குள்ளே

ஆத்துலே இதெல்லாம் கூடாது என்று சொல்ருன். நான் உயிரோடு இருந்தால் அடுத்த வருஷம் உனக்கு எல்லாம் வாங்கித் தரேன். அழாதே, அம்மா!'' என்ருள்.

இவ் வார்த்தைகள் எல்லாம் எவ்விதம் கலாவைத் தேற்றும்? அவள் அழுது அழுது அன்றிரவு சாப்பிடாமல் தூங்கினுள்.

இரண்டு மாதங்கள் கழிந்தன; தை மாதம் பிறந்தது. கலாவின் தகப்பனருடைய சிநேகிதர் ஒருவர் அவர்கள் வீட்டிற்கு வந்தார். பத்துப் பதினைந்து நாட்கள் அவர் வீட்டிலேயே தங்கினுர். அவள் தகப்பனுர், வந்தவருடன் அடிக்கடி வெளியே போவதும், கதவைத் தாழிட்டுக்கொண்டு ரகசியம் பேசுவதுமாக இருந்தார். இரவில் கலா படுக்கையில் விழித்துக் கொண்டால், அவள் அப்பாவின் அறையில் விளக்கு எரிவதையும் குசுகுசுவென்று அவர்கள் இருவரும் பேசுவதையும் கவனிப்பாள். வந்தவர் இரண்டு வாரத்திற்கெல்லாம் ஊர் போய்ச் சேர்ந்தார்.

வழக்கம்போல் பள்ளிக்கூடத்திற்குக் கலா போய் வந்தாள். ஒரு நாள் வீடு திரும்பும்பொழுது வீட்டு வாசலில் நகைக்கார ஜோஷியைப் பார்த்தாள். அவன் அடிக்கடி பக்கத்து ராஜத்தின் வீட்டில் வைரக் கற்களையும் நகைகளையும் கொண்டுவந்து காட்டுவதை அவள் பார்த்தது உண்டு. உடனே அவளுக்குச் சந்தோஷம் உண்டாக, அவள் பாட்டி பூஜை உள்ளில் கோலம் போடுவதையும் நிறுத்தி, "பாட்டி, யார் அது வாசல்லே? நகைகள் வைத்துக்கொண் டிருக்கிருரே? அப்பா ஏதாவது வாங்கப் போகிருரா? யாருக்கு, சொல்லேன்'' என்று மன்ருடினுள். பாட்டியின் வாயிலிருந்து ஒரே ஒரு பதிலைத்தான் அவள் எதிர்பார்த்தாள். தன்னைத் தவிர நகை, நட்டு அணிந்துகொள்ள வேறு எவரும் வீட்டில் இல்லாததால் தனக்குத்தான் என்று ஊர்ஜிதமாக அறியப் பாட்டியைப் பார்த்

தாள். பாட்டி பதில் சொல்லத் தாமதிக்கவே, "என்ன, சும்மா இருக்கே? உனக்கு ஒண்ணும் தெரியல்லே, போ!" என்று கடிந்தாள். அவள் பாட்டியும், "விசாரித்துச் சொல்றேன்" என்று சொல்லிப் பெருமூச்செறிந்தாள்.

கலாவின் தந்தை அந்த நகை வியாபாரியினிடத்தில் செய்த பேரத்தை ஒருவருடனும் கலக்காமலும் சம்பாஷிக்காமலும் முடித்தார்.

கோடை விடுமுறையும் வந்தது. அன்று வியாழக்கிழமை. கலாவின் தகப்பனார் ஊருக்கு எங்கேயோ போவதாக வீட்டில் எல்லாரும் பேசிக்கொண்டிருந்தார்கள். எந்த ஊருக்கு என்று மாத்திரம் ஒருவரும் அறியவில்லை. எல்லாம் வெகு ரகசியமாக இருந்தது. கலா பாட்டியைக் கேட்டு அறிந்துகொள்ளச் சக்தியற்றுச் சும்மா இருந்தாள். அடிக்கடி பாட்டி துயரத்தால் பெருமூச்செறிவதைக் கண்டு சந்தேகம் கொண்டாள். ராத்திரி எட்டு மணி அடித்ததும் அவள் தந்தை ரெயில் வண்டிக்குப் புறப்படத் தயாரானார். வண்டியில் ஏறிக்கொள்ளப் போகும்பொழுது மாத்திரம் அவள் அப்பா பாட்டியுடன் ஏதோ மெதுவாகப் பேசியது அவளுக்குத் தெரிந்தது. அப்பா வீட்டை விட்டுப் புறப்பட்டதும் அவள் ஒரே ஓட்டமாகச் சென்று பாட்டியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "நீ ஏன் அழறே, பாட்டி? அப்பா ஏதாவது கோவிச்சுண்டாளா?" என்றாள்.

"நான் சாகப்படாதா? எனக்கு என்னத்திற்கு இந்தச் சிரமமெல்லாம்?" என்று சொல்லிப் பாட்டி முகத்தைத் துணியால் மூடிக்கொண்டு வாய்விட்டு அழுதாள். கலாவுக்கு ஏன் இப்படிப் பாட்டி அழ வேண்டும் என்று மாத்திரம் புரியவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பின் பொழுது விடியுமுன் ஒரு நாள் கலாவின் பாட்டி வெகு சுறுசுறுப்புடன்

காரியங்களைக் கவனித்துக்கொண் டிருந்தாள். வீடு பூராவும் நன்ருகச் சுத்தம் செய்யப் பெற்று, எங்கும் கோலங்கள் தரையில் பளீரென்று காணப்பட்டன. மாவிலைகள் வாசற்படியில் அழகாகக் கோத்துக் கட்டப் பட்டு, வீடு பார்க்க ரமணீயமாக விளங்கியது. கலா விழித்ததும் ஒரு நாளும் தான் காணுத இக் கோலத் தைக் கண்டு வியப்புடனும் குதூகலத்துடனும் எழுந்து ஓடி வந்தாள். அப்பொழுது அவள் பாட்டி கோலங் களுக்குச் செம்மண் வரம்பு இட்டுக்கொண் டிருந்தாள். கலாவுக்கு வீட்டில் ஏதோ விசேஷம் என்று நிச்சய மாகத் தோன்றியது. அவள் பாட்டி போடும் செம்மண் அலங்காரத்தை அப்படியே கவனித்துக்கொண்டு பல் கூட விளக்காமல் நின்ருள்.

அதி சீக்கிரத்தில் வீட்டு மோட்டார் வண்டியின் ஓசை கேட்டது. வீட்டு வேலைக்காரி பொன்னி, பரிசா ரகன் சீனுவைப் பார்த்துக் கண்ஜாடை செய்தாள். எல் லாரும் வண்டியில் வருபவர்களைக் கவனிக்கத் தங்கள் தங்கள் வேலையை விட்டு நின்று நோக்கினுர்கள். கலா, தன் தகப்பஞர் வருவதைப் பார்க்க வாசலுக்கு ஓடி வந்தாள்.

மோட்டார் வண்டியும் வாசலில் நின்றது. வண்டி யில் தன் அப்பாவின் அருகில் உட்கார்ந்திருக்கும் பதி னைந்து வயசுள்ள ஒரு பெண்ணைப் பார்த்துக் கலா வுக்கு யாரென்று தெரியவில்லை. அவர்கள் இருவரும் வண்டியை விட்டுக் கீழே இறங்கினதும், அவள் அப்பா ஒருவருடனும் பேசாமல் உள்ளே வேகமாகச் சென்ருர். வந்த புதிய பெண் காதுகளில் புதிய வைரக் கம்மல் அணிந்திருந்தாள். அங்கே நின்றிருந்த கலாவின் பாட்டி யைக் கண்டதும் கீழே விழுந்து நமஸ்கரித்தாள். கலா வுக்கு எல்லாம் விநோதமாகவே இருந்தது. பதில் ஒன் றும் சொல்லாமல் பாட்டி இருப்பதையும் அவள் பார்த்தாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் பாட்டி தனியாகத் தாழ்வாரத்தில் நின்றிருப்பதைப் பார்த்துக் கலா, அதுதான் நல்ல சமயம் என்று கருதி, "பாட்டி, நம்மாத்துலே என்ன விசேஷம்? யாரது அப்பாவோடே வந்தது?" என்று கேட்டாள்.

"வீட்டில் கல்யாணம்."

தன் வயசிற்கு அசாதாரணமான ஞாபக சக்தி வாய்ந்தவள் ஆனதால் கலா, "ஏன் பாட்டி, நீதான் ஆத்துலே விசேஷமே கூடாது என்று அப்பா சொல்றான்னு சொன்னயே! இப்போ மாத்திரம் அப்பா கோவிச்சுக்க மாட்டாளோ?" என்று கேட்கவும் பாட்டி ஒன்றும் பதில் சொல்லாமல் அவளை வாரிக் கட்டிக்கொண்டு தன் கண்ணீரால் ஸ்நானம் செய்வித்தாள்.

# பெற்ற மனம் பித்து

## 1

"ராஜம்! ஏண்டி குழந்தையை வெறுமனே வதைக்கிறே?" என்று ராமசந்திரையர் சொல்லிக் கொண்டே அரிவாள்மணையில் இலை நறுக்கிக்கொண்டிருந்தவர் எழுந்து வந்தார். அவருடைய குழந்தை மணி வீல் என்று கத்திக்கொண்டு அவரிடம் ஓடி வந்தான். அவனை அணைத்துக்கொண்டு, "ஏண்டா கண்ணே, யார் அடிச்சா?" என்றதும் அவன், "அக்கா தான்" என்று ராஜத்தைச் சுட்டிக் காட்டினான். "இல்லை, அப்பா! மணி குதிரை விளையாட்டு விளையாடலாம்னான். சரீன்னுட்டு நான் முதுகிலே ஏத்திண்டேன் அவனை. அவன் அப்படியே பின்னாலே விழுந்துட்டான். நான் என்ன பண்றது?" என்று ராஜம் சொன்னதும், "உனக்கு வேறென்ன வேலை, அவனைச் சீண்டறதைத் தவிர?" என்று சொல்லி ராமசந்திரையர் அவள் முதுகில் கையால் ஓர் அடி வைத்தார். தாங்க முடியாத துக்கத்துடன் ராஜம் வேகமாக உள்ளே சென்றாள்.

வாழை இலைகளை நறுக்கி வைத்துக்கொண்டிருந்தவர் மணியைச் சமாதானம் செய்வதற்காக அவற்றை அப்படியே போட்டுவிட்டு, "இந்தா!" என்று தம் சம்சாரத்தைக் கூப்பிட்டார். உள்ளே இருந்த காமு அம்மாள் வெளியே வந்து, "ஏன் அதைக் கழுதையாக அடிக்கிறேள்? இப்படிச் செல்லம் கொடுத்துக் கொடுத்துத்தான் அது பிடிவாதமும் அசட்டுத்தனமும் செய்யறது" என்று சொல்லிவிட்டு, "அது போகட்டும்; அதற்கு அவளைப் போட்டு அடிப்பானேன்? அவள் என்ன செய்தாள்? நன்னாயிருக்கு!" என்றாள்.

"உஸ்! அவனை மறுபடியும் அழவிடாதே. பார், அவன் கண்ணைக் கசக்குகிறான்.—அழாதேடா, நான் தான் அடிச்சேனே அவளை...இந்தா, எங்கே போறே, அவனுக்குச் சாதம் கொண்டு வா. நானே ஊட்டு கிறேன்" என்று ராமசந்திர ஐயர் சொல்லி, மணியைத் தோள்மேல் சாய்த்துக்கொண்டு வாசற்பக்கம் வந்தார். காமு அம்மாளும் அப்படியே ஒரு வெள்ளிக் கிண்ணத் தில் சாதமும் பருப்பும் போட்டு நன்றாகப் பிசைந்து, வேறு ஒரு பாத்திரத்தில் கம்மென்று புதிதாக வெண் ணெய் காய்ச்சிய நெய்விட்டுக் கொண்டுவந்து வைத் தாள். "சமத்தோன்னோ! கையை நீட்டு, பார்க்கலாம்" என்று ராமசந்திர ஐயர் மணியைக் கேட்கவும், அவன் திரும்பிப் பார்த்துக் கிண்ணத்தின்மேல் நேராகக் கையைக் குழித்துக்கொண்டு நீட்டினான். அந்தச் சிறிய கையில் வழிய வழிய நெய்யை விட்டுக்கொண்டே, ஆசை யுடன் தகப்பனார் பிள்ளையைப் பார்த்து, "உம், சாப்பிடு. இன்னம் வேணுமா, போதுமா?" என்றெல்லாம் கேட் டுக்கொண் டிருந்தார். அவ்வளவு சாதத்தையும் அவ னுக்கு நல்ல வார்த்தை சொல்லிக்கொண்டே ஊட்டி விட்டார்.

ராஜத்திற்கு வயசு இப்பொழுதுதான் பன்னி ரண்டு இருக்கும். அவளுக்குப் பிறகு ஏழெட்டு வரு ஷங்கள் கழித்துத்தான் மணி பிறந்தான். அவன் பிறந் ததிலிருந்து காமு அம்மாளுக்கு உடம்பு சரியாகவே இல்லை. ராமசந்திர ஐயர் சாமானியப் பரிசாரகத் தொழிலிலிருந்து இப்பொழுதுதான் கொஞ்ச வருஷங் களாகத் தாமாகவே ஹோட்டல் ஒன்றை வைத்து நடத்திக்கொண்டு வந்தார். நல்ல ஊக்கமும் ஆட்களை மேய்த்துக் கட்டுவதும் இருந்ததால் அவருக்கு அம் மாதிரி ஹோட்டலைப் பட்டணத்தில் வைப்பதற்குத் தைரியம் உண்டாயிற்று. வெகு சீக்கிரத்தில் பணமும் கையில் சேர்ந்தது. மணி பிறந்த பிற்பாடு அவருக்கு நல்ல காலம் என்று ஜோசியர்கள் சொன்னதற்குப்

பொருத்தமாக நடந்தபடியால், அதுவே அவருக்கு மணியின்மேல் அதிகமான ஆசை ஏற்படக் காரணம் என்று நம்பும்படியாக இருந்தது. லக்ஷ ரூபாய் ஐந் தாறு வருஷங்களில் சேர்த்துவிட்டார் என்றுகூட ஊர் வதந்தி. ஆனால் அவர் நடை உடைகளில் படா டோபமே இல்லை. அன்று எவ்விதம் இருந்தாரோ அப் படியே இப்பொழுதும் இருந்தார்.

ஒரு காலத்தில் பிள்ளை வேண்டும் என்ற ஆசை ராமசந்திர ஐயருக்கு வெகு அதிகம். மணி பிறந்ததும் அவரைக் கட்டிப்பிடிக்க முடியவில்லை. அவரைத் தெரிந்த வர்கள்கூட வேடிக்கையாகச் சொல்வதுண்டு: அதாவது, ஒரு சமயம் அவர் ஒரு ஹோட்டலில் பரிசாரகராக இருந்தபொழுது, ஆண் குழந்தை பிறந்தது என்ற செய்தி கிடைத்ததும் அப்படியே தம் கையில் இருந்த ரஸம் அவ்வளவையும் ஒருவருடைய இலையில் கொட்டி விட்டதாகவும், அதனால் அவர் கோபித்துக்கொண்டு முதலாளியிடம் ராமசந்திரையர்மேல் புகார் சொன்ன தாகவும், அந்தக் காரணத்தினாலேயே அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டதாகவும், அதிலிருந்தே அவர் நல்ல முயற்சி செய்து சொந்தப் பணம் அடைந்த தாகவும் சொல்வார்கள்.

மணி பிறந்ததிலிருந்து ராஜத்தை ஏழரை நாட்டுச் சனியன் பிடித்துக்கொண்டது. மணிக்கு அவள் பேரில் தான் எப்பொழுதும் புகார். காமு அம்மாள் வார்த் தையை அவள் கணவர் கேட்பதே இல்லை. எந்த விஷயத் திலும் ராஜத்தைக் கோபித்துக்கொள்வார். சில சமயங் களில் அவளை நன்றாக அடித்தும் விடுவார். மணிக்குச் செல்லம் என்றால் இவ்வளவு அவ்வளவு அல்ல. மணி பள்ளிக்கூடம் சென்றால் அவனுக்குத் துணையாக ஓர் ஆள் அங்கேயே இருக்க வேண்டும். பள்ளிக்கூடத்தில் பரீக்ஷை என்றால் மணிக்கு ஜுரம் வந்துவிடும். ராம சந்திர ஐயரும் பொய்க் கடிதங்கள் உபாத்தியாயருக்கு

எழுதி, பிள்ளைக்கு உடம்பு சரியில்லை என்று சொல்லி எப்படியாவது அவனுக்குக் கவலை இல்லாமல் பார்த்துக் கொள்வார். வீட்டில்கூட அவன், உபாத்தியாயர் கொடுத்துவிட்டுப் போன கணக்கு முதலிய பாடங்களை அவனுக்குப் பதிலாகத் தமக்குத் தெரிந்த வரையில் தாமே போட்டுக் கொடுப்பார். மொத்தத்தில் அவருக்கு மணியின்மேல் இருந்த பாசம் கண்களைத் திரைபோல் மறைத்தது. யாராவது, "இவன்தானா உங்கள் பிள்ளை?" என்று கண்ட இடத்தில் கேட்டு விட்டாலோ, "மணி! வா!" என்று சொல்லி, அவனை அணைத்துக்கொண்டு, "மணி ரொம்ப சமத்து. அவன் கலெக்டர் பண்ணப் போகிறான். பாருங்கோ" என்று சொல்லிக்கொள்வார். மணி போட்டுக்கொள்ளும் சட்டை, குல்லா எல்லாங்கூடப் புது 'பாஷன்' ஆகத் தான் இருக்கும். தாம் உடுத்துவது சாதாரணத் துணி யாக இருந்தாலும், குழந்தை மணியை வெளியில் கூட்டிக்கொண்டு போகும்போதெல்லாம் சராயும் பூட்ஸும் ஹாட்டும் போட்டுத்தான் அழைத்துக்கொண்டு போவார். அவர் மோட்டாரில் புறப்பட்டால் மணி கூடவே செல்வான்.

ராஜம் ஒரு நாள்கூட இந்தக் கொஞ்சலையும் செல்வாக்கையும் அறியாள். தாய்க்கு உடம்பு சரியில்லாத தால் எல்லா வேலையையும் அவளே செய்ய வேண்டி இருந்தது. ஓய்வு நேரங்களில் அம்மாஞ்சி பானுவின் அறையில் போய் உட்கார்ந்துகொள்வாள். பானு, காமு அம்மாளின் இறந்துபோன சகோதரனுடைய புத்திரன். கையில் கால் காசு இல்லை. வேறு விதி இல்லாமல் இங்கே இவர்களுடன் வசித்து வந்தான். எப்பொழுதும் படிப்பில் ஊக்கத்துடன் இருப்பான். பிறருக்கு அநு சரணையாகவே நடந்துகொள்ளும் தன்மை உடையவன். ராஜத்தினிடத்தில் அவனுக்கு அடங்காத அநுதாபம். அவள் சொல்வதையெல்லாம் கவனித்துக் கேட்டுக் கொண்டிருப்பான். அடிக்கடி அவன், "ராஜம், அழாதே!

நீ என்ன சின்னக் குழந்தையா? எல்லாம் உன் நன்மைக்குத்தான் என்று வைத்துக்கொள்'' என்பான். உண்ட வீட்டிற்கு இரண்டு நினைப்பது அவன் சுபாவம் அல்ல.

காமு அம்மாளுக்கு நாளுக்கு நாள் க்ஷயரோகம் அதிகரித்தது. டாக்டர்களும் வியாதியைத் தடை செய்ய வகை இல்லாமல் அவள் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் காலை காமு அம்மாள் வழக்கத்தைவிடச் சற்றுத் தெளிவான முகத் தோற்றத்துடன் படுத்திருந்தாள். ராமசந்திரையரும் அவளுக்கு வியாதி குறைந்து வருவதாகவே நினைத்தார். ஆனால் மெதுவாக அவரைச் சமீபத்தில் கூப்பிட்டுக் காமு அம்மாள் சொன்னதாவது: "எனக்கென்னவோ, இன்னும் அதிக நாள் இருக்கமாட்டேன் என்று தோன்றுகிறது. உங்களுக்கு வாழ்க்கைப்பட்டு ஏதோ புண்ணியத்தினால் என் வாழ்நாட்களைக் கடத்திவிட்டேன். ஒரே ஒரு குறைதான் எனக்கு. அதையும் உங்களால் தீர்க்க முடியும். அந்தப் பிள்ளை பாலு இருக்கிறானே, அவன் சாது; புத்திசாலிகூட. ஏதோ இரண்டு காசு சம்பாதிப்பான்; பயம் இல்லை. அவனுக்கே நம் ராஜத்தைக் கொடுத்துவிடுங்கள். அது பாவம், அழுது அழுது கண்ணைக் கசக்குகிறதைப் பார்க்க என்னால் சகிக்க முடியவில்லை. பாலுவுக்குக் கொடுத்தால் அவளைக் கவனித்துக்கொள்வான்.''

ராமசந்திரையருக்குத் திடீரென்று அவள் வேண்டுகோளுக்குப் பதில் என்ன சொல்வதென்று புரியவில்லை. இருந்தாலும், "ஆகட்டும், நீ ஒன்றும் கவலைப்படாதே. உனக்கு உடம்பு குணம் ஆகிக்கொண்டுதான் வருகிறது. நீயே பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கப் போகிறாய்'' என்று தேற்றினார்.

இது நடந்த ஒரு வாரத்திற்கெல்லாம் காமு அம்மாள் பரலோகம் அடைந்தாள். தாயில்லாக் குழந்தை ஆகிற்று என்று ராமசந்திரையருக்குக் கவலை அதிகம் ஆகி

விட்டது. கூடிய சீக்கிரத்தில் தடபுடல் இல்லாமல் ராஜத்தைப் பாலுவுக்கே கல்யாணம் செய்து வைத்து வீட்டிலேயே இருக்கும்படி செய்தார். பாலு, பி. எல். பரீக்ஷையில் முதல்வகுப்பாஸ் செய்ததால் அவனுக்கு வக்கீல வேலையில் ஆசை அதிகம் உண்டாயிற்று. ஆனால் யார் அதற்குப் பணம் கட்டுவது என்ற பயந்தான் அவனைப் பாதித்தது. அதை அறிந்த ராமசந்திரையர் அவனைத் தம் ஹோட்டலில் காஷியராக நியமித்து, எழுபத்தைந்து ரூபாய் சம்பளம் போட்டுக் கொடுத்தார்.

## 2

இப்படிக் கொஞ்ச காலம் ஆயிற்று. மணிக்கு வயசு பதினாறு ஆயிற்று. ராமசந்திரையருக்கு வயசு நாற்பத்தைந்துக்கு அதிகம் இல்லாததால் மறுகல்யாணம் செய்துகொள்வதற்கு மனம் இடம் கொடுத்தது. வைராக்கியம் எத்தனை காலம் முடியும்? அவர் அந்தஸ்தில் அவருக்குப் பெண் கொடுக்கிறோம் என்று முன்வந்தவர்கள் வெகு பேர். கடைசியாக வேலூர் வக்கீல் ஒருவரின் பெண்ணை அவர் நல்ல முகூர்த்தத்தில் பாணிக்கிரகணம் செய்துகொண்டார். ஆனால் ராஜத்திற்கு அந்த முகூர்த்தத்திலிருந்தே வீட்டில் சுவாதீனம் குறைய ஆரம்பித்தது. நாளடைவில் வீட்டில் ஒவ்வொருவரும் புதிய எஜமானியின் கையின் கீழ் வந்தார்கள். ராமசந்திரையரோ அதை ஒன்றும் தப்பாக நினைப்பதில்லை. புதிய மாமனாருடைய ராஜ்யமும் ஆரம்பித்தது. முதலில் பாலுவின் உத்தியோகத்திற்குப் பிடித்தது ஆபத்து. கணக்குகளைச் சரியாகப் பார்க்கவில்லை என்றுதான் அவன்மேல் புகார். இத்தனை நாள் இல்லாத விஷயம் இப்பொழுது என்ன கண்டுபிடித்துவிட்டார்கள் என்று யாருக்குத் தெரியும்? பாலுவின் ஸ்தானத்தில் ராமசந்திரையருடைய மைத்துனன் வேலை பார்க்கலானான்.

மணி விஷயத்தில் மாத்திரம் ஒருவரும் நெருங்க முடியவில்லை. ராமசந்திரையருக்கு அவன்மேல் வாஞ்சை வரவர அதிகரித்தது. அவன் பதினெட்டு வயசு யுவனாய், நல்ல உயரமாக, அழகாக விளங்கினான். எத்தனையோ பேர்கள் அவனுக்குப் பெண்ணைக் கொடுக்கவும் எத்தனித்தார்கள். ஆனால் மணிக்குச் சீமைப் பைத்தியம் ஜாஸ்தியாகிக்கொண்டே வந்தது. அவ்வூரில் என்னவெல்லாமோ உண்டு என்று அவனுக்கு உள்ளம் சொல்லிற்று.

மேல் படிப்பிற்காக என்று சாக்கிட்டுத் தகப்பனைத் தொந்தரவு செய்வான். ராமசந்திரையருக்குக் கவலை அதிகமாக இருந்தாலும் அவன் சராய்களையும் சட்டைகளையும் போட்டுக்கொண்டு வரும்பொழுது பார்க்க ஆயிரம் கண் போதா என்று தோன்றும். சில சமயம் அவன் தவறான வழியில் சென்றால் என்ன செய்வது என்ற பீதியும் அவருக்கு உண்டாகும். ஆனால் கடைசியில் மணியின் பிடிவாதத்திற்கு அவர் இடம் கொடுத்தார்.

ராஜத்தைப்பற்றியோ, என்னவாக இருக்கிறாய் என்று கேட்பார் இல்லை. மணிக்குத் தன் சகோதரியினிடத்தில் பற்றுதலே கிடையாது. பாலுவினிடத்திலும் அலட்சியமேதான் என்பதில் என்ன சந்தேகம்! ஆகையினால் அவன் சீமையில் காணப்போகிற இன்பங்களைக் குறித்தே மனக் கோட்டைகள் கட்டிக்கொண்டு, தன் பிரயாணத்திற்கு முன்னமேயே அவ்விடத்திற்குச் சென்றதாகப் பிரமை பிடித்து அலைந்தான். கடைசியில் நல்ல தினத்தில் பம்பாய் ரெயிலில் புறப்பட்டான். மணி சென்றதும் ராமசந்திரையருக்குத் தம் குடித்தனத்துடன் தமக்கு இனி யாதொரு சம்பந்தமும் இல்லை என்ற எண்ணமே அதிகரித்தது.

மணி சீமை சென்று வருஷம் ஒன்றுக்குமேல் ஆயிற்று. அவன் கடிதங்களிலெல்லாம் தன் தகப்பனு

ருக்கு அத் தேசத்தின் உயர்ந்த நாகரிகங்களைப்பற்றிப் புகழ்ந்தே எழுதுவான். ஒவ்வொரு தபாலிலும் கையில் பணம் இல்லாத குறையையே எழுதி வருவான். அவன் தகப்பனாரும் உடனுக்குடன் அவன் கேட்ட பணத்தை அனுப்பியதும் அல்லாமல், எங்கே பிள்ளைக்கு உடம்பு கெட்டுப் போய்விடுமோ என்று அவனுக்கு வேண்டிய புத்திமதிகளையும் எழுதுவார். மணி சீமை போனதி லிருந்து வீட்டில் அவர் அவ்வளவாக இருப்பதில்லை. தம்மிடத்தில் ராஜத்திற்கும் பாலுவிற்கும் நம்பிக்கை அவ்வளவாக இல்லை என்று அவருக்கு மனச் சாட்சி சொல்லிக்கொண்டே இருந்தது. ஒவ்வொரு சமயம் பாலுவின் க்ஷேமத்தைத் தாம் கவனிப்பதில்லை என்று மனத்தில் பட்டாலும் அதை மனத்தை விட்டு விலக்கி விடுவார். எப்பொழுதும் குறைகளைத் தவிர உறவினர் களுக்கு வேறு என்ன வேலை என்றுகூடச் சில சமயங் களில் அலுத்துக்கொள்வார்.

ஹோட்டல் வியாபாரம் வரவரச் சுகப்படவில்லை. பலமான போட்டியினால் நஷ்டம் வரத் தொடங்கியது. பிள்ளையின் சீமைப் படிப்பு ஒரு பக்கமும், வியாபார நஷ்டம் மற்றொரு பக்கமுமாக, அவரைப் பெருத்த தன விரயத்தில் கொண்டுபோய் விட்டன. பாலுவிற்குச் சமாசாரம் அவ்வளவும் நன்றாகத் தெரியும். தெரிந்து என்ன பிரயோசனம்? மணிக்குக் கடிதம் ஏதாவது எழுதி அவன் தகப்பனார் ஸ்திதியைப்பற்றிச் சொல் வோம் என்றாலோ, முதலில் மணிக்கு அதை அறிந்து கொள்ள வேண்டிய நிதானமே கிடையாது. மேலும் அவன் சமாசாரங்களை, காதில் பட்ட வரைக்கும், அவ்வளவு மேலானவையாகத் தெரியவில்லை. மணி சீமையில் படிப்பதற்கு என்று பணத்தை வருவித்துப் போகங்களிலே அதிகச் செலவு செய்வதாக அவன் காதுக்கு எட்டியது. ராமசந்திரையருக்கும் எட்டியது. ஆனால் அவருடைய ஆசை அதை நம்ப விடாமல், பையன் சரியாகப் பரீக்ஷைகளில் தேர்ச்சி பெறுவான்

என்றும், ஊரில் உள்ளவர்கள் பொறுமை கொண்டிருக்கிறார்கள் என்றும் அவரைத் தேற்றிக்கொண்டு வந்தது.

## 3

ராஜத்திற்குச் சதா சர்வ காலமும் வீட்டில் இளைய தாயாருடன் அல்ப விஷயங்களில்கூடப் பேதம் தோன்றிக்கொண்டே இருந்தது. அவள் ராஜத்தைச் சிலசமயம் காரியங்களில்கூட அதிகாரம் செய்வாள். ராஜத்தின் தாயினுடைய சிராத்தம் வழக்கம்போல் ஏதோ ஒரு மாதிரியாக நடந்தேறியது ராஜத்திற்குத் தன் தாயினிடத்தில் இருந்த பக்தியில் எல்லாக் காரியங்களையும் தானே செய்வாள். சிராத்தம் நடந்த மறு நாள் எப்பொழுதும் சுமங்கலிப் பிரார்த்தனை செய்வது அவர்கள் வீட்டில் வழக்கம். அன்று பிரார்த்தனைக்காக வாங்கிய புடைவையையும் ராஜத்திற்கே கொடுத்துவிடுவார், அவள் தகப்பனார். ராமசந்திரையர் இளைய சம்சாரத்திற்கு இந்தப் புடைவை விஷயத்தில் வெகு அதிருப்தி. எதற்காகப் புடைவையை வாங்கி ராஜத்திற்குக் கொடுக்க வேண்டும்? மெதுவாக ராமசந்திரையருடைய மனத்தையும் மாற்றிவிட்டாள். அவருக்கும் சுமங்கலிப் பிரார்த்தனையில் என்ன இருக்கிறது என்று நம்பிக்கை குறைந்தது. இந்த வருஷம் சுமங்கலிப் பிரார்த்தனையைப்பற்றிப் பேசுவாரே இல்லை. அவர்தாம் வீட்டில் இருப்பதில்லையே; இருந்தாலும் தம் பெண்டாட்டிக்கு விரோதமாக எதையும் செய்யத் துணிவும் இல்லை. ராஜம் தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "சரி, புடைவையை நான் கட்டிக்கொள்வதனால் தானே சித்திக்கு இந்தச் சுமங்கலிப் பிரார்த்தனையில் இத்தனை அலட்சியம்? நான் நல்ல சுமங்கலியாக வேறு யாரையாவது பார்த்துக் கொடுத்துவிடுகிறேன்" என்று தீர்மானம் செய்து பாலுவினிடத்தில், பத்துப் பன்னிரண்டு ரூபாயில் சாமானியமான சேலை

ஒன்றை வாங்கி வரும்படி சொல்லி, வந்தவுடனே அதை நனைத்து, மடியாக உலர்த்தி வைத்தாள். வழக்கம் போல் சகல காரியங்களையும் செய்து வைத்து, இலைகளைப் போட்டு, பலகையில் கோலம் இழைத்து, அதில் புடைவையை வைத்து, அதன்மேல் புஷ்ப ஹாரங்களைப் போட்டு அலங்கரித்துவிட்டுச் சாப்பாட்டிற்குத் தயாராகச் சித்தியை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். அவள் சித்திக்கு வந்துவிட்டது கோபம். இந்த வருஷம் வீட்டில் அமர்க்களம் ஒன்றும் இருக்காது என்று நினைத்தவளுக்குக் காலையிலிருந்து படும் நிர்த்தூளியைப் பார்க்கத் தாங்க முடியவில்லை. ராமசந்திரையரோ, வீட்டில் இருந்தால் மாஜிஸ்டிரேட் உத்தியோகம் செய்யவேண்டி வரும் என்று பயந்து சீக்கிரமே சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார். 'இன்று இதற்கு ஏதாவது செய்ய வேண்டியதுதான்' என்று நினைத்துக் கொண்டே சித்தி பரபரப்புடன் வந்து, "இந்த வீட்டில் கேட்பார் இல்லை! நான் ஒரு பொம்மனாட்டி இருக்கிறேன் என்றுகூட ஒருவரும் பார்க்கிறதில்லை" என்று சொல்லிப் புடைவை வைத்திருந்த அந்தப் பலகையை அப்படியே வேகமாகத் தள்ளினாள். பக்கத்தில் வைத்திருந்த ராஜத்தின் தாயினுடைய படமும் அதனால் கீழே தள்ளப்பட்டு அதன் கண்ணாடி உடைந்தது.

ராஜத்தின் மன நிலை என்னவாக இருக்கும் என்று வாசிப்போர் அறிந்துகொள்ளலாம். அவள் பாலுவின் அறைக்குச் சென்று விம்மி விம்மி அழுதாள். பாலுவுக்கு மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. மெள்ள அவன் ராஜத்தைப் பார்த்து, "ராஜம்! நான் சொல்வதைக் கேள். இனித் தாமதிப்பதில் பிரயோஜனம் இல்லை. நாம் இங்கே இருப்பது தவறு. இங்கே இருப்பதைவிட எங்கேயாவது சென்று பிச்சை எடுக்கலாம். வா, போவோம். நான் வக்கீல் வேலை செய்து சம்பாதிக்கிறேன். நீ கவலை கொள்ளாதே. உங்கப்பாவிடம்

சொல்லிக்கொள்ள வேண்டாம். அவர் மனம் மாறி விட்டது. சொன்னாலும் பிரயோஜனம் இல்லை" என்று சொல்லி, மூட்டையைக் கட்டினான். ராஜம் சற்று அழுகையை நிறுத்தி நிதானமாக யோசித்தாள். "ஆம், நாம் போவோம். இங்கென்ன எனக்கு இனிமேல்? அப்பாவும் இறந்தார் என்றே நினைத்துக்கொள்ளு கிறேன்" என்று தொண்டை அடைக்கச் சொல்லிவிட் டுத் தன் சாமான்களைக் கட்டுவதற்காகத் தன் அறைக் குச் சென்றாள்.

அன்று மத்தியான்னம் ராமேசுவரம் பாஸஞ்ஜர் ரெயிலில் பாலுவும் ராஜமும் புறப்பட்டார்கள். எங்கே சென்றார்கள் என்று ஒருவருக்கும் தெரியாது.

ராமசந்திர ஐயருக்கு முதலில் கோபந்தான் வந்தது. "கிடக்கட்டும்; அந்தக் கழுதை இவ்வளவு வருஷம் இங்கே இருந்துவிட்டுச் சொல்லாமல் போனாள்? இவன் வக்கீல் உத்தியோகம் பண்ணிப் புரட்டப் போவதைப் பார்த்துவிடலாம்!" என்றார். மறுபடியும் சந்தேகம், அவமானம், பயம் எல்லாம் கலந்தன. ஆனால் பக்கத்தில் இருந்த பெண்டாட்டியும் மைத்துனனும் சொல்வதி லிருந்து கொஞ்சம் அவர்களைக் கவனியாமல் இருந் தாலே வழிக்கு வருவார்கள் என்ற நம்பிக்கை ஏற் பட்டது.

## 4

மணி சீமையில் பரீக்ஷைகளில் தேர்ச்சியடைய வில்லை. ஆனால் திரும்பி ஊருக்கு வருகிற வழியாகவும் தெரியவில்லை. எப்படியாவது அவனைப் பார்க்கவேண்டு மென்ற ஆசை அதிகரித்ததனால் ராமசந்திரையர் அவனை வேனிற்காலத்திலாவது இரண்டு மாதம் இங்கு வந்து போகும்படி மன்றாடினார். அதற்கு மணி, தான் வந்தால் மறுபடியும் திரும்புவதற்கு ஆக்ஷேபம் எதுவும் செய் யக்கூடாது என்று ஒரு சட்டம் போட்டான்.

ஒரு நாள் சாயங்தரம் பம்பாய் எக்ஸ்பிரஸில் மணி சென்டிரல் ஸ்டேஷனில் வந்து இறங்கினான். வரும் போதே அவன் தலையில் ஹாட்டும் வாயில் சுருட்டும் காணப்பட்டன. ராமசந்திர ஐயர் அதைப் பார்த்து, எங்கே தம்மை அறிந்துகொள்ளாமல் இருந்துவிடு வானோ என்று, "மணி, வா!" என்றார். அவன் தகப்பனா ருடைய கையைக் குலுக்கிவிட்டு, ஏதோ இங்கிலீஷ் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு தன் சாமான்களைக் கவனிக்கத் தொடங்கினான். ராமசந்திர ஐயரைக் கவ னிக்கவே இல்லை. அவர்களுக்காகக் காத்துக்கொண் டிருந்த மோட்டாரில் ஏறினதும் ராமசந்திர ஐயர் அவ னுடைய முகத்தில் தோன்றிய வாட்டத்தையும் தேகத் தில் காணப்பட்ட இளைப்பையும் பார்த்துப் பயந்து, "மணி, சீமையில் உடம்பு தேறும் என்பார்களே; உனக்கு நன்றாகவே இல்லையே. நீ இப்படியே திரும்பிப் போகக் கூடாது. இங்கே வைத்தியம் ஏதாவது பார்த் துக்கொண்டுதான் போகவேண்டும்" என்றார். அதற்கு அவன், "பூ! அங்கே இல்லாத டாக்டர்களா இங்கே! ஒன்றும் இல்லை, ஏடனிலிருந்து பம்பாய் வரைக்கும் உஷ்ணம் அதிகம். அதிலும் இந்தத் தரித்திர தேசத் தில் கால் வைத்தவுடன் எல்லா இழவும் வந்துவிடுகிறது" என்று வெகு அலட்சியமாகப் பேசினதைக் கேட்கப் பிடிக்காமல் உட்கார்ந்திருந்தார் ராமசந்திர ஐயர்.

மணிக்காகத் தனியாக மெத்தையில் ஓர் அறை தயாராக இருந்தது. அவன் தன் சாமான்களுடன் அதை அடைந்ததும், தனக்கு முக க்ஷவரம் செய்து கொள்ள வெந்நீர் வேண்டும் என்று சொன்னான். இப் படியாக வீட்டில் உள்ள ஆட்கள் இங்கும் அங்குமாக அவனுக்கு உபசாரம் செய்ய ஓடினார்கள். தம்மை அவன் ஒரு வார்த்தைகூடச் சரியாக விசாரிக்காமல் ஏதோ தன் நினைவாகவே இருக்கிறானே என்று ராம சந்திர ஐயரின் மனம் வாட்டம் அடைந்தது. அவன் தன் கைப்பெட்டியில் இருந்த க்ஷவர சாமான்களை எடுத்து

மேஜையின்மேல் பரப்பி, கண்ணாடியில் பார்த்துக் கொண்டு கத்தியை முகத்திற்குக் கொண்டு போனான். பின்னே நின்ற ராமசந்திர ஐயர் அந்தக் கைப்பெட்டியில் இருந்த சாராயப்புட்டியைப் பார்த்து அப்படியே பிரமித்துப் போனார். 'ஐயோ! குடி வேறு வழக்கமாகி விட்டதா? சிவா! சிவா! இனி என்ன செய்வது?' என்று எண்ணியவராக ஒன்றும் தோன்றாமல் மெதுவாக மெத்தைப் படியில் இறங்கித் தம் அறைக்குப் போய் நாற்காலியில் சாய்ந்தார். மணி வெகு சீக்கிரத்தில் தான் அணிந்திருந்த சட்டைகளை மாற்றி, "அப்பா!" என்று கூப்பிட்டுக்கொண்டு கீழே வந்தான். ராமசந்திர ஐயரும் மனத்தை ஒருவிதமாகச் சரி பண்ணிக்கொண்டு எழுந்தவர், மறுபடியும் அவன், "அப்பா! கிளப்பு ஏதாவதில் நீ மெம்பரா? எங்கே வெளியே போகலாம்?" என்றதும், சோர்வு அடைந்தார். மணி ராஜத்தைப்பற்றி அரை வார்த்தை ஏதோ கேட்டுவிட்டுத் தன் சந்தோஷங்களிலேயே மனத்தைச் செலுத்தத் தொடங்கினான்.

ஊர் முழுவதும் மணியின் லீலைகளைப்பற்றியே பேச்சு. "ஆமாம், ஹோட்டல்காரன் பிள்ளை வேறே என்னவாயிருப்பான்? எல்லாம் புதுப் பணம் செய்கிற வேலை!" என்று ஏசுவார் பல பேர். ராமசந்திர ஐயருக்கும் கடன்கள் ஏற்பட் டிருந்தன. தம் அவஸ்தைகளைப் பற்றி அவர் மனம் கவலைகொள்ளவில்லை. பிள்ளையின் போக்கை நினைத்தால்தான் பைத்தியம் பிடித்துவிடும் போல் இருந்தது. 'மணியைப்பற்றி என்னவெல்லாமோ நினைத்தோமே!' என்று மனம் ஏங்குவார்.

'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' என்பதற்கு ஏற்ப, ராமசந்திர ஐயரின் கடன்காரர்களும் ஒவ்வொருவராக அவரைத் தொந்தரவு செய்தார்கள். அவர் ஆஸ்திகளெல்லாம் ஜப்தி செய்யப்பட்டன. அவர் இருந்த வீட்டையும் ஏலத்தில் எடுத்தார்கள். அதில் தனக்கு ஏதும் சம்பந்தமில்லை என்றுதான் மணிக்கு

அபிப்பிராயம். தன் கையில் ரூபாய் இருந்தால் சினிமாவுக்குப் போவதும் மோட்டார் ஓட்டிக்கொண்டு வெளியில் செல்வதுமாக இருந்தான். குடியும் துஷ்கிருத்தியமுமே நித்திய கர்மாநுஷ்டானங்களாக ஆய்விட்டன.

ஒரு நாள் ராமசந்திரையரின் கடன்காரர்களில் ஒருவன் அவர்பேரில் வாரண்டு எடுத்து அவரை ஜெயிலில் அடைக்க உத்தேசித்திருந்தான். எப்படியாவது தப்ப வேண்டும் என்று அவர் மனம் போராடியது. மணிக்குக் கதி இல்லாமல் போய்விடுமே என்ற கவலையே எப்பொழுதும் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தது. வழக்கம்போல் அன்று ராத்திரி மணி ஸினிமாவிற்கு மோட்டார்காரைத் தானே விட்டுக்கொண்டு போய் விட்டான். அவனிடம் தம் சங்கதிகளைச் சொல்ல வேண்டும் என்று இருந்தவர், நாளைக்குப் பார்த்துக் கொள்வோம் என்று எண்ணத்தை அடக்கிக்கொண்டார்.

நடு ராத்திரியில் பெருத்த சத்தத்துடன் ஒரு கார் வீட்டின் வாசலில் வந்து நின்றது. சில பேர்கள் அதிலிருந்து மணியைத் தூக்கிக்கொண்டு வந்து உள்ளே போட்டார்கள். மணியின் முகமெல்லாம் காயம்; உடம்பெல்லாம் கண்ணாடித் துண்டுகள் பொத்துச் சட்டைகள் கிழிந்து அலங்கோலமாக இருந்தது. டாக்டர் ஒருவர், கூட இறங்கியவர், "நீங்கள்தாம் ராமசந்திரையரா? உங்கள் பிள்ளை இவர்தானே?" என்று வினவவும் அப்படியே அசைவற்று நின்றவர், "என்ன ஸார், அவனுக்கு என்ன வந்துவிட்டது? சொல்லுங்களேன்" என்று பதைபதைக்கக் கேட்டார். டாக்டர், "பெரிய ஆபத்திலிருந்து தப்பித்துவிட்டான். ஆனால் நல்ல அடி. கண்களை ஆபரேஷன் செய்யவேண்டி இருக்கும். எதற்கும் இப்பொழுது இங்கே இருக்கட்டும். நாளைக்கு ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய்க் கவனிக்க வேண்டும்" என்று சொன்னார்.

மறு நாள் ஆஸ்பத்திரியில் அவன் கண்களை ஆபரேஷன் செய்தார்கள். ராமசந்திரையர் வாரண்டு கொண்டு வந்தவனை நல்ல வார்த்தை சொல்லியும் சில்லறை கொடுத்தும் தாமதிக்கச் செய்து வந்தார். இரண்டு நாட்கள் கழித்து, டாக்டர்கள் ராமசந்திரையரிடம் வந்து, "ஏது, இனி உங்கள் பிள்ளைக்குக் கண் பார்வை இருக்காது என்று நினைக்கிறோம். நீங்கள் அவனிடம் போய் ஏதாவது சொல்லப் போகிறீர்கள். ஜாக்கிரதை!" என்று எச்சரித்தார்கள்.

"ஐயோ! கண்ணை இழந்தானா? அடபாவி! கண்ணைக் கண்டு கண்ணைப் போட்டவர்களுக்குக் கணக்கில்லையே! நான் என்ன செய்வேன்! எங்கேயாவது போய்விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டு வாசலில் வந்தார். தயாராகக் கோர்ட்டுப் பெய்லிப்பு (Bailiff) அவருக்காகக் காத்துக்கொண் டிருந்தான். வாரண்டைக் காண்பித்து அவன் அவரைக்கூட வரும்படி சொன்னான். இனிமேல் தப்ப வழி இல்லை என்று அறிந்த அவர், தாம் வெகு நாளாக மணிக்கு என்று ரகசியமாக வைத்திருந்த பத்து நூறு ரூபாய் நோட்டுக்களை எப்படியாவது மணியிடம் கொடுத்துவிட நினைத்தார். ஒருவரும் இல்லாத சமயம் அப்படிச் செய்ய வேண்டும் என்று நினைத்தவர், இப்பொழுது எப்படி அவனுக்கு அவை இருக்கும் இடத்தைச் சொல்லிவிட்டுச் செல்வது என்று தெரியாமல் திகைத்தார். அவருடைய இளைய மனைவி மாத்திரம் ஏதோ ரகசியம் இருக்கிறது என்று அறிந்து, அவர் பின்னாலேயே ஒளிந்திருந்து, அவர் இல்லாத சமயம் அந்த நோட்டுக் கற்றையை எடுத்துக்கொண்டு, தன் தகப்பனார் வீட்டிற்குப் போய்விட்டாள். அது அவருக்குத் தெரியாது. ஆகையால் பணத்தைப் பார்க்க உள்ளே சென்றவர் அதைக் காணாமல், சொல்வதற்கும் வழியில்லாமல் திரும்பி வாசலுக்கு வந்தவர் கோர்ட்டு வாரண்டுக்கு உடன்பட்டார். விசாரணை நடந்தது. ஸிவில் ஜெயிலில் அவரை அடைத்தார்கள்.

# 5

இந்தச் சம்பவங்களுக்குப் பிறகு, ராமசந்திர ஐயர் ஜெயிலிலிருந்து இரண்டு மாதங்களில் வெளிவந்தவர், அவமானம் தாங்க முடியாமல் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டு மதுரை போய்ச் சேர்ந்தார். மணியின் கதி என்ன ஆயிற்றோ என்றுதான் அவர் மனம் துடித்தது. யாரிடம் கேட்பது? விசாரித்ததில் ஆஸ்பத்திரியிலிருந்து அவனை யாரோ உறவினர் ஒருவர் அழைத்துச் சென்றது மட்டும் தெரிந்தது. அவ்விதம் உதவியவர் யார் என்று சரியாகப் புலப்படவில்லை. ராமசந்திரையர் மானி ஆனதால் இனிச் சொந்த வீடு, வாசல் இல்லாமல் இவ்வளவு காலம் தாம் வசித்த ஊரில் - பலர் பார்த்துப் பரிதபிக்கக் கண நேரமும் தங்க முடியாது என்றுதான் தவித்தார். ஒருவரும் அறியாதபடி ஊரை விட்டுக் கிளம்பியும் விட்டார்.

மதுரை ரெயில்வே ஸ்டேஷனில் சாப்பாட்டுக் கிளப்பு ஒன்று உண்டு. அதில் பரிசாரகராக அமர்ந்தார். நடுவில் வந்த ஸ்ரீதேவி, தான் வந்த வழியே அவருடைய இளைய சம்ஸாரத்தைப்போல் சென்று விட்டாள். ஆனல் அவர் முதலில் கற்றுக்கொண்ட வித்தை அவரைக் கைவிடவில்லை. இப்பொழுது ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு ரெயில்வே ஸ்டேஷனில் பிரயாணிகளுக்குச் சமைத்துச் சாதம் போடுவதும் வருகிறவர்களை உபசாரம் செய்வதுமாகக் காலம் கழித்தார். ராமசந்திரையரை இப்பொழுது யாரும் கண்டுகொள்ள முடியாத விதம், அவர் முகத் தோற்றம் மாறி இருந்தது.

கோர்ட்டுகள் விடுமுறையான மறு நாள்; ரெயிலில் கூட்டம் அதிகம். சாயந்தரம் ஏழரை மணி சுமாருக்கு நான்கு பிரயாணிகள் ஒரு குழந்தை உட்பட மணியாச்சி போகும் வண்டிக்காக வந்து இறங்கினார்கள். அது ஒன்பது மணிக்குத்தான் புறப்படுகிறது. ஆகையால்

வந்தவர்களில் புருஷர்களான இருவரும் சாப்பாட்டிற்காக யோசனை செய்தார்கள். "நீங்கள் சாப்பிடுங்கள். நான் ராஜாமணியை இங்கேயே வைத்துக்கொண்டு சாமான்களைப் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று அவர்களுடன் இருந்த ஸ்திரீ சொன்னாள். அவர்களும் சரி என்றபின், இருவரில் ஒருவர், கறுப்பு மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த மற்றவரைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு உள்ளே சென்றார். உள்ளே ராமசந்திர ஐயர் இலைகளைப் போட்டுப் பரிமாறினார். விளக்கு அவ்வளவு பிரகாசமாக இல்லாததால் வந்தவர்களை நன்றாகக் கவனிக்க முடியவில்லை. இதற்குள் வெளியேயிருந்து அந்த ஸ்திரீ, "இந்தாருங்கோ! ராஜாமணி தொந்தரவு செய்கிறான். அவனுக்கு ஏதோ துப்பாக்கி வேணுமாம். என்னிடம் காசு இல்லை" என்றதும், இலைக்கு எதிரில் உட்கார்ந்தவரில் மூக்குக் கண்ணாடி போடாதவர், "இதோ வந்துவிட்டேன்" என்று எழுந்து சென்றவர் சீக்கிரம் வரவில்லை. பொம்மைத் துப்பாக்கிக்கு வியாபாரியிடம் விலை பேசிக்கொண்டிருந்தார். இதில் தாமதம் ஆக, சாப்பாட்டுக் கிளப்பு முதலாளி, "ஏனையா! இலையில் உட்கார்ந்திருப்பவருக்குப் போடுமே. மற்றவர் பின்னே சாப்பிடுவார்" என்றார்.

ராமசந்திர ஐயரும் சிப்பலில் சாதம் கொண்டு வந்து வைத்து நெய்யை எடுத்துவர உள்ளே சென்று திரும்புகையில், இலையில் வைத்திருப்பவைகளைக் கையால் தடவித் தடவித் தெரிந்துகொள்ள எத்தனிக்கும் அந்தப் பிரயாணியின்மேல் தம் பார்வையைச் செலுத்தினார். சற்று நேரம் அப்படியே பார்த்துக்கொண்டிருந்தார். ஒரு பெருமூச்சுடன், "கண் தெரியாதா உங்களுக்கு? நான் பிசைந்து வைக்கிறேன்" என்று சொல்லிச் சாதத்தையும் பருப்பையும் போட்டு நன்றாகப் பிசைந்து அதில் நெய்யையும் விட்டு, "கையை நீட்டுங்கள். வேண்டுமானால் நெய்யைக் கொஞ்சம் விடுகிறேன்" என்று சொல்லி அவர் கையில் நெய்யை

வழிய வழிய வார்த்தார். சாதாரணமான ஹோட்ட லில் நெய் பரிமாறுவதில் ஜாக்கிரதையாக இருப்பார்கள். ராமசந்திரையர் முதலாளிக்குத் தெரியாமல் அந்தப் பிரயாணிக்குக் கையில் நெய்யை வார்த்ததில் ஆச்சரியம் எல்லாருக்கும் இருக்கலாம். அதே மாதிரி அந்தப் பிரயாணியுந்தான் ஆச்சரியம் அடைந்தாரா என்ன? தம் இடது கையால் எதிரில் குந்தி உட்கார்ந்துகொண் டிருக்கும் ஆளை மெதுவாகத் தடவிக்கொண்டே சென்று விரல்களை முகத்தில் வைக்கவும், ராமசந்திர ஐயர் ஒன் றும் பேசாமல் அவர் விரல்களைத் தம் கண்ணீரால் நனைத்தார். அவ்வளவுதான். "அப்பா!" என்று புதிய உணர்ச்சியுடன் கண்கள் இரண்டையும் இழந்த மணி கதறினான். "ஆமாம், மணி! நான்தாண்டா!" என்று சொல்லி அவரும் அவனை அப்படியே தழுவிக்கொண் டார். இருவருமாகச் சேர்ந்து ஹோவென்று அழு தார்கள்.

இதற்குள் வெளியே சென்ற பிரயாணி உள்ளே வந்ததும் இவ்விருவர்களின் ஸ்திதியைக் கண்டு, "மாமா! நீங்களா இப்படி இருக்கிறீர்கள்!" என்றார். அவன் தான் பாலு.

உடனே அவன் வெளியே ஓடி, "ராஜம்! வா! வா! உங்கள் அப்பா இருக்கிறார் இங்கே" என்றான். ராஜம் அப்படியே ராஜாமணியையும் வாரித் தூக்கிக் கொண்டு, "யார்? அப்பாவா!" என்று ஓடிவந்தாள். எல்லோரும் மறுபடியும் ஒன்று சேர்ந்தார்கள். ராஜா மணி மாத்திரம் தன் புதுத் துப்பாக்கியில் மருந்து வைத்துச் சுட்டுக்கொண் டிருந்தான்.

"அந்தக் குழந்தை உன் பிள்ளையா, அம்மா?" என்று ராமசந்திரையர் ராஜத்தைக் கேட்கவும், அவள், "ராஜாமணி! வாடா, தாத்தாவைப் பாரு" என்று குழந் தையைக் கிட்டே இழுத்தாள்.

ராஜாமணியும், "யாரம்மா! பட்டணத்துத் தாத்தாவா?" என்று கேட்டுக்கொண்டே ராமசந்திரையரை மிகவும் ஆவலுடன் பார்த்தான்.

ராமசந்திரையர் ராஜாமணியைத் தூக்கிக்கொண்டு, "நீ அப்பா மாதிரி வக்கீலாகப் போகிறாயோ!" என்றார்.

அதற்குப் பானு, "இல்லே, இல்லே; அவன் கலெக்டர் ஆகப்போகிறான்" என்றான்.

ராமசந்திர ஐயருக்கு அதைக் கேட்டவுடன் பழைய ஞாபகங்கள் வந்து மனத்தை எங்கேயோ கொண்டு போயின.

'பெற்ற மனம் பித்து' என்று அவர் தமக்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டதை அவர்கள் எவரும் கவனிக்கவில்லை.

# இளகிய மனமா?

ரகுநாதனும் பாலசந்திரனும் மயிலாப்பூருக்கு அடுத்த ஸாந்தோம் மூலைக்குச் செல்லும் ஒரு டிராம் வண்டியில் ஏறினார்கள்.

டிராம் வண்டியின் சக்கரங்கள் தண்டவாளத்தில் உராய்வதனால் உண்டான கிரீச்சென்னும் சப்தத்தை விட அதிகமாக உடம்பில் மயிர் கூச்சுப்படி செய்த ஒரு பிச்சைக்காரனுடைய தீனமான குரல், வண்டியில் உட்கார்ந்திருந்தவர்களின் மனத்தை வேதனையில் ஆழ்த்தியது. அந்த வண்டி புறப்படும்பொழுது, தாவி ஏற எத்தனித்த ஒருவருடைய செருப்பணிந்த காலினால் மிதிபட்டு, வலி தாங்க முடியாத ஒரு பிச்சைக்காரன், "ஐயா, ஐயா! காலை மிதிச்சுட்டீங்களே! என்னால் பொறுக்க முடியல்லேங்களே!" என்று கதறினான். அவ்விதம் வண்டியில் ஏறியவரோ அதைக் கொஞ்சங் கூடக் கவனியாமல், தம் நெற்றி வேர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டே முன்னால் ஓர் ஆசனத்தில் போய் உட்கார்ந்தார். ஆனால், பிச்சைக்காரனுடைய அழுகையைக் கேட்டு மனம் இளகிய பாலசந்திரன் சட்டென்று தன் சட்டைப் பையைத் தடவிப் பார்த்து அதிலிருந்த ஒரு ரூபாயை எடுத்துப் பிச்சைக்காரனிடம் எறிந்தான். கையில் விழுந்த ரூபாயை விரல்களால் கிமிண்டிப் பார்த்து, அது முழு ரூபாய் என்று அறிந்த பிச்சைக்காரன் சந்தோஷத்தினால் பின்னும் அதிகமான விகாரக் குறிகளையே அடைந்த முகத்துடன், "மவராசனா யிருக்கணும் நீ!" என்று வாழ்த்திக் கையை உயரத் தூக்கி, வண்டியின் பக்கமாகத் திரும்பினான். ஆனால், அவன் அவ்விதம் வாழ்த்தும்

மொழிகளைப் பாலசந்திரன் கேட்க வேண்டாம் என்னும் ஒரே எண்ணத்துடன் போவதுபோல், டிராம் வண்டியும் புறப்பட்டுப் போய்விட்டது.

பட்டணத்தில் வசித்த ஒரு பெரிய தனவந்தரின் புதல்வன் ரகுநாதன்.

பாலசந்திரனுடைய தகப்பனார் புகழ்பெற்றவர் ஆயினும், அதிகப் பொருளைத் தேடிக் குடும்பத்திற்கு வைக்காமல், தானதர்மங்களில் தாம் சேர்த்து வைத்த சொத்துக்களைச் செலவழித்ததால், சாப்பாட்டிற்குப் போதுமான பணத்தை மாத்திரம் வைத்துவிட்டு அவர் இறந்துவிட்டார். பாலசந்திரனுடைய ஸ்திதி தனக்குச் சமமாக இல்லாத காரணத்ினால், ரகுநாதன் அவனைத் தன்னுடன் நெருங்கிய சிநேகிதத்திற்குத் தகுதியற்றவனாக எண்ணவில்லை. இருவரும் பள்ளியில் கீழ் வகுப்பிலிருந்து ஒன்றாகவே பரீக்ஷை தேறி வந்தவர்கள். கலாசாலையில் இதர மாணாக்கர்களுக்கு இவ்விருவருடைய அந்யோந்யம் பொறாமையையே விளைவித்ததென்றால், அவர்களுடைய நட்பு எவ்வளவு ஸ்திரமாக இருந்தது என்பதை அறிந்துகொள்ளலாம். இப்பொழுது இருவரும் சட்டக் கலாசாலையில் ஒரே வகுப்பில்தான் வாசித்துக்கொண்டிருந்தார்கள்.

டிராம் வண்டி நகர்ந்துகொண்டிருந்தபொழுது, ரகுநாதனுடைய மனத்தில், சற்று முன்பு பாலசந்திரன் பிச்சைக்காரனுக்கு ஒரு ரூபாயைக் கொடுத்தது சில சந்தேகங்களைக் கிளப்பியது. எதற்காக ஒரு முழு ரூபாயைப் பிச்சைக்காரனுக்குக் கொடுப்பது? மேலும் பட்டணத்திலுள்ள பிச்சைக்காரர்களுக்கு மனம் இளகித் தர்மம் செய்வதனால் அவர்கள் தரித்திரம் குறைந்துவிடுமா? திடீரென்று யோசியாமல் இம்மாதிரி ஒரு நாள் வெள்ளி ரூபாயைக் கொடுப்பதனால் தினம் தினம் அவர்களுக்கு ஏற்படும் கஷ்டங்கள் முழுவதும் ஒழியப் போகின்றனவா? இவ்விதம் எழுந்த எண்ணங்களை

அடக்குவது ரகுநாதனால் முடியவில்லை. இருந்தாலும் வண்டி நிற்கும் வரையில் அந்த விஷயத்தைக் குறித்து வாதாட இஷ்டமில்லாமல் சும்மா இருந்தான்.

கடற்கரையை அடைந்ததும், பாலசந்திரனை உற்றுப் பார்த்துவிட்டு ரகு ஆரம்பித்தான்: "ஆமாம், நீ எதற்காக ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்தாய், அந்தப் பிச்சைக்காரனுக்கு? அந்தப் பயல் கள்ளைக் குடித்துவிட்டு ரஸ்தாவில் போகும் மோட்டார் வண்டியின் கீழே விழுந்து இறந்து கிடக்கப்போகிறான். சந்தேகம் இல்லை. நீ பண்ணிய தர்மத்தின் பலன் அப்படித்தான் முடியப்போகிறது."

ரகு இவ்விதம் சொன்னது பாலசந்திரனுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் வேறு பக்கம் திரும்பிக் கொண்டு, "ரகு, ஏதோ சின்ன விஷயம். அதைப்பற்றி ஏன் இவ்வளவு தூரம் விசாரணை?" என்று வேண்டா வெறுப்புடன் பதில் சொன்னான்.

சுபாவத்தில் முன்கோபமும், ரோஷமுமே அதிகமாக உள்ள ரகுநாதனுக்கு இந்த வார்த்தைகள் உள்ளத்தில் தைத்தன.

"உனக்குப் பிடிக்கவில்லை என்று தெரிந்திருந்தால் நான் பேசவே வாய் எடுததிருக்க மாட்டேன். தெரியாத்தனந்தான். மன்னித்துவிடு, அப்பா" என்று சற்றுப் படபடப்புடனே அதற்குப் பதில் உரைத்தான்.

"பேசப் பிடிக்காமல் என்ன? அது ஒன்றும் இல்லை. ஏதோ பிச்சைக் காசு கொடுத்தால், அது என்ன, வெகு நேரம் யோசித்துச் செய்த விஷயமா? அப்படித்தான் செய்தாலும் என்ன தவறு? பெரிய தர்ம ஸ்தாபனங்களை வைத்து, அவற்றைப் பிற்காலம் நடத்த வகை இல்லாமல் செய்துவிட்டுப் போவதைவிட, உடுக்க வஸ்திரம் இல்லாமலும் தின்னச் சோறு இல்லாமலும் தவிக்கும் இந்த ஏழைகளின் கஷ்டத்தை நிவர்த்தி செய்

வதே மேல் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஓர் அன்பு வார்த்தையினுலும், ஒரு நன்கொடையினுலும் சந்தோஷம் என்பது என்ன என்று அறியாத மனத்தில் புதியதோர் உணர்ச்சியை நிச்சயம் உண்டாக்கலாம். மங்கிய அந்த முகத்தில் புதியதோர் ஒளியுங்கூட ஏற்படும். நம்மிடங்கூட நல்ல குணம் உண்டு என்று அறிந்து, ஏழைகள் நம்மிடம் நம்பிக்கை வைப்பார்கள். உலகத்தின் தீமைகளுக்கும் மிருகத் தன்மைக்கும் நாமே காரணம். பிச்சைக்காரன் நம்மை விடாமல் பின்பற்றிக் கொண்டு நாய்போல் வருவது அவனிடம் நாம் அநுதாபம் காட்டாததால்தான். நாம் வாரி எறியும் வசை மொழிகளையும் அவன் லட்சியம் செய்யாதது, அவனுக்குக் கொடுக்க வேண்டிய வெள்ளிக் காசில் நாம் குறைத்து, செப்புக் காசைக் கொடுப்பதுதான்'' என்று பாலசந்திரன் சரமாரியாகப் பொழிந்தான்.

"உன் மனம் இளகியதைக் குறித்து நான் ஒருகாலும் தப்பாக எண்ணவில்லை. சாதாரணமாக யாரும் முழு ரூபாயைக் கொடுக்கிற வழக்கம் இல்லையே! நீ மட்டும் கொடுத்தாயே? அப்படிக் கொடுக்கும்படி ஏன் தோன்றிற்று என்று தெரிந்துகொள்ள விரும்பினேன்'' என்று ரகு மறுபடியும் அதே விஷயத்தைப்பற்றி விவாதித்தான்.

"ஒரு ரூபாயானுல் என்ன? என்னுல் அவ்வளவு கொடுக்கமுடியாது என்பதுதானே உன் அபிப்பிராயம்!' என்று சுருக்கென்று படும்படி பாலசந்திரன் கேட்டான்.

"இல்லவே இல்லை. கவனியாமல் நீ பணத்தைக் கொடுப்பது சரியல்ல என்பதுதான் என் கட்சி. எதை வேண்டுமானுலும் நீ கொடுத்துவிடுவாய் என்று தெரிந்தால் பிச்சைக்காரத் தொழில் செய்வதில் யாருக்குத்தான் ஆசை இராது?'' என்று ரகு முடிப்பதற்குள், பாலசந்திரன், "பணக்காரர்களின் அநாவசியமான தனமெல்லாம் இந்த உலகத்திலுள்ள பாதி ஏழைகளின்

கஷ்டத்தைப் போக்க வல்லது என்பதில் சந்தேகமா உனக்கு? ஏழை என்றும் பணக்காரன் என்றும் வித்தியாசம் எல்லாம் நம்மிடத்தில் எதற்கு? நாம் படித்த படிப்பு நம்போன்றவர்களின் கஷ்டத்தைக் கண்டு மனம் கரைய வைக்காமல் இருப்பதற்கா? ஐயோ! ஏழைகளை ஒதுக்கி வைப்பதனால், நாம் செய்யும் பாவம் தொலையாது. அதிருஷ்டம் என்பதில் நம்பிக்கை வைத்து மனத்தைத் திருப்தி செய்வதில்தான் நமக்கே கேடு விளைவித்துக்கொள்ளுகிறோம். எனக்கு ஏழைகளிடம் இருக்கும் இரக்கத்தைப் பைசாவினாலும் அணுவினாலும் அளக்க இஷ்டம் இல்லாத காரணத்தினால்தான், நான் என்னிடம் இருந்ததை அப்படியே கொடுத்துவிட்டேன். வாஸ்தவத்தில் வேறு சில்லறைகூட என்னிடம் இல்லை. ஆனால் தோன்றிய நல்ல எண்ணத்தைக் கைவிட மனம் இல்லை. நீர்க்குமிழியைப்போல், நல்ல எண்ணம் நம்மிடம் தோன்றியதும் மறைந்துவிடுகிறதே! ஏதோ இன்றுதான் அவனுக்கு நல்ல வேளையாக இருக்கட்டுமே! அதுகூடவா உனக்குச் சகிக்கவில்லை?'' என்று ஒரு போடு போட்டான்.

தீவிரமாகக் கட்சி ஆடியதில் ரகுவின் உதடுகள் உலர்ந்துவிட்டன. அதிலும் தன் கட்சி சற்றுச் சளைத்ததாக எண்ணும்பொழுது அவனால் பொறுக்க முடியவில்லை.

''அடடா, கையில் சில்லறை அகப்படாவிட்டால், அதற்காகச் சட்டைப் பையை உதறிவிட வேண்டுமோ? அவ்வளவென்ன பெரிய தர்மகாரியம் இது? இதனுடன் அந்தப் பிச்சைக்காரனுடைய கஷ்டம் முடிவடைந்துவிடுமோ? தினம் தினம் உன் மாதிரி கொடுக்கிறவர்கள் எவ்வளவு பேர், பார்ப்போம்!'' என்று ரகு தாங்க முடியாமல் பரிகாசத்தில் இறங்கினான்.

''ரகு, நீ நினைப்பதுபோல் நான் பைத்தியம் அல்ல. என் ரூபாயினால் பிச்சைக்காரனுடைய தரித்திரம் நீங்கி

விடும் என்று நான் எண்ணவில்லை. ஆனால் அதற்காக நம்மால் முடிந்ததைக் கொடுத்து உதவுவதில் என்ன தப்பு இருக்கிறது? என்னவோ தோன்றிற்று; கொடுத்தேன். இப்பொழுது ஒரு சிறு சம்பவம் என் ஞாபகத்திற்கு வருகிறது. என் தகப்பனரைப்பற்றிச் சொல்வது உண்டு; தெரியுமா உனக்கு? அவர் யாருக்கோ உதவி செய்தவுடன் சமீபத்தில் இருந்த ஒருவர், 'எதற்காக இவ்வளவு வேகம்? நிதானித்துக் கொடுத்தால் போச்சு; யோசிப்பதால் என்ன ஆபத்து வந்துவிடும்?' என்று அவரைக் கேட்டாராம். அதற்கு என் தகப்பனர், 'தர்ம காரியத்தில் ஆசை ஏற்பட்டால், அதை நினைத்த மாத்திரத்தில் செய்து முடிக்க வேண்டும். பிறகு செய்யலாம் என்று தள்ளிப் போடுவது கூடாது. ஒரு வேளை மறுபடியும் அதைச் செய்ய நமக்கு அவகாசம் கிடைக்காமலும் போகலாம்' என்று சொன்னாராம். இதே பதில்தான் உனக்கும்" என்று சொல்லிப் பாலசந்திரன் பெரியவர் ஒருவருடைய உதாரணத்தைத்தான் செய்ததற்கு ஆதாரமாக எடுத்துக் காட்டினன்.

ரகு என்னவோ வாதாடிக்கொண்டிருந்தானே யொழிய அவன் மனத்திற்குள் மட்டும் தன் வாதம் சரியல்ல என்றுதான் பட்டுக்கொண்டிருந்தது. அப்பொழுது பாலசந்திரனுடைய தகப்பனர் சொன்ன மொழிகளை அவனுக்கு ஞாபகப்படுத்தியதும், அவனுக்குக் கவலை அதிகமாக ஏற்பட்டது. பலருக்குப் பணத்தையும் வித்தையையும் தம்மால் முடிந்த அளவில் கொடுத்தவரான சித்தநாதையரின் வார்த்தைகளை உலகம் அறியும். பாலசந்திரன் அவற்றை ஞாபகப்படுத்தித் தன் கட்சியைப் பலப்படுத்திக் கொண்டதைப்பற்றி ரகுவிற்குப் பொறாமையே ஏற்பட்டது. ஜயக்கொடியை நாட்டியதும் அல்லாமல் தன்னையும் அவன் ஏளனம் செய்வதாகவே ரகு நினைத்து, மனத்தினுள் சோர்வடைந்தான். பிற்பாடு வார்த்தைகளே அவனிடம் கிளம்பவில்லை.

இதற்குள் ஆகாயத்தில் சந்திரன் உதயமாகிக் கடலையும் மணல் பிரதேசத்தையும் தன் குளிர்ந்த கிரணங்களால் அணைத்துக்கொண்டான். ஒருவரை ஒருவர் கவனியாமல் சற்று நேரம் அவ்விருவரும் சும்மா உட்கார்ந்திருந்தார்கள்.

தன் கைக் கடிகாரத்தில் மணி என்னவென்று சந்திரன் ஒளியில் கவனித்துப் பார்த்துவிட்டு, திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தவன்போல் ரகு எழுந்திருந்து, தான் அவ்விதம் எழுந்ததையும் கவனியாமல் உட்கார்ந்திருந்த தன் நண்பனைப் பார்த்துச் சற்றுத் தயங்கினான். ஆனால் பாலசந்திரன் சுகமாகக் காற்றையும் நிலவையும் அநுபவித்துக்கொண்டு, வாயினால் ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்தது தெரிந்தது. ஆம், அவன் ராமலிங்க சுவாமியின் அருட்பா ஒன்றை மெதுவாகப் பாடிக்கொண்டிருந்தான்.

'தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே—ஒரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே!'

பாலசந்திரனுடைய இனிமையான சங்கீதத்தில் ரகுவிற்கு வழக்கமாக ஆசை உண்டு என்றாலும், இன்று அவனால் அதைச் சகிக்க முடியவில்லை. அவன் அடைந்த தோல்வியே அதற்குக் காரணம். தோல்வியையும் தானாகவே அவன் தீர்மானித்துக்கொண்டு விட்டான். தான் படும் அவஸ்தையைச் சற்றும் கவனியாமல் பாலசந்திரன் பாடுவதில் ரகுவிற்கு வந்த கோபத்திற்கு அளவே இல்லை.

"ஏன், நேரம் ஆகிறதே! வீட்டிற்குப் போவோமே" என்று அவன் பாலசந்திரனைப் பார்த்து உரக்கக் கேட்டான்.

"இவ்வளவு சீக்கிரத்திலா? உனக்கு வீட்டில் வேலை ஏதாவது இருந்தால் புறப்படுவோம். இல்லையெனில் இன்னும் சற்று மணலில் படுத்திருந்து விட்டுத்

தான் செல்வோமே'' என்று பாலசந்திரன் நிம்மதியாகப் பதில் உரைத்தான்.

ரகுவின் மனத்தில் கொந்தளித்துக்கொண்டிருந்த கோபமும் வெறுப்பும் மேலே கிளம்பின.

''எனக்கென்ன வேலை! மணி ஆனதைத் தெரிவித்தேன்; அவ்வளவுதான்'' என்று சீறி விழுந்தான்.

''ஏன் இன்றைக்கு ஒரு மாதிரியாக இருக்கிறாய், ரகு? முள்ளின்மேல் இருப்பதுபோல் வீட்டிற்குப் போக வேண்டும் என்று தொந்தரவு செய்கிறாயே. ஏதாவது வீட்டில் விசேஷமோ சொல்லு; கிளம்பத் தயார் நான்'' என்று சொல்லிவிட்டு, பாலசந்திரன் தான் பாடிய பாட்டின் அடுத்த கண்ணியை அழகாக ராக உணர்ச்சியுடன் பாடினான்.

'நாதர்முடி மேலிருக்கும் வெண்ணிலாவே—அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே!'

''வீட்டில் ஒன்றும் வேலை இல்லை. ஆனால் இங்கே மட்டும் என்ன இருக்கிறது என்றுதான் எனக்குப் புரியவில்லை. வழக்கம்போல என்னிடம் நீ பேசவில்லை. நீ தானாகவே பாடிக்கொண்டும் உன்னையே நினைந்து திருப்தி அடைந்துகொண்டும் இருக்கிறாய்'' என்று தன்னையும் மீறி வார்த்தைகளை விட்டெறிந்தான் ரகு.

ரகுவின் மனம் புண்பட்டிருந்தது. தன் கட்சி தோல்வி அடைந்ததை வெகு சகஜமாகப் பாலசந்திரன் நினைத்ததாக அவனுக்குத் தோன்றியது. அதை மறக்க அவனால் முடியவில்லை. பாலசந்திரனோவெனில், தன்னைப்பற்றித் திடீரென்று புகார் கிளம்பியதை முதலில் சற்றுப் பரிகாசமாகவே கவனித்தான். ஆனால் ரகுவின் வார்த்தைகளில் அடங்கிக் கிடந்த மன வெறுப்பும் சலிப்பும் அவனை மறுபடியும் அவைகளைக் கவனிக்கச் செய்தன. அப்படி ரகு நம் பேரில் எரிந்து விழும்படி என்ன பெரிய அபராதம் செய்தோம் என்றுகூட அவன்

எண்ணலானான். அவனுடைய மனத்தில் சந்தேகங்கள் உண்டாயின. தன்னை ரகு வெறுக்கிறான்போலும்! தான் பேசுவதில் அவனுக்கு வரவர இகழ்ச்சியே அதிகம் ஏற்படுவதாகவும் அவன் நினைக்க ஆரம்பித்தான். அவனை அறியாமலே அவனை மீறி வேகமாக வார்த்தைகள் வெளிக்கிளம்பின.

"உனக்கு இங்கே இருக்கப் பிடிக்கவில்லை, தெரிகிறது. முன்னமேயே சொல்லித் தொலைக்கக் கூடாதா! ஹூம்!" என்று பெருமூச்சு விட்டு எழுந்தான். ரகுவின் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. ரோஷத்தினால் தான் உளறிவிட்டதைப் பாலசந்திரன் நிஜமாகவே கோப வார்த்தைகளென்று நினைத்துவிடப் போகிறானே என்ற கவலை அவனைத் தாக்கியது. பதில் பேச நா எழாமல் அவன் பாலசந்திரனுடன் மனையை விட்டுக் கிளம்பி டிராம் வண்டிப் பாதையின் அருகில் வந்தான்.

இருவரும் பேசாமல் நடந்தார்கள். ரகுவிற்குப் பாலசந்திரனிடம் பேசி மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றுதான் எண்ணம். ஆனால் ஏதோ ஒன்று அவனைத் தடை செய்துவிட்டது. பாலசந்திரன் மாத்திரம் ரகுவின் பக்கம் திரும்பியிருந்தானானால் மன்னிப்பை யாசிக்கும் ரகுவின் விழிகளைக் கண்டிருப்பான். பக்கத்தில் வரும் நண்பனை அவன் கவனித்ததாகவே தெரியவில்லை. தன் உள்ளத்தில் எழும்பிய சங்கடங்களை ஒருவாறு சமாதானப்படுத்திக் கொள்ளுவதற்கு மௌனமாக நடந்து சென்றான். சீக்கிரத்தில் இருவரும் பிரிந்து செல்ல வேண்டிய இடமும் வந்தது. ரகு, ஒரு சமயம், பாலசந்திரன் தன்னைப் பார்த்து ஏதாவது சொல்லுவான் என்றுதான் எண்ணினான். ஆனால் அவன் நினைத்ததற்கு விரோதமாகப் பாலசந்திரன் ஒன்றும் பேசாமல் வேகமாகப் போய்விட்டான். ரகு தன் பங்களாவின் கேட்டிலிருந்து வீட்டு வாசலை அடைந்துவிட்டதைக்கூட உணராமல் நடந்துகொண்

டிருந்தான். பாலசந்திரனும் ஹாஸ்டலில் தன் அறைக்குச் செல்லும் மாடிப் படியில் தன் எதிரே வந்துகொண்டிருந்த மற்றொரு சிநேகிதனையும் கவனியாமல் ஏறித் தன் அறையில் சென்று நாற்காலியில் சாய்ந்தான்.

மறு நாள் காலையில் பாலசந்திரன் படுத்திருந்த அறையின் ஜன்னலின் வழியாகச் சூரிய கிரணங்கள் பளிச்சென்று பிரகாசித்துக்கொண்டிருந்தன. மணி 8-30 இருக்கும். சோம்பல் அதிகமாக இருந்ததால் படுக்கையை விட்டுப் பாலசந்திரன் எழுந்திருக்கவில்லை. அடுத்த அறையில் இருந்த சிநேகிதன் ஒருவன் குறும்புச் சிரிப்புடன் உள்ளே வந்து, ஒரு கடிதத்தை நீட்டினான். இருவருக்கும் பழக்கமான கையெழுத்தில் அக்கடிதத்தின் பேரில் விலாசம் எழுதப்பட்டிருந்ததைக் கவனித்துவிட்டு உள்ளே வந்தவன் சொன்னான்: "என்ன பாலு, நேற்றுச் சாயங்காலந்தான் உங்கள் இருவரையும் கடற்கரையில் சந்தித்தேன். இவ்வளவு சீக்கிரம் காலையில் ரகு உனக்குக் கடிதம் எழுதக் காரணம் என்ன? சண்டை ஒன்றும் போட்டுக்கொள்ளவில்லையே? ஏதாவது வாய் வார்த்தை வளர்ந்து, மன்னிப்புக் கேட்டுக் கடிதம் எழுதிவிட்டானா?" என்று விஷமமாகவே வினவினான்.

பாலசந்திரன் கையில் கிடைத்த கடிதத்தை உற்றுக் கவனித்துவிட்டு, அதை அப்படியே மேஜையின் மேலே எறிந்துவிட்டு, பல் விளக்கத் தன் அறையினின்றும் வெளிக்கிளம்பியது அவனுடைய சிநேகிதனுக்கு எதிர்பாராத விதமாகத் தோன்றவே, அவனும் ஏமாந்தவனாகத் தன் அறைக்குச் சென்றான். பிறகு தனியாக இருக்கும்பொழுதுதான் பாலசந்திரன் தனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான்.

அன்புள்ள நண்பனுக்கு,

நேற்றுச் சாயங்கரம் உன்னைக் கோபத்துக்குள்ளாக்கியதற்காக மன்னிக்க வேண்டும். பல்வேறு காரணங்களால் மனம் நிம்மதியற்று அவ்விதம் நான் நடந்து கொண்டேன். ஏதோ வீட்டில் தொந்தரவுங்கூட உண்டு. என்னைச் சற்றும் வித்தியாசமாக எண்ண உன் இளகிய மனம் இடங்கொடாது என்று பூர்ணமாக நம்பும்,

உன் பிரியமுள்ள

ரகு.

நீண்டதான ஒரு கடிதம் தனக்கு ரகு எழுதியிருப்பான் என்று அதைப் படிக்கும் வரையில் நினைத்துக்கொண்டிருந்த பாலசந்திரனுக்கு இவ்வளவு சுருக்கமாகவும், கேவலம் மரியாதைக்காக எழுதின மாதிரியும் காணப்பட்ட கடிதத்தை என்ன செய்வது என்று புரியவில்லை. சுக்கு நூறாக அதைக் கிழித்து மூலையிலிருந்த கூடையில் எறிந்தான். கடிதத்தின்மேல், 'அவசரம்' என்று எழுதியிருந்ததையும் வந்த ஆத்திரத்தில் கவனிக்கவில்லை பாலசந்திரன். கோபம் மனத்தை வாட்ட ஜன்னலின் வழியாக அவன் வெளியே பார்த்தவண்ணம் பிறர் காதில் கேட்கக் கூடிய குரலில் சொல்லிக் கொண்டான்:

"என்ன தலைபோகும் கவலை என்று இப்பொழுதும் சொல்லவில்லை. எனக்குத் தெரிந்தால் என்ன மோசம் வந்துவிடும்? குத்தலாக வேறு, 'இளகிய சுபாவம்' என்று என்னை இடித்துக் காட்டுகிறான். சரி, இதற்குப் பதில் செய்கிறேன், பார்!"

மணி பத்து இருக்கும். சட்டக் காலேஜில் முதல் மணிப் பாடத்தைக் கவனிக்க இஷ்டம் இல்லாதவனாய், பாலசந்திரன் தன் பெயரைக் கூப்பிட்டவுடன் பதில் உரைத்துவிட்டு மெதுவாகச் சந்தடியின்றிக் கீழே இறங்கி விரைவாக நடந்தான். பிராட்வே மூலையில்

நின்றும், அங்குள்ள ஹோட்டல்களில் காபி அருந்தியும் பொழுது போக்கும் இதர மாணக்கர்களுடன் நிற்காமல் மறைவாகவே அவன் சென்றான். என்ன ஆனாலும் சரி, ரகுவைச் சந்திக்கக் கூடாது என்று மாத்திரம் தீர்மானித்திருந்தான். ஆகையால் தன்னை ரகு கண்டு பிடித்துவிடுவானோ என்று பயந்து வழக்கமாகத் தான் இருக்கும் இடங்கள் ஒன்றிலும் தான் தென்படாவண்ணம் சென்றுகொண்டிருந்தான். ரகுநாதனுக்கு அன்று ஆயுஷ்ய ஹோமமானதால் வீட்டில் விருந்து சாப்பிட்டுவிட்டுக் காலேஜுக்கு வரப் பன்னிரண்டு மணி ஆகிவிட்டது. முதல் இரண்டு மணிப் பாடங்களையும் பாலசந்திரனிடமிருந்து தெரிந்துகொள்ளலாம் என்று அவன் நினைத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். ஆனால் அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக, பாலசந்திரனுடைய உருவம் ஓரிடத்திலும் காணப்படவில்லை. யாரைக் கேட்டாலும அவனைக் கண்டதாகவே சொல்லவில்லை.

பாலசந்திரன் கடற்கரைக்கு வழக்கத்தைவிடச் சீக்கிரமாக வந்து அங்கே வெயில் அதிகமாக இருந்ததால் சற்று நிழலைக் கொடுத்த ஒரு சிறு படகின் பக்கத்தில் நன்றாகத் தன்னை மறைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் மனம் ஒன்றிலும் செல்லவில்லை. எவ்விதம் ரகுவைத் தன்னிடம் இதுவரையும் காட்டாத விதம் மரியாதையுடன் நடக்கச் செய்வது என்றுதான் அவன் யோசித்துக்கொண்டிருந்தான். முதலில் தோன்றியது: ரகுவை அன்று முழுவதும் பாராமல் இரவு தபாலில் பதில் கடிதம் ஒன்று அவனுக்குப் புத்தி வரும்படி எழுதி அனுப்புவது என்று. பிறகு அது ஒருகால் அவ்வளவு அவனை வேதனை செய்யாமற் போனால் என்ன செய்வதென்று தோன்றியதும், எவ்விதமாவது அவன் கண்ணில் தான் மாத்திரம் தென்படாமல் இரண்டு மூன்று நாட்களாவது இருந்தால், தன் வழிக்கு நிச்சயம் அவன் வருவான் என்ற முடிவிற்கு வந்தான்.

மணி இரவு ஒன்பது இருக்கும். ரகு மறுபடியும் வீட்டை விட்டுக் கிளம்பிப் பாலசந்திரனை ஹாஸ்டலில் காணுமல் சமுத்திரக் கரையில் மறுபடியும் ஒரு தரம் தேடிவிட்டு வரவேண்டுமென்று கிளம்பினுன். கடற் கரையில் எங்கும் நிலவொளி பிரகாசமாக இருந்தது. காற்று வீசிக்கொண்டு அலைகளை மேலும் மேலும் கிளப்பிக்கொண் டிருந்தது. கடற்கரைக் காற்றை வாங்கிவிட்டு அநேகர் வீடு திரும்பும் சமயம். ஒவ் வோரிடத்தில் மாத்திரம் ஓரிரண்டு பேர்கள் தனியாக உட்கார்ந்திருந்தார்கள். ஏழைகள் சிலர் கவலை இல்லா மல் அங்கே கிடக்கும் சிமெண்ட் ஆசனங்களில் படுத்துச் சுகமாக நித்திரை செய்தனர். கவலை அற்ற தூக்கத்திற்கு அவர்களுக்கு என்ன குறைவு? ரகு சமுத்திரத்தின் அலைகளின் சமீபம் நெருங்கினுன். தூரத்தில் கட்டுமரம் ஒன்று அலைகளின்மேல் தத்தளிப்பதைப் பார்த்துத் தன் மனம்போல் அது தவிப்பதை நன்கு உணர்ந்தான். 'இனி அவனை இன்று ராத்திரி காண்பது அரிது. மறு நாள்தான் காண வழி தேட வேண்டும் என்று அவன் உள்ளம் சொல்லியது. கவலை தோய்ந்த முகத்துடன் மறுபடியும் திருவல்லிக்கேணி பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தான்.

கொஞ்ச தூரம் இவ்வித மனப் போராட்டத்துடன் செல்லுகையில் திடீரென்று எதையோ கண்ணில் கண்ட வன்போல் ரகு மிரள மிரள விழித்துப் பார்த்தான். ஆம், சந்தேகம் இல்லை, பாலுதான் அந்த ஹோட்டல் வாசலில் நின்றுகொண்டு வெற்றிலையை வாயில் போட்டுக்கொண் டிருந்தான். அவ்வளவுதான்! ரகுவின் கால்கள் ஆவே சத்துடன் அவனை நோக்கி ஓடின. எதிரில் பலமாகச் சப்தித்துக்கொண்டு வந்த ஒரு மோட்டார் பஸ்ஸின் வேகத்தையும் அவன் அறியவில்லை. மறு நிமிஷம், 'ஐயோ!' என்னும் குரல் அக்கூட்டத்தினின்றும் கிளம்பி யாவரையும் கலவரப்படுத்தியதுடன், பாலசந்திரன் காதிலும் விழுந்தது. கூட்டம் சூழ்ந்திருந்த இடத்திற்

குப் பாலுவும் ஓடிச்சென்று பார்த்தான். அங்கே அவன் கண்ட காட்சி மனத்தை அப்படியே கலக்கி விட்டது. ரகுவின் தேகம் கீழே பிரக்ஞை அற்றுக் கிடந்தது. யாரோ ஒருவர் மட்டும் குனிந்து ரகுவின் நாடியைப் பார்த்துவிட்டு, "உயிர் இருக்கிறது; பயம் இல்லை. ஆனால் உடனே டாக்டர் வேண்டும்" என்றார். பாலசந்திரனுக்கு மனம் பதறியது. அவனுடைய இளகிய மனம் இப்பொழுது என்ன செய்ய முடியும்? ரகுவின் ஆபத்தை நீக்க முடியுமா?

# பட்டுச் சட்டை

சுந்தரம் கதர் அபிமானி. காலேஜில் வாசிக்கும் காலில் இன்னும் அதிகமாகவே கதர் உடுத்துவதும் காந்திக் குல்லாய் தரிப்பதுமாகப் பார்ப்பதற்குக் காங் கிரஸ் மறியல் தொண்டர்களில் ஒருவனே எனச் சந்தேகிக்கத் தக்க விதம் இருப்பான். இப்பொழுது சம்பாத்தியம் தேடும் முறையில் பட்டணத்தில் அட்வ கேட்டாக மாறியபடியால், கொஞ்சம் கொஞ்சமாகத் தேசத் தொண்டில் உத்ஸாகம் குறைந்து, சுத்தக் கதர் வாங்குவதிலிருந்து சுதேசிச் சாமான்களுக்கு வந்து விட்டான். "கதர்ச் சட்டையைக் குழந்தைகளுக்கு அடிக் கடி தோய்த்துப் போட்டால் கிழிந்துவிடுகிறது. விலை யும் அதிகம். இந்நாளில் கட்சிக்காரன் தம்படி தராமல் ஏமாற்றும்பொழுது கதர் யார் வாங்குகிறது?" என்று அவன் மனைவி சொல்லும் வார்த்தைகள் சில சமயங் களில் அவன் மனத்திலுங்கூடச் சரி என்று பட்டன.

ஒரு நாள் மூன்றரை மணிக்கே சுந்தரம் கோர்ட்டை விட்டுக் கிளம்பினான். பஸ்ஸில் ஏறியதும் அவன் சிநேகி தன் கல்யாணராமனும் வந்து சேர்ந்தான். இருவரும் ஒரு ஸ்டாப்பிங் பிளேஸில் கீழே இறங்கி, 'குல்லாராம்' என்று பெயர் போட்டிருந்த துணிக்கடையில் புகுந்தார்கள். கடைக்காரரும் முகத்தில் சிரிப்புடன் ஸலாம் வைத்து, வந்தவர்களுக்கு என்ன தேவை என்று வினவினார். கல்யாணம், 'ஸில்க்' என்று சொன்னதும், முதலாளி தன் பக்கத்தில் இருந்த ஆளைக் கூப்பிட்டு அவர்களை மேலே அழைத்துக்கொண்டு போகும்படி உத்தரவு செய்தார். மெத்தையில்தான் பட்டு உருப்படிகள் வைக்கப்பட்டிருந்தன. இருவரும் மேலே சென்றதும் மின்சார விளக்குகளை ஏற்றிவிட்டான் கடைக்காரன்.

கேட்கவேண்டுமா? பட்டுகளெல்லாம் அந்த விளக்கொளி யில் வெகு நேர்த்தியாகவே காணப்பட்டன. சுந்தரத்திற்கு ஒரு நிமிஷம் தன் ஆயுளில் ஒரு தரங்கூட இந்தப் பட்டு களைத் தான் தரிக்காததைக் குறித்து வருத்தம் தோன் றியபோதிலும் தன் தியாகத்தை அது நிரூபிக்கிறது என்ற எண்ணம் உடனே பின் தொடர்ந்ததால், அது தன் உயர்வையே எடுத்துக் காட்டியது என்று அவை களைப் பார்த்துக்கொண் டிருந்தான்.

அநேகவிதமான பட்டுகள் காண்பிக்கப்பட்டன. வந்தவர்களை மலைக்கச் செய்வதுபோல் கடைக்காரரும் அவைகளைக் குவியல் குவியலாக மேஜையின்மேல் சுமத்தினார். அழகிய பச்சை வர்ணக் கோடுகளுடன் காணப்பட்ட ஒரு தினுசைக் கடைக்காரர் காண்பித்து, "இதில் நல்ல ஷர்ட்டுத் தைத்துக்கொள்ளலாம்" என்றார். சுந்தரத்திற்குக் கொஞ்சம் அதன் விலை என்ன என்று அறிய ஆவல் உண்டாயிற்று. கடைக்காரரும், "இதன் விலை, கஜம் ஒண்ணே கால் ரூபாய்தான். ரொம்ப மலிவு. முன்னே இதை ஐந்து ரூபாய் கொடுத்தால்கூட நாங்கள் விற்கிறதில்லை. இப்பொழுது இந்த விசேஷச் சரக்கை விற்பனையின் சுணக்கத்தினால்தான் இம்மாதிரி குறைந்த விலைக்குக் கொடுக்கிறோம்" என்று சொன்னான்.

கல்யாணமும் சுந்தரத்தைப் பார்த்து, "ஏன், ஒன்று வாங்கிப் போடு. பாதகமில்லை. ஒரு ஷர்ட்டு உன் சுதேசி அபிமானத்தை ஒன்றும் குறைத்து விடாது" என்று தூண்டினான். கடைக்காரனும், "நீங்கள் வேண்டுமானால் ஒரு ரூபாய்க்கே எடுத்துக் கொள்ளுங்கள்" என்று ஆசை காட்டினான். சுந்தரத் தின் பல நாள் தீர்மானத்திற்கு ஆபத்து அணுகியது. பட்டை வாங்கிக்கொண்டு வீடு திரும்பினான்.

சுந்தரம் வீடு திரும்பும்பொழுது, தன் மனைவி பார்த்துப் பரிகாசம் செய்தால் என்ன செய்வது

என்று யோசித்தான். போகும்பொழுதே வழியில் இருக்கும் தையற்காரச் சாயபுவிடம் அந்தப் பட்டைக் கொடுத்துவிட்டு அளவையும் கொடுத்தால் தன் மனைவிக்கு உடனே அந்தச் சமாசாரம் தெரியாதல்லவா? இவ்விதம் தீர்மானித்துத் தையற்காரனிடம் பட்டைக் கொடுத்துவிட்டான்.

இரவு சுந்தரத்திற்குத் தூக்கமே இல்லை. அந்தச் சட்டையைத் தரித்துக்கொண்டு எங்கெல்லாம் போகலாம் என்ற எண்ணம் அவன் மனத்தை நித்திரையில் செல்லாமல் அடித்தது. இரண்டு நாட்களில் கொண்டு வருகிறேன் என்று உறுதியாகச் சொன்ன சாயபுவிடம் கொடுத்துப் பத்து நாட்கள் ஆகிவிட்டன. இதற்குள் சுந்தரமும் நாளைக்கு மூன்று தரம் தானாகவே தையற்காரன் கடைக்குச் சென்று கோபித்தும் அதட்டியும் மிரட்டியும் பார்த்தும் பயனில்லாமல் சும்மா இருந்தான். பிறகு ஒரு நாள் சாயந்தரம் சாயபு ஷர்ட்டுடன் சுந்தரத்தின் வீட்டிற்கு வந்தான். அந்தச் சட்டையை அணிந்துகொண்டு கண்ணாடியில் தன் ரூபத்தைப் பார்த்ததும், சுந்தரத்திற்குத் தான் யார் என்றுகூடத் தெரியவில்லை. அந்தப் பட்டு, தன்மேல் பட்டும் படாமலும் புதிய உணர்ச்சியை உண்டுபண்ணியது. அது தன் மானக்கேட்டை ஞாபகப்படுத்தியதால் சிறு வேதனையையும் மூட்டியது. மெதுவாகச் சட்டையைக் கழற்றி வைத்தான். கடற்கரைக்கு உடனே போட்டுக்கொண்டு போகலாம் என்றாலோ யாராவது தெரிந்தவர்கள், தான் கதரை அணியாமல் பட்டுச் சட்டையைத் தரித்திருப்பதைக் கண்டு பரிகாசம் செய்ய நேரிடுமாதலால் அன்றைத்தினம் அவ்வளவு வெளிப்படையாகப் போட வேண்டாமென்று நினைத்துத் தன் பீரோவில் அதை வைத்துப் பூட்டினான். வழக்கம் போல் கதர்ச் சட்டையைப் போட்டுக்கொண்டு, 'பீச்'சைப் பார்க்க நடந்தான்.

இரண்டு மாதங்கள் கழித்து ஒரு ஞாயிற்றுக் கிழமை; சங்கீதக் கச்சேரிக்கு அவசியம் அந்தப் பட்டுச் சட்டையைப் போட்டுக்கொண்டு போவதென்று தீர்மானித்தான் சுந்தரம். ஆனால், 'அங்கே வேர்த்துக் கொட்டும்; பட்டுச் சட்டையெல்லாம் நனைந்து வீணாகி விடும். வேறு எங்கேயாவது போகும்பொழுது போட்டுக் கொள்ளலாம்' என்ற தீர்மானத்திற்கு வந்தான். மெதுவாக மடிப்புக் கலையாமல் அந்தச் சட்டையை இருந்த இடத்திலேயே வைத்துவிட்டு வழக்கம்போல் கதர் அங்கியைத் தரித்துக்கொண்டு கவலையில்லாமல் கச்சேரியை அநுபவித்து வீடு திரும்பினான்.

இரண்டு மூன்று மாதங்கள் சென்றன. கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்ற பிரமுகரின் வீட்டுக் கல்யாணத்திற்குச் சுந்தரமும் அழைக்கப்பட்டான். நிச்சயமாக இந்தக் கல்யாணத்திற்கு அந்தச் சட்டையைப் போட்டுக் கொண்டு போவது என்று அன்று வரையில் எண்ணியவன், கல்யாண தினத்தின் காலையில் ஆலோசித்தான். யோசிக்க யோசிக்கச் சந்தேகங்களே அதிகரித்தன. 'காலையில் முகூர்த்தத்திற்குப் போனால் சந்தனம் கொட்டுவார்கள்; சட்டையில் பட்டுக் கெட்டுவிடும். ஆகவே பின்னால் பார்த்துக்கொள்வோம்' என்று, சுந்தரம் வழக்கம்போல் கதர் உடுத்துச் சென்று கல்யாணம் விசாரித்து வீட்டுக்கு வந்தான்.

அநேகமாக அந்தச் சட்டையைக் கையால்கூடத் தொடாமல் பீரோவில் வைத்துப் பார்த்துக்கொண்டே இருந்த சுந்தரத்திற்கு, எப்படியாவது ஒரு தரம் அதை நல்ல விசேஷ சமயத்தில் பத்துப் பேர் பார்க்கும் பொழுது ஷோக்காகத் தரித்துக்கொண்டு போக வேண்டுமென்ற ஆசை அதிகமாக இருந்தது. ஜட்ஜ் சுப்பராவிடமிருந்து ஒரு நாள் அழைப்புப் பத்திரம் ஒன்று வந்தது. தன்னைப் பெரிய மனிதர்களின் கோஷ்டியில் சேர்த்ததைக் குறித்துச் சுந்தரத்திற்கு

வந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. தலைக் கிராப்பை நன்றாகத் தைலம் போட்டு வாரி, தூய வெளுப்பு வஸ்திரம் ஒன்றை அழகாகக் கட்டிக் கொண்டு பட்டுச் சட்டையை உள் பனியனின்மேல் போட்டுக்கொண்டு வெளிக் கிளம்பினான். அன்றைத் தினம் ஜட்ஜ் சுப்பராவின் வீட்டிற்கு வந்த கனவான்களில் அநேகர் அழகிய பட்டாடைகள் தரித்து வந்தார்கள். தானும் அவர்களுக்குச் சிறிதும் சளைக்காமல் பட்டுச் சட்டையைப் போட்டுக்கொண்டு வந்ததில் சுந்தரத்துக்கு வெகு திருப்தி. தனக்குத் தெரிந்தவர்களில் சிலர் கும்பலாக ஒரு புறம் வீற்றிருப்பதைப் பார்த்து, அவர் களை அணுகினான். இதற்குள் பின்னால் ஒருவர், "என்ன சுந்தரம், போஸ்டாபீஸ் பலமாக இருக்கே" என்று சிரித்தார். சுந்தரம் திரும்பிப் பார்த்து, "ஓகோ, கோபாலசாமியா?" என்று வினவவும், அவர், "உம் மைத்தான், முதுகில் ஏது இவ்வளவு பெரிய போஸ் டாபீஸ் வைத்திருக்கிறீர்கள்? ஜட்ஜ் வீடு என்று இந்தச் சட்டையைப் போட்டு வந்தீரோ?" என்று ஏளனமாகப் பேசினார். சுந்தரத்திற்கு வயிற்றில் பகீரென்றது. கையால் முதுகில் நெருடினான். எவ் வளவு சிரமப்பட்டும் ஒட்டையின் அளவு கைக்குப் புலப்படவில்லை. அக்கம் பக்கத்திலுள்ளவர்களை மறந் தான். அதே ஞாபகமாக இருந்தான். ஜட்ஜ் சுப்பராவும் வந்தவர்களை ஒவ்வொருவராகப் பார்த்துப் பேசினார். பிறகு அவன் சமீபத்தில் வந்து, "சுந்தரம், முதுகில் என்ன?" என்று கேட்கவும், அவன் பதில் சொல்ல வகையற்றவனாய், "ஒன்றும் இல்லை" என்று உளறிக்கொண்டே எழுந்து நின்றான்.

எல்லோரும் போஜனம் உண்டு வீடு திரும்பினார் கள். சுந்தரத்திற்கு மாத்திரம் சாப்பாடு இறங்கவே இல்லை. தன் அறையில் வந்து சட்டையைக் கழற்றிப் பார்க்கையில் அதன் முதுகில் அரை அங்குல நீள ஒட்டை ஒன்று பூச்சியின் வேலையால் அமைந்

திருந்தது. சுந்தரத்திற்கு வந்த கோபத்திற்கும் துக்கத்திற்கும் கங்குகரை இல்லை.

மறு நாள் காலையில் தையற்கார சாயபுவிற்கு ஆள் ஒருவன் வெகு வேகமாகச் சென்றான். சாயபுவும் ஏதோ புதிய வேலை வந்திருக்கிறது; இல்லாவிட்டால் இவ்வளவு சீக்கிரம் தன்னை வரச் சொல்ல மாட்டார்கள் என்று நம்பிக்கொண்டு வேகமாகவே வந்து சேர்ந்தான். அவன் வாசற்படி ஏறுவதற்குள் சுந்தரம் இரைந்த குரலில், "என்ன சாயபு! இந்த அநியாயத்தைப் பார்த்தீரா? இதை நீர்தானே தைத்தது?" என்றான். சாயபு சட்டையைப் பார்த்துக்கொண்டே ஒன்றும் புரிந்துகொள்ளாமல், "என்னுங்க, பிடிக்குதுங்களா? சரிபண்ணித் தாரேன்" என்று சொன்னான்.

"இல்லை, அதன் முதுகைப் பாரும்" என்று சுந்தரம் தாங்கின குரலில் சொன்னான். சாயபு சட்டையை எடுத்துத் திருப்பிப் பார்த்துக்கொண்டே, "அரேரே! பூச்சி அடிச்சுட்டுதுங்களா? நாளாச்சுங்கோ" என்றதும் சுந்தரம் ஆத்திரத்துடன், "புதிய சட்டை, ஒரு நாள்கூட நான் போட்டுக்கொண்டு வெளியே போகவில்லையே" என்றான். "பட்டுச் சட்டையை ரொம்ப ஜாக்கிரதையாக வைக்கணுங்க" என்றான் சாயபு.

"இதைவிட யார் ஜாக்கிரதை செய்வார்கள்?"

மறுபடியும் சாயபு, "என்ன செய்யணுங்க? ஒட்டுப் போட்டால் நல்லாத் தெரியுங்க. நம்ப கிட்டே பட்டு இருக்குதுங்க. வேறே சட்டை அளகாத் தச்சுத் தாரேன், போட்டுக்குங்க" என்று சொன்னான்.

சுந்தரத்தின் காதில் சாயபுவின் வேண்டுகோள் விழவே இல்லை. 'போதும் பட்டுச் சட்டை!' என்று முணுமுணுத்துக்கொண்டே அதை எடுத்து அப்புறம் எறிந்தான்.

# பிராயச்சித்தம்

## 1

என் பக்கத்து வீட்டில் இந்த வருஷம் மாப்பிள்ளைக்குத் தலை தீபாவளி. கேட்க வேண்டுமா அமர்க்களத்திற்கு! நான்கு நாளைக்கு முந்தியிருந்தே அவர்கள் வீட்டில் பட்டாசு சுடும் சப்தமும், பட்சணங்களின் வாசனையும் கிளம்பிக்கொண்டிருந்தன. எனக்கு இருந்த வேலைத் தொந்தரவிலும் அலுப்பிலும் அவைகளைக் கவனிக்கப் பொழுதில்லை. ஆனால் என் பையன் ராஜுவால் சும்மா இருக்க முடியவில்லை. அவன் அடுத்த வீட்டில் நடப்பவைகளைக் கூர்மையாகக் கவனிப்பதையும், அவன் அக்கா ஜயாவிடம் அவ்வப்பொழுது அங்கே நடக்கும் ஒவ்வொன்றையும் விடாமல் சொல்லிக்கொண்டிருப்பதையும் நான் இரண்டொரு தடவைகளில் கவனித்துவிட்டேன். குழந்தைகளின் சுபாவத்தை நன்கு அறியாதவனாதலால், அவ்விருவரும் உத்ஸாகத்துடன் பக்கத்து வீட்டில் நடப்பவைகளைப்பற்றிப் பேசுவது சரியல்ல என்று நான் மிகவும் கண்டித்தேன். அப்மாதிரி கண்டிப்பது நியாயம என்றுதான் என் மனத்திற்குப் பட்டது.

ராஜுவிற்கு எப்பொழுதும் அடுத்த வீட்டு மணியுடன் போட்டியும் சண்டையுந்தான். மணிக்கு அவனுடைய தாய் புதிய சட்டை, துணிமணிகளை வாங்கித் தரவேண்டியதுதான் தாமதம், ராஜுவுக்கு அவனுடன் ஏதாவது தகராறு ஏற்பட்டுவிடும். என் காதில் ஏதாவது சண்டை, இரைச்சல் விழுந்தால் உடனே அவர்கள்பேரில் நான் எரிந்து விழுவேன். ஜயாதான் ராஜுவுக்கும் மணிக்கும் சமாதான உடன்படிக்கைகளைச் செய்து வைத்து, ஒருவாறு வீட்டில் அமைதியை உண்

டாக்குவாள். நான் என் வேலைகளையே அதிக ஊழலாக வைத்துக்கொண்டு மன்றுடியதால், குழந்தைகளின் குறைகளைக் கவனிக்க முடியாமல், அவர்கள் காரியம் என்றாலே முழுவதும் தொந்தரவு என்ற மாத்திரம் நினைக்கலானேன். அதிலும் யாரைப்பற்றியாவது அவர்கள் சந்தோஷத்துடனே, பிறர் வீட்டில் நடக்கும் காரியங்களைப்பற்றித் தங்களுடைய சிற்றறிவிற்குத் தகுந்தவாறு பேசிக்கொண் டிருந்தால், உடனே நான் அவ்வாறு பேசும் பழக்கம் நல்லதல்லவென்று ஒரு சிறு பிரசங்கம் செய்துவிடுவேன். இதனால் அவர்களுக்கு என்னிடம் மொத்தத்தில் பயமே மேலிட்டது.

என் மனைவி இறந்து இப்பொழுது பத்து வருஷங்கள் ஆகின்றன. எனக்கு இவ்விரு குழந்தைகளையே தான் அவள் விட்டுச் சென்றாள். ஜயாவிற்கு இப்பொழுது பதினைந்து வயது ஆகின்றது. சென்ற வருஷந் தான் அவளுக்குக் கல்யாணம் ஆயிற்று. என் மாப் பிள்ளைக்குப் புனாவில் வேலை. இந்த வருஷம் லீவு கிடைக்காததால் தனக்கு வர முடியாத செய்தியை எனக்கு எழுதி யிருந்தான். இந்த மாதிரி விஷயங் களில் எனக்குப் பற்றுதல் அவ்வளவாக இல்லாததால் மாப்பிள்ளை வராததுபற்றி அதிகம் கவலைப்படவில்லை. ஒரு விதமாக, அந்தரங்கத்தில், கவலை ஒன்று நீங்கின தாகவே நினைத்தேன். ஆனால் ஜயாவிற்கு மாப்பிள்ளை வராததைப்பற்றி என்ன தோன்றியது என்று நான் அறியக் கொஞ்சங்கூடக் கவலைப்படவில்லை. அவளு டைய கல்யாணத்தை நான் அதிகச் செலவு செய்யாமல் முடித்துவிட்டேன். சாதாரணமான குடும்பங்களில் முக்கியமாக நடத்தும் சில கல்யாணச் சடங்குகளைக்கூட வேண்டாம் என்று தீர்மானமாக நிறுத்தி, ஊருக்கே நான் ஒரு பெரிய நல்ல காரியம் செய்த மாதிரி பெருமை அடைந்தேன். என்னை யாராவது சிநேகிதர் கள் கேட்டால்கூட, 'எல்லாம் நாமாகச் செய்யும் கூத்துகள். குழந்தைகள் கேட்கிறார்களா, அது வேணும்

இது வேணும் என்று! பெரியவர்கள் அநாவசியமான காரியங்களையும் வம்பையும் வாங்கிப் போட்டுக்கொண்டு பிற்பாடு குழந்தைகளுக்காக என்று முடிக்கிறார்கள்' என்று கூறி நான் அவர்கள் வாயை அடைத்துவிடுவது வழக்கம். ஒரு தடவையாவது, குழந்தைகளும் என் மாதிரியே அபிப்பிராயங்களை வைத்திருக்கிறார்களா என்று நான் யோசித்ததில்லை. ஜயாவின் சிநேகிதிகளின் கல்யாணங்கள் வெகு விமரிசையாக நடந்ததைப்பற்றி யாராவது ஜயாவுடன் பேசிக்கொண்டிருந்தால், அந்தப் பேச்சில் அவள் கலக்காமலே இருந்துவிடுவாள். என் மனத்தில் ஏதாவது வித்தியாசமாகப் பட்டுவிடப் போகிறதே என்று தெரிந்தோ என்னவோ, ஜயா ஒரு சமயங்கூட மனக் குறை தனக்கு உண்டு என்று அறிவித்ததில்லை. என் பாடு இதனால் சௌகரியம் ஆகிவிட்டது. மனைவி இறந்து மறு விவாகம் செய்துகொள்ளாததே பெரிய தியாகம் என்று நான் எண்ணியிருந்தேன். குழந்தைகளுக்கு எப்படியும் தாயில்லாக் குறை குறைதானே என்று எனக்கு எவ்வாறு தோன்றக் கூடும்!

ராஜுவுக்கு ஜயா மாதிரி சமர்த்தாக இருக்கத் தெரியாது. அவன் ஜயாவைவிட ஐந்து வயது சிறியவன் ஆனதாலும் இன்னும் உலகத்தை நன்கு அறியாததாலும் தன் மனத்தில் உள்ளவைகளை என்னிடம் அவ்வளவு மறைக்க முயலுவதில்லை.

தீபாவளிக்கு முந்திய தினம் சாயந்தரம் மழை கொட்டிக்கொண்டிருந்தது. ஐப்பசி மழையானதால் விடாமல் பெய்தது வழக்கம்போல் நான் பந்தடிக்கும் கிளப்புக்குப் போக முடியாமல் வீட்டிலேயேதான் இருக்கவேண்டி வந்தது. முதல் நாள் தினசரிப் பத்திரிகையை எடுத்து முன்னும் பின்னுமாகப் புரட்டிக்கொண்டிருந்தேன். என் வேலையைத் தவிர இதர விஷயங்களில் அதிகமாக

என் புத்தி செல்லாத காரணத்திளுல் பொழுது போக்குவது எப்படி என்ற கவலையையே அடைந்தேன். அப்பொழுதுதான் வீட்டில் எனக்குக் குழந்தைகளை அதிகம் பார்த்துப் பேசும் வழக்கம் இல்லாதது ஞாபகத்திற்கு வந்தது. 'சரி, எங்கே அவர்கள் இருவரும்?' என்று சுற்றிப் பார்த்தேன். அவர்களைக் காணவில்லை. ஜயா மாத்திரம் அடுத்த அறையில் தலையைத் தன் இடது கையால் தாங்கிக்கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்தபடி உட்கார்ந்துகொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும், "ஜயா!" என்று உரக்கக் கூப்பிட்டேன். திடுக்கிட்டு அவள், "என்ன, அப்பா?" என்று வேகமாக எழுந்து என்னிடம் வந்தாள்.

"ராஜு எங்கே?" என்றேன்.

"அவளு?..இப்பத்தான் இங்கிருந்து போளுன்" என்று சொல்லிக்கொண்டே தாழ்வாரத்தின் பக்கம் பார்த்தாள்.

அவள் என்னைத் தொடர, நான் தாழ்வாரத்தைக் கடந்து சமையலறையை நோக்கிச் சென்றேன்.

சமையலறையில் என் சமையற்காரன் அடுப்பில் எதையோ வைத்துப் பார்த்துக் குனிந்துகொண்டிருந்தவன், அதட்டும் என் குரலைக் கேட்டு, சற்றுச் சிரித்த வண்ணம், "ராஜுவா, பூஜை உள்ளே போய்ப் பாருங்கோ, இருப்பான்" என்று சொல்லிவிட்டு, ஜயாவை ஒரு பார்வை பார்த்தான்.

பூஜை உள்ளின் கதவண்டை அவர் போனதும், ராஜுவின் குரலைக் கேட்டு, அவன் அங்கே என்ன செய்கிருன் என்று அறிவதற்குள், ராஜு பின்வருமாறு சொன்னது அவர் செவிகளில் கேட்டது:

"ஸ்வாமி, மணிக்கு அம்மா இருப்பதால்தானே, அவனுக்கு இவ்வளவு கொழுப்பு! அவனையும் என்

ஞட்டமாச் செய்துடேன். உன்னை வேண்டிக் கிறேன்.'

ராஜு கன்னங்களில் நீர் வழிய, மூடிய கண்களுடன் கைகளைக் கூப்பிக்கொண்டு அங்கிருந்த சுவாமி படத்தின் முன்பாக இவ்வார்த்தைகளைச் சொல்லிக்கொண் டிருந்தான்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எதற்காக ராஜு இந்த மாதிரி அசட்டுக் காரியம் செய்கிருன் என்று மாத்திரம் ஆச்சரியமும் கோபமும் ஒருங்கே என் மனத்தில் எழும்பின. என் அறைக்கு மறுபடியும் சந்தடி இன்றி வந்து, ஜயாவைக் கூப்பிட்டு, "என்ன ஜயா, ராஜு ஏன் இப்படி வேண்டிக்கொள்கிருன்?" என்று கேட்டேன்.

"ஒண்ணும் இல்லை, அப்பா! அவன் குழந்தை தானே? தெரியாமல் செய்யருன். மணியோடே சண்டை கிண்டை போட்டிருப்பான். அவனும் வெறுமனே இருக்கிறதில்லை. அவனம்மா சிபாரிசு பண்ணி வாங்கிக் கொடுத்ததை யெல்லாம் ராஜுவுக்குக் காட்டி, ராஜுவையும் தனக்கு வேணும்னு உங்களைக் கேக்கத் தூண்டியிருப்பான். ராஜுவுக்குத்தான் பயமாச்சே உங்களைக் கேக்க? அதனுலே இப்படி யெல்லாம் செய்யருன்" என்று என்னைச் சமாதானம் செய்யும் மாதிரியிலும், ராஜுவின் பக்கமாகவும் சாமர்த்தியமாக ஜயா பதில் சொன்னுள்.

"எதுவானுல் என்ன? இப்படியா குழந்தைகள் வேண்டிக்கொள்ளும்! வெட்கக்கேடு! இதைக் கண்டிக்க வேண்டியதுதான்" என்று சொல்லிக்கொண்டே, "டே ராஜு! இங்கே வாடா" என்று கர்ஜித்தேன்.

பதில் இல்லை. எனக்கு வந்துவிட்டது எரிச்சல். மறுபடியும், "கழுதே! கூப்பிட்டால் வரமாட்டே! நான் வரட்டுமா அங்கே! பூஜை உள்ளே என்னடா பண்றே?"

என்று இங்கிருந்தே கோபித்துக்கொண்டேன். அதனுடன் நிற்காமல் வேகமாக எழுந்து வருவதுபோல் என் நாற்காலியைத் தரையின்பேரில் இழுத்துச் சப்தம் செய்து பார்த்தேன்.

ராஜு மெதுவாகக் கதவண்டை வந்து நின்றான். அவன் கண்கள் ஜயாவைக் கலவரத்துடன் நோக்கியதை நான் கவனித்தேன்.

"என்னடா பூஜை உள்ளே செய்தே! வா இங்கே! சாமியை வேண்டிக்கிறயோ!" என்று அதட்டினேன்.

"ஒண்ணுமில்லே, அப்பா" என்று அவன் தழுதழுத்த குரலில் ஆரம்பிப்பதற்குள், "என்ன! உதைக்கிறேன், பார், பயலே!" என்று விழித்துப் பார்த்தேன்.

ராஜு பயந்து போய்விட்டான். ஆனால் நான் அவனை விடவில்லை.

"ஒண்ணும் பண்ணலையா, தடிப்பயலே? மணிக்கு என்ன ஆகணும்னு சாமியைக் கேட்டே? சொல்லுடா, சொல்லுடா" என்று கேட்டுக்கொண்டே எழுந்திருந்தேன்.

ராஜு பின்னால் நகர்ந்துகொண்டே அழ ஆரம்பித்தான். அவன் கண்ணீரைக் கண்டு என் மனம் இளகவில்லை. கோப வெறி வந்துவிட்டது. ஓங்கின கையை அப்படியே அவன் முதுகில் பளீரென்று வைத்தேன். ராஜு அலறினான். ஜயா, "என்னப்பா, அவனை அடிக்கிறேள்?" என்று என்னைத் தடுக்கப் பார்த்தாள்.

"அடிக்காமல் என்ன செய்யறது! பிள்ளையைப் பார்க்கலே, பிள்ளையை! இவ்வளவு என்ன கெட்ட எண்ணம், முளைக்கிறச்சயே?" என்று வாய்விட்டு என் வெறுப்பை வெளியிட்டேன்.

"அவனுக்கு என்ன தெரியும்? மணி மாத்திரம் சும்மா இருக்கானு? ராஜு கிட்டே வந்து, 'எங்கம்மா, அப்பா கிட்டே சொல்லி இத்தை வாங்கிக் கொடுத்தா, அத்தை வாங்கிக் கொடுத்தா'ன்னுதான் எப்பப் பார்த் தாலும் சொல்றுன். ராஜுவுக்குப் பொறுக்கிறதில்லே. உங்களைக் கேட்டாத்தான் கோவிச்சுக்கிறேளே எப் போதும்; என்னமோ தனக்கு வழி இல்லாததனுலே சொல்லிவிட்டான். வேணும்னு இப்படி வேண்டிண் டான்?" என்று ஜயா சொன்னுள்.

மறுபடியும் அவள், "அவனு ஒண்ணும் பூஜை யுள்ளே போயிடலே. என்னை வந்து அப்பாட்டே சொல் லுான்னுன்; ஏதோ ஹிட்லர் வாணமாமே, அது தனக்கு வேணும்னு சொன்னுன். 'நான் மாட்டேன். மணிக்கு வேறே வேலை இல்லே. எத்தையாவது கிளப்பிவிட்டா னுக்கும்! மணிக்கு நல்ல புத்தியைக் கொடு சாமீன்னு பூஜையுள்ளே போய், சாமியை வேண்டிக்கோ' இன் னேன். அதுதான் இப்படித் தாறுமாறு உளறிவிட்டான் போலே இருக்கு. அவன் மாதிரி இருந்தான்னு நமக்குத் தெரியும் இதெல்லாம்?" என்று தந்திரமாகவும் மேல் பேச்சிற்கு இடம் இல்லாமலும் ஜயா பேசினுள்.

ஜயா வெகு புத்திசாலி; தாய் இல்லாமலே வளர்ந் தவள் ஆதலால், தன்னைவிடச் சிறுவர்களிடம் அவளுக்கு அன்பு அதிகம். அதிநுட்பமாகப் பிறர் மனத்தை அறிந்து நடந்துகொள்வாள்.

இதனுடன் இந்தக் காட்சி முடிவடைந்தது. ராஜு அழ, அவனை அணைத்துக்கொண்டு ஜயா தேற்ற, என் பரிசாரகன் பெரிய விபத்து வீட்டில் நடந்து விட்ட மாதிரி விழிக்க, மனச் சாந்தி இல்லாமல் என் அறையில் போய்ச் சாய்வு நாற்காலியில் படுத்தேன்.

## 2

'அவன் மாதிரி இருந்தான்னு நமக்குத் தெரி யும்?' என்று ஜயா கடைசியாகச் சொன்ன மொழிகள்

என்னை ஆழ்ந்த யோசனையில் ஆழ்த்திவிட்டன. ஸ்ரீராமன் காட்டிற்குச் சென்றதும் துயரம் தாங்காத தசரதன், தான் சிறு பிராயத்தில் செய்த பெரிய அகிருத்தியம் ஒன்றை நினைந்து, அதன் பலன்தான் ராமனை விட்டுப் பிரிய நேர்ந்தது என்று தன் தேவிமார் களிடம் சொல்லிக்கொண்டே இறந்தான் என்பதாக ராமாயணத்தில் படித்தது, என் ஞாபகத்திற்குப் பளிச் சென்று வந்தது.

ஆம், நானும் ஒரு காலத்தில் சிறுவனாக இருந்தது உண்டு என்று என் மனம் சொல்லியது. எனக்கும் குழந்தைகளுக்கெல்லாம் இருப்பதுபோல் விளையாட்டி லும் தீனியிலும் ஆசை அதிகம் உண்டு. தீபாவளி வந்து விட்டால் என்ன பாடு படுத்திவிடுவேன்! முக்கியமாக ஒரு சம்பவம் என் ஞாபகத்திற்கு வராமல் இல்லை. ராஜூவைவிட எனக்கு ரோஷம் அதிகம். எனக்குச் சிறு வயதிலேயே தாயும் தகப்பனும் இறந்தார்கள். எங்கள் வீட்டில் கொஞ்சம் கண்டிப்பு அதிகம். என் சகோதர சகோதரிகள் நான் தப்புத் தவறு ஏதாவது செய்து விட்டால் சீக்கிரம் மன்னிக்க மாட்டார்கள். என்னை யாராவது வேடிக்கையாகச் சொல்லிவிட்டால்கூட எனக் குப் பொத்துக்கொண்டு விடும். அப்புறம் எவ்வளவோ நாளாகும், என் மனத்தில் அந்தப் புண் ஆறுவதற்கு.

எங்கள் வீட்டின் எதிரில் இருந்த ஒரு பெரிய பணக்கார வக்கீலின் புதல்வனான ரங்கு எனக்குப் பரம சிநேகிதன். அக்காலத்தில் அவன் வீட்டில் அவனுடைய தகப்பனார், தாய், மற்றும் எல்லாருமே அவனை அன்பாகவும், அவன் இஷ்டம்போல் கேட்டவைகளைக் கொடுத்தும், விளையாட்டிற்குச் செல்லுவதைத் தடை செய்யாமலும் இருப்பார்கள். இதற்கெல்லாம் விரோதம் எங்கள் வீட்டு வழக்கம். நான் விளையாடச் செல்வதை ஒருவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். எதையாவது சொல்லிக் கண்டிப்பார்கள். சில சமயங்களில்

அதனால் எனக்கு ரங்குவின்பேரில் பொறாமைகூட ஏற்படும்.

ஒரு நாள் சாயங்காலம் வழக்கம்போல் சிறுவர்களான நாங்கள் எல்லோரும் பள்ளிக்கூடம் விட்டதும், 'புட்பால்' ஆடுவதற்காகப் பெரிய மைதானத்தை அடைந்தோம். ரங்கு வருவதற்கு அன்று தாமதம் ஆயிற்று. ஏனென்றால் அவன் தகப்பனாருக்குக் கொஞ்ச காலமாகக் காய்ச்சலாக இருந்தது; அன்று கொஞ்சம் அதிகம் என்று எனக்குத் தெரியும். அவன் வீட்டில் அன்று காலையிலிருந்தே டாக்டர்கள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவேளை ரங்கு வராவிட்டால் ஆட்டமே இல்லாமல் இருந்துவிடுமோ என்றுகூட எங்களிலே சிலருக்குச் சந்தேகம். ஆனால் ரங்கு கொஞ்ச நேரத்திற்குள் வந்துவிட்டான். வந்ததும் நாங்கள் இரு கட்சிகளாக நின்றோம். பந்தை நடுவில் வைத்து, உதைப்பதற்கு ஏற்பாடு செய்தோம். முதல் உதை கொடுக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டியது. நான் பந்தை எதிர், 'கோலி'ல் தள்ளிவிட்டால், என் கட்சிக்கு ஜயம். அதை எதிர்ப்பதற்கு ரங்கு என் முன்னால் நின்றுகொண் டிருந்தான். எதிர்பாராத விதமாக என் முதல் உதையில் கிளம்பிய பந்து, எல்லோருடைய தலைகளுக்கும் மேலாகச் சென்று நேராகக் 'கோலி'ல் புகுந்துவிட்டது. அவ்வளவுதான்; என் பக்கத்தில் உள்ளவர்கள் எல்லோரும், 'கோல், கோல்' என்று கத்தினார்கள். ரங்கு மாத்திரம், "இல்லை இல்லை, தப்பு! நான் தயார் என்று சொல்வதற்குள் அவன் உதைத்துவிட்டான்" என்று அவர்கள் எல்லோரையும் விட அதிக உரக்கக் கத்திக்கொண் டிருந்தான். அதனுடன் நிறுத்திக்கொள்ளாமல் ரங்கு என்னைப் பார்த்து, "இல்லாவிட்டால், இவன் உதைத்து, இப்படிப் பந்து பறக்குமோ! ஒருகாலும் இல்லை!" என்று வெகு ஏளனமாக என்னைக் குறித்துச் சொன்னது என்னால் தாங்க முடியவில்லை. ரங்கு நல்ல ஆட்டக்காரன்தான்.

அவனவ்வளவு நன்றாக ஆட எனக்குத் தெரியாதுதான். இருந்தாலும், 'ஒரு நாள் ஏதோ நானும் நல்ல ஆட்டம் ஆடினால் அதைப் பொறுக்க முடியவில்லையே ரங்குவி னால்! அவன் ஆட்டத்தை நான் தினம் எவ்வளவு புகழ்ந் திருக்கிறேன்!' என்று நினைத்தபொழுது என் இருதயம் உடைந்துவிடும்போல் எனக்கு உணர்ச்சி உண்டா யிற்று. அதனால் என் பக்கத்தில் உள்ளவர்கள் பணிந்து போக முயலுவதைப் பார்த்து ஆத்திரத்துடன், "அது, 'கோல்' தான். சந்தேகம் இல்லை" என்று நான் விடாமல் வாதாடினேன்.

இந்தச் சண்டை அதிகம் வளர்ந்தது. பையன் கள் எல்லோரும் ஒருவிதமாக இதை முடித்து, மறு ஆட்டம் ஆடலாம் என்று என்னைத் தணிந்து போகும் படி கேட்டார்கள். நான் அந்த ஆட்டத்தை ஒப்புக் கொண்டால்தான் மேலாட்டம் தொடங்கலாம் என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டேன். வந்துவிட்டது கோபம் ரங்குவிற்கு. "வாங்கோடா, போகலாம்! இனிமே இவனோடே யார்ரா ஆடுவா!" என்று சொல்லி, என்னை ஒரு முறை முறைத்துவிட்டுத் தன் கட்சிக்காரர்களையும் என் பக்கத்தில் உள்ளவர்களையும் கூட அழைத்தான். என்னுடன் ஒருவரும் சேர மாட்டேன் என்றார்கள். "இவன் இப்படித் தாண்டா, விடமாட்டான் சண்டையை! ரங்கு சொல்றது சரி. நாமும் இவனோடே இனிமேல் ஆடறதில்லை, போ!" என்று மிகவும் வெறுப்புடன் சொல்லிவிட்டுச் சென்றார்கள்.

தனியே மைதானத்தின் நடுவில் நான் மாத்திரம் உட்கார்ந்துவிட்டேன். உதைத்த பந்தும் கேட்பார் இல்லாமல் கொஞ்ச தூரத்தில் தனியே கிடந்தது. இவ்வுலகிலேயே நான்தான் தனி என்று எண்ணி என் மனம் துக்கத்தால் அளவு கடந்து பொங்கியது. 'எல்லாம் எதனால்? ரங்குவிற்கு அப்பா இருப்பதால்தானே

அவனை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்?' என்று, எனக்கு இருந்த அவமானம் பொறாமையாக மாறி விட்டது. 'அவனுக்கு இருப்பதுபோல எனக்கும் அப்பா உயிருடன் இருந்தால் இப்படியெல்லாம் எல் லோரும் என்னை விட்டுவிட்டு ஓடிவிடுவார்களா? அவன் தான் என்னை இவ்வளவு அலட்சியம் செய்வானா? ஒருகாலும் இல்லை. எல்லாம், நாளை அவன் அப்பா செத்தால் அவனும் என் மாதிரிதானே!' என்னும் கெட்ட எண்ணம் என் உள்ளத்தினுள்ளே ஏற்பட்டது.

வீடு வந்து சேர்ந்தேன். ஒருவரிடமும் நான் பேசவில்லை. அன்றிரவு தூங்கவும் முடியவில்லை. ஏதேதோ எண்ணங்கள் என் தூக்கத்தைக் கெடுத்தன. மெதுவாக வெகு நேரம் கழித்துக் கண் அயர்ந்து விட்டேன். வெகு நேரம் கழித்துத் தூங்கியதால் பொழுது விடிந்ததும் சீக்கிரம் எழுந்திருக்க முடிய வில்லை. கண்களைத் திறந்ததும் என்னை எழுப்பிய ஓசை எதிர் வீட்டிலிருந்து கிளம்பிய அழுகைதான். உடனே படுக்கையை விட்டு எழுந்து ஜன்னலண்டை போய்ப் பார்த்தேன். எதிர் வீட்டின் வாசலில் ஒரே கூட்டமாக இருந்தது.

பாவம்! ரங்குவின் தகப்பனார் காலமாகி விட்டார்! உடனே, முந்தின சாயங்கால நினைவுகள் என்னைத் தாக்கின. 'ஐயோ! என்ன தப்பிதம் செய்துவிட் டோம்! ஒருகால் ரங்குவின் தகப்பனார் இறந்ததற்குக் காரணம் என் கெட்ட எண்ணந்தானோ?' என்று என் மனம் போராடியது. என் வயிற்றில் ஏதோ சங்கடம் செய்ய ஆரம்பித்தது. ஓடிச் சென்று, ரங்குவிடம் என் பிழையை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்போமா என்றுதான் முதலில் தோன்றியது. பிறகு, சிறுவனான படியால் சாவு வீட்டிற்குத் தனியே செல்லப் பயமாக இருந்தது. என் வீட்டில் இருந்தவர்கள் எல்லோரும் காலையிலேயே எதிர் வீட்டிற்குச் சென்றிருந்தார்கள்.

நான் மாத்திரம் குற்றவாளியைப்போல் வீட்டில் தனியே தவித்துக்கொண் டிருந்தேன்.

இரண்டு மூன்று தினங்கள் கழித்து ரங்குவைப் போய்ப் பார்ப்பதென்றுதான் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு கிளம்பினேன். ரங்கு என்னைக் கண்டதும் அழுவானே என்று எண்ணவும் என் மனம் தயங்கிவிட்டது ஆனால் நடந்தது என்னவோ வேறு. ரங்குவும் அவன் சகோதரர்களும் பம்பரம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ரங்கு என்னைப் பார்த்து அழாததற்குக் காரணம் அவனுடைய வருத்தப்படத் தெரியாத சுபாவந்தான். என் மனத்திலிருந்த கவலையைக் கொஞ்சம் கொஞ்சமாக மறந்தேன். அவனிடம் தனியாகச் சொல்ல எண்ணியவைகளைச் சொல்லவும் அவகாசம் கிடைக்கவில்லை. பிற்காலத்திலும், ரங்குவும் நானும் தனித்தனியே எங்கள் பிழைப்பு வழிகளில் சென்றுவிட்டதால், ஒரு பொழுதும் அவனிடம் நான் அன்று பட்ட சிரமத்தைச் சொல்லிக்கொள்ளச் சந்தர்ப்பம் நேரவில்லை.

## 3

இம்மாதிரி பழைய நினைவுகள் தோன்றியதில் என்னையே சற்று மறந்தேன். வெளியில் மழையும் நின்றிருந்தது. கூரையிலிருந்து ஜலம் சொட்டும் சத்தந்தான் கேட்டுக்கொண் டிருந்தது. இன்று சாயந்தரம் நடந்ததை மறுபடியும் நினைத்துக்கொண்டேன். திடீரென்று என் சாய்வு நாற்காலியை விட்டு எழுந்தேன். என் பையில் மணிபர்ஸ் ஒன்றைப் போட்டுக் கொண்டு வெளிக் கிளம்பினேன். கொஞ்ச தூரம் சென்றதும் ஞாபகம் வந்தது: 'ஏதோ புதிய வாணம் ஒன்றை ராஜுவிற்கு மணி காண்பித்ததிலிருந்து அல்லவா அவனுக்கு நேரிட்டது இந்த விபத்து? அதன் பெயர் என்ன?' - எனக்கு இருந்த மனக் கலவரத்தில் அதை

முழுவதும் மறந்துவிட்டேன். ஜயாவைக் கேட்டால் தெரியும் என்று மறுபடியும் வீடு திரும்பி வந்து சேர்ந்தேன். ஜயாவின் அறையில் அவள் படுக்கையில் அவள் உட்கார்ந்திருக்க, அவள் மடியில் தலையை வைத்துக்கொண்டு ராஜு படுத்திருந்தான்.

"அக்கா, அப்பா கோவிச்சுண்டிருக்காளா, ரொம்ப?" என்று ராஜு பாதி மூடிய கண்களுடன் வினவ, ஜயா, "இல்லை. நீ தூங்கு! போது விடிஞ்சா தீபாவளி; அப்பா வாங்கித் தந்த புது வேஷ்டியைக் கட்டிண்டு நமஸ்காரம் பண்ணிஞ மறந்து போயிடுவா" என்று அவனைக் கையால் தட்டிக்கொண்டே சொல்லியது என் காதில் விழுந்தது. எனக்கு என் மேலேயே அருவருப்பு உண்டாயிற்று. 'என் மனைவி இறந்த நாளிலிருந்து ஜயாவிற்குத்தான் எத்தனை கவலைகளை நான் வைத்துவிட்டேன்! அவள்தான் என்ன பொறுமைசாலியாக இருக்கிருள்!' என்று நினைக்கவும் என் கண்கள் கலங்கின. 'நாமாகவே எதையாவது வாங்கி வருவோம். ஜயாவிடங்கூடச் சொல்ல வேண்டாம்; பட்டாசு, மத்தாப்பு வாங்கச் செல்வதை' என்று தீர்மானித்து மறுபடியும் சந்தடியின்றி வெளிக் கிளம்பிப் பட்டணம் போனேன்.

* * * *

பொழுது பொலபொலவென்று விடியவும், பக்கத்து வீட்டில் மேளமும் பட்டாசு வாணத்தின் சப்தமும் கேட்டன. ராஜு அவசரமாக எழுந்திருந்தான். அவன் எதிரில் படுக்கையின் பக்கத்தில் பெரிய பட்டாசு மூட்டையும், புதிய ஹிட்லர் வாணமும் வைத்திருப்பதைப் பார்த்து, "அக்கா, அக்கா, இதெல்லாம் ஏது?" என்று ஜயாவைக் கூப்பிட்டுக் கேட்டான். ஜயா உள்ளே வந்து, அவன் பக்கத்தில் உட்கார்ந்து அங்கிருந்த

பட்டாசு மூட்டையைக் கண்டு ஒன்றும் புரியாமல் என்னைப் பார்த்தாள். "ஹிட்லர் வாணங்கூட இருக்கேடா, ராஜு!'' என்று அவளும் ஆச்சரியத்தில் சொன்னாள். ராஜு என்னைப் பார்த்தான். நான் எல்லாவற்றையும் அறிந்தமாதிரி சிரித்தேன். "எல்லாம் உனக்காகத் தாண்டா, ராஜு! போ! காட்டு எல்லாத்தையும் இப்போ மணிக்கு'' என்றேன்.

மறு நிமிஷம் ராஜு மாயமாகப் பறந்து மணியின் வீட்டிற்குள் சென்றான்.

ராஜுவின் சந்தோஷத்தைப் பார்ப்பதே நான் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் என்று சொல்லவும் வேண்டுமா?

# பரிசு

## 1

ஸரஸ்வதி காதில் விழுந்த சப்தத்தால், பக்கத்து அறையிலிருந்த தன் கணவன் ஏதோ கதையோ நாவலோ எழுதிக்கொண்டிருக்க வேண்டுமென்று ஊகித்தாள். சாதாரணமாக அவள் கணவன் எழுதும் பொழுதெல்லாம் எதையாவது புஸ்தகத்தைக் காணுமல் அதைத் தேடும் முயற்சியில் இம்மாதிரி தட்டுவதும் கொட்டுவதுமாக இருப்பது வழக்கம். நாற்காலியைப் பின்னுல் தள்ளி அது தரையின்மேல் உராயும் சப்தமும், மேஜையின் 'டிராயர்'களை அடிக்கடி இழுத்துச் சாத்தும் சப்தமும் கலந்து வரவே, ஏதோ தடபுடல் படுவதுபோல் அவளுக்குத் தோன்றியது. மெள்ள எட்டிப் பார்த்தாள், கணவன் இருக்கும் அறையை.

ஆம்; சூடாமணி எதையோ தேடிக்கொண்டு மேஜையின்மேல் உள்ளவைகளையும் டிராயரில் இருக்கும் கடிதங்கள், காகிதம் முதலியவைகளையும் பெரிய கூளமாக ஆக்கிக்கொண்டிருந்தான்.

"என்ன தேடுகிறீர்கள்? நானும் தேடட்டுமா?" என்று ஸரஸ்வதி சொல்லித் தன் புருஷனுக்கு அநுசரணையாகக் கலைந்து கிடந்த புஸ்தக அடுக்குகளையும் காகிதங்களையும் சரியாக ஒழுங்குபடுத்தி வைக்கும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கினுள்.

"உனக்கு எப்படி அகப்படும், நான் வைத்தது? நேற்று எனக்கு வந்த சீமைத் தபால்களில் ஒன்று முக்கியமானதென்று எங்கேயோ தனியாக எடுத்து வைத்தேன். இப்பொழுது அகப்படமாட்டேன் என்கிறது. இந்த இழவு மேஜையில் வைத்தால்தான் எதுவும் இருக்

கிற இடத்தில் இருப்பதில்லையே'' என்று தீராக் குறையாக வேறு யாரையோ கடிந்துகொள்வதுபோல அவன் சொன்னான்.

ஆனால் இமைப்பொழுதில் ஸரஸ்வதியின் கூர்மையான கண்கள் ஒரு புஸ்தகத்தின் உள்ளிருந்து கொஞ்சம் வெளியே தென்பட்ட நீலவர்ணக் காகிதத்தை எப்படியோ கண்டுகொண்டன. உடனே சட்டென்று அவள் அதைப் புஸ்தகத்திலிருந்து எடுத்துவிட்டாள்.

சூடாமணி ஒரு தாவலாகப் பாய்ந்து அவள் கையிலிருந்து அதைப் பிடுங்கிக்கொண்டு, "ஆமாம். இதுதான் நான் தேடுவது; அப்பா! நானே ஜாக்கிரதையாக வைத்துவிட்டு, காணவில்லை என்று என்ன திண்டாட்டம் திண்டாடினேன்!'' என்று சொல்லிக்கொண்டே கடிதத்தையும் அதனுடன் சேர்த்துக் குண்டூசியினால் இணைக்கப்பட்டிருந்த ஒரு பத்திரிகைத் துண்டையும் பார்த்து மறுபடியும் மறுபடியும் அதில் எழுதியிருந்தவைகளைத் தனக்குள்ளேயே வாசித்துக்கொண்டான்.

அவனுக்கு அவ்வளவு உத்ஸாகத்தை ஊட்டும் விஷயம் அதில் என்ன இருந்ததென்று அறியும் ஆவல் ஸரஸ்வதிக்கு அதிகரித்ததால், "என்ன கடிதாசு அது? அதனுடன் ஏதோ அச்சிட்ட பத்திரிகைத் துண்டு கூட இருக்கிறதே'' என்று கேட்டாள்.

"ஆமாம்; உனக்கென்ன தெரியும்? நீதான் சதா தமிழைத் தவிர வேறு ஒன்றையுமே தொடுவதில்லையே. என் ஆங்கில நாவலைப்பற்றிய விமரிசனங்கள் எவ்வளவு வந்தாகிவிட்டன! இதுவும் அம்மாதிரி விமரிசனங்களில் ஒன்று. லண்டனில் பெரிய பத்திரிகையான, 'மான்செஸ்டர் கார்டியன்' என்ன எழுதுகிறது பார், என் புஸ்தகத்தைப்பற்றி. நீயே வாசி; உனக்குத்தான் அர்த்தம் சொல்ல வேண்டியதில்லையே. இதோ ஜானகிராமன் எழுதியிருக்கும் கடிதத்தையும் பார்; என் புஸ்தகத்-

தைப்பற்றிச் சீமையில் அமர்க்களப்படுகிறதாம்!" என்று சொல்லும்பொழுதே அவனுடைய உள்ளம் பூரித்து, முகத்தில் சற்று முன்பு தாண்டவமாடிய கடுகடுப்பெல்லாம் எங்கேயோ பறந்து சென்றது. ஸரஸ்வதி அவன் தன்னிடம் நீட்டிய காகிதத்தையும் ஆங்கிலத்தில் இருந்த பத்திரிகைத் துண்டையும் கையில் வாங்கிக் கொள்வதற்குள் மறுபடியும் சூடாமணி, "பார்த்தாயா ஜானகிராமன் சொல்வதை? எங்கே பார்த்தாலும் உயர் குடும்பப் பெண்களும் ஆண்களும் என் புஸ்தகத்தைப்பற்றித்தான் சீமையில் பேசுகிறார்களாம். ஜானகிராமன் நல்ல பெரிய மனுஷர்களின் பழக்கம் உடையவன் அல்லவா? அவன் சொல்வது சரியாகவேதான் இருக்கும்" என்றான்.

ஸரஸ்வதி இதற்குள், 'மாஞ்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையில் வெளிவந்த விமரிசனத்தை வாசித்தாள். அதில் சூடாமணி, இந்தியாவிலிருந்து சமீபகாலத்தில் எழுதிய எழுத்தாளர்களுள் மிகவும் போற்றத்தக்கவன் என்றும், அவனுடைய புதிய நாவல் இந்தியச் சமூக வாழ்க்கையின் அடிப்படையான பழக்கங்களை அப்படியே பிரதிபலித்துக் காட்டுவதாலேயே சிறப்புடையதாக விளங்குகின்றது என்றும் சொல்லியிருந்தது. மேலும் அவனுடைய கதை, தன் தேசத்து மனிதர்களின் குற்றங்களையும் பிற நாட்டார் உணர்ந்து கொள்ளும் விதத்தில் கவனித்து எழுதியிருப்பதாலேயே, இதுகாறும் ஒருவரும் எழுதாத விதம் தனிப்பட்ட உயர்வுடன் அமைந்திருப்பதாகவும் கண்டிருந்தது. கேட்க வேண்டுமா சூடாமணியின் ஆனந்தத்திற்கு! போதாததற்கு ஜானகிராமன், ஐ. ஸி. எஸ். வேறே கடிதம் எழுதிவிட்டான், சூடாமணியின் பெயர் சீமையில் அடிபடுவதைப்பற்றி.

ஸரஸ்வதிக்கு இதிலெல்லாம் வெகு திருப்திதான். கணவன் சிறப்புடன் ஆங்கிலத்தில் எழுத்தாளனாக

ஆவதில் அவள் மனத்தில் சந்தோஷம் பொங்கியது. "ஆமாம், எனக்குக் காட்டத்தானே தேடினீர்கள் இதை? அதற்கு அவசரம் என்ன? மெதுவாகச் செய்திருக்கலாமே. பாருங்கள், உங்கள் மேஜையின் அலங்கோலத்தை!" என்று கணவன்மேல் வாஞ்சையுடனே அவள் பரிகசித்தாள்.

அதற்கு அவன், "உனக்காக அல்ல நான் அதைத் தேடியது. நம் 'ஜயந்தி'யில் அதைத் தமிழில் மொழி பெயர்த்து, விளம்பரம் செய்யும்படி என் சிநேகிதன் ரமாகாந்தனைக் கேட்கலாம் என்றுதான் அதைத் தேடினேன்'' என்றான்.

ஸரஸ்வதி சற்று நிதானித்தாள். மறுபடியும் அவள், "நீங்கள் எதற்காக நேரில் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும்? 'ஜயந்தி' காரியாலயத்தில் நிச்சயம், 'மாஞ்செஸ்டர் கார்டியனை' வரவழைப்பார்கள். வேண்டுமானால் அவர்களாக உங்கள் புஸ்தகத்தைப்பற்றிச் சீமையில் எழுதிய விவரத்தை வாசகர்களுக்குத் தெரிவிக்கட்டும். நீங்கள் ஒன்றும் நேரில் சென்று பார்க்க வேண்டாம்'' என்று கணவனது கௌரவத்தில் தனக்குள்ள அக்கறையைக் காட்டினாள்.

"போடி பைத்தியமே! உனக்கென்ன தெரியும்? நாமாக எல்லாம் செய்துகொள்ளவும் வேண்டித்தான் இருக்கிறது, இந்த நாளில். இல்லாவிட்டால் யார் கவனிக்கிறார்கள்? சீமையில் இந்த நாவலைப் பிரசுரித்ததற்குக் காரணங்கூட அதுதான். நம் ஊரில் வாசிக்கிறவர்களே மிகவும் குறைவு. அதிலும் விஷயம் புரிந்தவர்களே இல்லை. என்ன தமிழ்ப் பத்திரிகைகள் உண்டாகியிருக்கின்றன? நல்லதாக விஷயமோ கதையோ எழுதப்பட்டிருக்கிறதா? இங்கே இவைகளை நிர்ணயிக்க வேண்டிய இலக்கிய ருசி அறிந்தவர்கள்கூட இல்லையே'' என்று இகழ்ந்து பதில் கூறினான்.

"இங்கே வாசிக்காமல் என்ன? நீங்கள்தாம் தமிழைக் கண்டால் பழிக்கிறீர்கள். என்ன என்ன பெயர்கள் தமிழ்க் கதைகளுக்கு வைத்திருக்கிறார்கள் தெரியுமா! உள்ளேயும் விஷயம் நன்றாகத்தான் இருக்கிறது. எல்லாம் ஆங்கிலப் புஸ்தகங்களை வாசித்துத்தான் எழுதுகிறார்கள், இந்நாளில். நீங்கள்கூடத் தமிழில் உங்கள் கதைகளை எழுதுங்கள்; அப்புறம் உங்கள் பெயர்தான் இங்கே முதலில் நிற்கும். பரீக்ஷை வேண்டுமானால் செய்து பார்க்கலாம்" என்று மன்றாடும் தொனியில் ஸரஸ்வதி கணவனைப் பார்த்துச் சொல்லலானாள்.

சூடாமணி சற்று நேரம் ஒன்றுமே வாயைத் திறக்கவில்லை. மறுபடியும் அவன், "இந்த ஊரில் என்ன இருக்கிறது? தமிழ்ப் பத்திரிகை ஒன்றைவிட ஒன்று மோசமாக இருக்கிறது. இதை நம்பி எழுதினால் எழுதுகிறவர்களுக்கு அபக்கியாதிதான் ஏற்படும். மேல் நாடுகளில் எழுதும் தொழில் உடையவர்கள் என்றும், எழுதும் தொழிலை மேற்கொள்ளாத மற்ற இனத்தார் என்றும் இரு வகையாக எழுத்தாளர்களைப் பிரித்து அவரவர்கள் சக்திக்கு ஏற்றவாறு பிரசுரிக்கும் பழக்கத்தையும் வைத்திருக்கிறார்கள். இங்கே எழுதத் தெரியாதவர்களே அதிகம். அவர்கள் நம்முடன் போட்டி போடுகிறார்கள். வாசிக்கிறவர்களோ அதைவிட மேல். எல்லாந்தான் ஒன்றாக அவர்களுக்குப் பட்டுவிடுகிறதே! சரியான முறையில் புஸ்தகங்களை விமரிசனம் செய்பவர்கள் முதலில் உண்டா இங்கே? அதுதான் கிடையாதே" என்று பிரசங்கம் ஒன்றை ஆவேசத்துடன் செய்தான்.

ஸரஸ்வதிக்கு மேலே பேச்சை வளர்க்க இஷ்டமில்லை. மெதுவாக அவ்விடத்தைவிட்டுத் தன் அறைக்குள் சென்றுவிட்டாள். சூடாமணி எழுந்து தன் ஷர்ட்டை மாட்டிக்கொண்டு அதன் பையில்,

'மாஞ்செஸ்டர் கார்டியன்' பத்திரிகைத் துண்டைப் போட்டுக்கொண்டு அங்கவஸ்திரத்தையும் கழுத்தில் தொங்கவிட்டு வெளிக் கிளம்பினான்.

## 2

'ஜயந்தி' காரியாலயத்தில் உதவியாசிரியர் என்று போடப்பட்டிருந்த அறையின் முன்னால் இருந்த ஒரு நாற்காலியில் சூடாமணி வீற்றிருந்தான். ஒரு பையன் அறையின் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தான். "ஸார், உங்களை உள்ளே வரச் சொல்றார்" என்று அவனைத் தன்னுடன் அழைத்துச் சென்றான்.

உள்ளே ரமாகாந்தன் சிரித்த முகத்துடன் சூடாமணிக்கு இடம் கொடுத்து, எதிரில் உட்காரும்படி செய்தான். "என்ன சூடாமணி, எங்கே காண்பதில்லை? ஏதாவது எழுதிக்கொண்டிருக்கிறாயா?" என்றான். சூடாமணிக்கு ஏமாற்றந்தான் உண்டாயிற்று. தன்னைக் கண்டதுமே அவன், 'மாஞ்செஸ்டர் கார்டியனி'ல் வெளியான விமரிசனத்தைப்பற்றி ஞாபகமாகக் கேட்பான் என்று நம்பியதால், இன்ன பதில் சொல்வது என்று புலப்படாமல் சற்றுத் தயங்கிவிட்டான். இருந்தாலும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, சட்டைப்பையில் வைத்திருந்த சீமைப் பத்திரிகையின் துண்டை எடுத்து அவனிடம் நீட்டி, "என்னவோ, சீமையில் எனக்கு நல்ல புகழ்தான். இங்கேதான் உன்னைப்போல் உள்ள சிநேகிதர்களால் உபகாரமே இல்லை. இதை நீ பார்த்தாயோ? உங்கள் காரியாலயத்துக்கு, 'மாஞ்செஸ்டர் கார்டியன்' கூட வரணுமே" என்று அவாவுடன் வினவினான்.

ரமாகாந்தன் அதை வாசித்துவிட்டு, முகத்தில் சற்றும் மாறுதல் இல்லாமல், "பார்த்தேன்; இது அவர்கள் வழக்கந்தான். யாராவது இந்தியாவிலுள்ள சமூகப் பழக்க வழக்கங்களைச் சற்றுப் பரிகாசமாக

எழுதினால் அதைப் பிரமாதப்படுத்திவிடுவார்கள். இது அவர்கள் தொழில் ஆயிற்றே. அதுவும் உன் புஸ்தகத்தில் நம்முடைய கல்யாணங்களைத் திட்டியிருக்கிறாய். கேட்பானேன், அவர்கள் திருப்திக்கு!” என்று சொல்லிவிட்டான்.

சூடாமணிக்கு முதலில் ஏமாற்றமும், பிறகு கோபமும், முடிவில் வெறுப்பும் மாறி மாறி வந்தன. அவை அனைத்தும் ஒரு கணப்பொழுதில்தான். தன்னை மீறிவிடாமல் கோபம் தொனிக்கும் வார்த்தைகளில் மாத்திரம், “சரி, ஏதாவது சிறு காரியம் என்று வந்தால்கூட உன்னால் நடவாதுபோல் இருக்கிறது. போதாததற்கு என்னைப் பிறர் புகழ்ந்தால், அதில் ஒன்றும் அர்த்தமில்லை என்று சொல்வதுகூட நியாயம் என்பது உன் எண்ணமாக்கும்! போய் வருகிறேன்” என்று எழுந்திருந்தாள்.

ரமாகாந்தன் உடனே சற்று மாறிய குரலில், “அடடா, தப்பாக எண்ணிவிட்டாயா! மன்னிக்க வேண்டும். அப்படி ஒன்றும் நான் இகழ்ந்து சொல்லி விடவில்லை. ஏன் தமிழில் எழுதக் கூடாது? கதைகளுக்கு நல்ல விஷயம் நம்மிடம் இல்லையா? எழுதேன். என்ன பாடுபடும் இந்த ஊர், அப்பொழுது! உனக்கு வேண்டிய விளம்பரம் நானே செய்கிறேன். இந்த வருஷ, ‘ஜயந்தி’ மலருக்கு ஏதாவது எழுது, பார்ப்போம். இதனால் கௌரவமேதான் உனக்கு. சீமையில் புகழ் பெற்ற பெரிய எழுத்தாளர்கூட எங்கள் தமிழ்ப்பத்திரிகையில் எழுதுகிறார் என்றால், வாசகர்களுக்கு மட்டும் அல்ல, ‘ஜயந்தி’ காரியாலயத்தில்கூட ஒரு தனிப் பரபரப்பு ஏற்படும். வேண்டுமானால் பார்” என்று உரத்த குரலில் ரமாகாந்தன் பேசிச் சூடாமணியைக் கேட்டுக்கொண்டான்.

“சரி. என்னவோ சால்ஜாப்புச் சொல்லி அனுப்புகிறாய். ஆமாம், ‘ஜயந்தி’ மலரில் யாரெல்லாம் எழுது

கிறார்கள்?" என்று சூடாமணி ரமாகாந்தனைக் கேட்டதற்கு, அவன், "எங்களுக்குப் பெரிய பெயர்களில் நம்பிக்கை இல்லை. அவரவர்களின் யோக்கியதையில் தான் மதிப்பு. எழுதத் தெரிந்தவர்கள் யாராக இருந்தாலும் நன்றாயிருந்தால் போடுவோம். ஒரு பெரிய பரிசு கூட விளம்பரம் செய்திருக்கிறோம். நல்ல கதையானால் அதற்கு ரூபாய் 500 பரிசு என்று தெரிவித்திருக்கிறோம்" என்று மேஜையின்மேல் வைத்திருந்த கொட்டை எழுத்தில் பதிப்பித்த ஒரு தாளை எடுத்து அவனிடம் காண்பித்தான். சூடாமணி என்னவோ யோசனை செய்துவிட்டு, "வருகிறேன். பிற்பாடு பார்க்கிறேன் உன்னை" என்று விடைபெற்றுக்கொண்டு வீடு திரும்பினான்.

## 3

ஸரஸ்வதியும் தமிழில் ஏதேதோ எழுதுகிறாள் என்பது சூடாமணிக்குச் சிறிதளவேதான் தெரியும். ஆனால் அவள் எழுதுவதை அவன் வாசித்ததில்லை. என்ன எழுதுவாள் என்று தெரிந்துகொள்ளவும் ஆசைப்பட்டதில்லை. தன் புஸ்தகங்களையும் கதைகளையும் அவள் வாசித்து அநுபவித்தால் அவனுக்குச் சந்தோஷந்தான். ஆனால் அதற்குப் பதிலாகக்கூட அவளிடம் அவள் எழுதுவதை வாசிக்க வேண்டும் என்று கேட்டதில்லை. அவளும் புனைபெயரில் எழுதுவதால், வேறு யாராவது சூடாமணியிடம் வந்து அவளைப்பற்றியும் அவள் கதைகளைப்பற்றியும் சொல்வதற்கு இடமில்லை ஸரஸ்வதிக்கு நிஜமாக யோசனை கூட உண்டு: கணவனுக்குத் தன்னைப்பற்றிப் பரிகாசமாகத்தான் படும், தான் எழுதியவைகளை வாசிப்பதில், என்று தயங்கினாள். இரண்டொரு தடவைகளில் பத்திரிகை ஆசிரியர்கள் அவளை உத்ஸாகப்படுத்திக் கடிதங்கள் எழுதியது உண்டு. ஆனால் தன்னைப்பற்றிய குறைவான நம்பிக்கையால், பெண்கள் எழுதும்

கதைகளைப்பற்றி அப்படித்தான் அவர்கள் தூக்கிச் சொல்லுவார்கள் என்று அவைகளைக் கணவனிடம் தெரியப்படுத்தினதில்லை. மேலும், 'அவர் ஆங்கிலத்தில் எழுதுகிறார். சீமையில் கியாதி பெற்றிருக்கிறார். எனக்கு என்ன எழுதத் தெரியும், அவர் வாசிக்கும்படி?' என்பது அவளுடைய கடைசி முடிவு.

கதைப் போட்டிப் பரிசின் விளம்பரத்தைப் படித்த தினத்திலிருந்தே அவளும் எதையாவது நிச்சயம் எழுத வேண்டும் என்று தன் மனத்தினுள் ஆசையை வளர்த்தாள். ஒருவரும் பார்க்காதபடி தன் அறையில்தான் அவள் எழுதுவது வழக்கம். ஒரு சௌகரியம் அவள் வீட்டில். கணவன் ஒரு பொழுதும் அவளுடைய எழுதும் திறமையைச் சந்தேகித்துக்கூடக் கேட்காததால் தன் இஷ்டம்போல் எழுதுவதும், அதைப்பற்றி யாராவது அவளிடமே, எழுதியவள் அவள் என்பதை அறியாமல் சொன்னால் அதைக் கேட்டுச் சந்தோஷப்படுவதுமாக இருப்பாள். ஒவ்வொரு சமயம் கணவனிடம் தான் எழுதியதைக் காட்டி ஏதாவது திருத்தம் செய்துகொள்ளலாமா என்ற யோசனை எழுந்தாலும், அவன் பரிகாசத்தையும் தமிழைப்பற்றி இகழ்வதையும் நினைத்தவுடன் வேண்டாம் என்று தோன்றிச் சும்மா இருந்துவிடுவாள்.

தன் கணவனும், 'ஜயந்தி' வருஷ மலரில் கதைப் போட்டிக்கு ஒரு கதை எழுதும் சமாசாரம் அவளுக்குக் கொஞ்சங்கூடத் தெரியாது. ஆகையால் தன் ஆற்றலை எல்லாம் கொண்டு ஒரு சிறு கதையை எழுதி ரகசியமாகத் தபாலில் சேர்த்துவிட்டாள். பிற்பாடு அதைப்பற்றிய நினைவையும் மறந்திருந்தாள்.

சூடாமணி, தான் எழுதி அனுப்பிய கதையை வாசித்து நிச்சயம் போட்டிக் கதைகளைத் தேர்ந்தெடுக்க நியமிக்கப்பட்டவர்கள் பிரமிப்பார்கள். தன் பெயரைப் பார்த்தே தனக்குப் பரிசைக் கொடுக்க

நேரிடலாம் என்று நினைத்துப் பத்திரிகை ஆசிரியருக்கு ஒரு கடிதமும் தன் கதையுடன் அனுப்பியிருந்தான். தன் பெயரை மாற்றி எழுதியிருந்த காரணத்தையும் அதில் குறித்திருந்தான்.

'ஜயந்தி' வருஷ மலர் வருவதற்கு முன்னமேயே காரியாலயத்திலிருந்து சூடாமணி வீட்டிற்கு இரு கடிதங்கள் வந்தன. வாசலில் மல்லிகைப் பந்தலின் கீழே புஷ்பங்களைக் கொய்துகொண்டு நின்ற ஸரஸ்வதி இரண்டு கடிதங்களையும் வாங்கிக்கொண்டு உள்ளே சென்று கணவனிடம் அவனுக்கு வந்த கடிதத்தை மாத்திரம் கொடுத்தாள். சூடாமணி தன் பெயருக்கு வந்த கடிதத்தை ஆவலுடன் பிரித்துப் பார்த்தான். ஆனால் அவன் அடைந்த ஆச்சரியத்துக்கும் ஆத்திரத்திற்கும் அளவே இல்லை. அதில் கண்டிருந்த செய்தி வருமாறு:

ஐயா, தங்கள் கதையை வாசித்த ஜட்ஜுகள், இதைப்போலவே மேல்நாட்டு ஆசிரியர் ஒருவர் எழுதிய கதை ஒன்று இருப்பதால், போட்டியில் இதைச் சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டார்கள். இருந்தாலும் தங்களிடம் நாங்கள் நேரில் எழுதும்படி கேட்டுக்கொண்ட காரணத்தினால் கதையை மாத்திரம் சமீபத்தில் வெளிவரும் மலரில் பிரசுரித்திருக்கிறோம். மன்னிக்க வேண்டும்.

ஆசிரியர்,
**ஜயந்தி.**

சூடாமணி, கடிதத்தை ஒரு முறை அல்ல, இரு முறை வாசித்தான். அவனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. பக்கத்தில் நின்ற மனைவியைக் கவனிக்கவில்லை. தானாகவே சொல்லிக்கொண்டான்:

'இந்தத் தேசத்தில் என்றைக்கு இதெல்லாம் போகுமோ! என்னைப்பற்றி இவர்களுக்குத் தெரியாதுபோல் இருக்கிறது. சரி, இதற்கும் ஒரு வழி

செய்கிறேன். பிடிக்காவிட்டால் வேண்டாமென்று எழுதுவது நியாயம். என்மேல் பழி வேறு சுமத்து கிருர்கள் பார். நான் என்ன, இவர்கள் பத்திரிகை யில் வெளிவரும் உபயோகமற்ற பேர்வழிகளின் கதை களைப்போல் திருடி எழுதுகிறவனு? அப்படி எந்த ஆசிரியர் இவர்களுக்குப் பழக்கமோ தெரியவில்லை! அதையும் குறிக்கவில்லை. எல்லாம் ஒரே மோசடி.'

ஸரஸ்வதி நல்ல வேளையாகத் தனக்கு வந்த கடிதத்தை மடியில் மறைத்துக்கொண்டுவிட்டாள். மெதுவாகத் தன் அறையில் சென்று அதைத் திறந்து பார்த்தாள். என்ன ஆச்சரியம்! அவள் கதைக்குத் தான் பரிசு வந்திருந்தது. எவ்வளவோ சிரமப்பட்டுத் தனக்கு உண்டான ஆனந்தத்தை அடக்கிக்கொண் டாள். அங்கே இருக்கப் பயந்து தன் அறையின் கதவையும் தாழிட்டுக்கொண்டாள். கடிதத்தினுள் ரூபாய் ஐந்நூறுக்குச் செக்கும் அவள் பெயருக்கு வைக்கப்பட் டிருந்தது. உடனே ஓர் எண்ணம் தோன் றியது. மலரில் தன் புனைபெயருடன்கூடக் கதை வெளியாக வேண்டாம் என்றும், பெயரைச் சில காரணத்தினல் கதை எழுதியவரின் வேண்டுகோளுக் காகப் பிரசுரிக்கவில்லை என்னும் குறிப்புடன் பிரசுரிக் கும்படியும், 'ஜயந்தி' ஆசிரியரிடம் வேண்டிக்கொண் டாள். 'ஜயந்தி' ஆசிரியருக்கும் அவளுக்கும் இது சம்பந்தமாகக் கடிதப் போக்கு வரவுகூடக் கொஞ்ச காலம் நடந்தது. அவள்தான் கடைசியில் அந்த விவாதத்தில் ஜயித்தாள். மலர் வெளியானபொழுது மேலே சொன்னபடி ஒரு குறிப்புடன் அவள் கதை வெளியாகியிருந்தது. குறிப்புப் பின்வருமாறு:

'இந்தக் கதை எழுதியவர் ஒரு பெண்மணி. அவர் வேண்டுகோளுக்கு இணங்கியே நாங்கள் அவர் பெயரையோ புனைபெயரையோகூடத் தெரிவிக்க முடியாமல் இருக்கிறோம். வாசகர்கள் எங்களைக் குறை கூற வேண்டாம்.'

## 4

சூடாமணி பரிசு பெற்ற கதையை வாசித்தான். அழகிய தமிழ்ப் பாஷையில், எளிய நடையில், தெளிவுடன் வாழ்க்கையை ஒட்டிய கதையாக அமைந்திருந்தது. ஆனால் அவன் கண்ணுக்கு அது சிறந்ததாகப் படவில்லை. ஸரஸ்வதியினிடம் வந்து அவன், “எனக்கு ஒரு பெரிய சந்தேகங்கூட உண்டாகிவிட்டது. இது ஏதோ பணம் காரியாலயத்துக்கு வெளியே போகாமல் இருப்பதற்குச் செய்த சூழ்ச்சிதான். யாராவது பரிசு வாங்கிவிட்டுப் பெயர் வெளியே தெரிய வேண்டாம் என்பார்களா? சுத்தப் பொய். இதன் விவரத்தை நிச்சயம் கிளறி வெளியில் கொண்டு வருகிறேன். என்ன மோசக்காரர்களாக இருக்கிறார்கள், நம் ஊரில்! சீமையாக இருந்தால் உடனே இதற்கு ஒரு நடவடிக்கை எடுத்துவிடுவார்கள். நாம்தான் எல்லாவற்றையும் க்ஷமித்து, மேன்மேலும் கெடுக்கிறோம்; பத்திரிகைக்காரர்களின் அக்கிரமங்களைப் பொறுக்கிறோம். மோசம்! மோசம்! முழு மோசம்!” என்று மும்முறையும் தலையில் அடித்துக்கொண்டான்.

ஸரஸ்வதிக்கு ஒன்றும் பதில் சொல்லத் தெரியாமல், எங்கே தன்னைக் குற்றவாளி என்று அறிந்துகொண்டுவிடுவானோ தன் கணவன் என்ற கவலை ஒரு பக்கம் வாட்ட, மெதுவாக அதை ஆமோதிப்பவள் போலவும் அவ்விதம் இல்லாமலும் தோன்றும்படி, “பத்திரிகைக்காரர்கள் என்ன செய்வார்கள் பாவம்! யாரோ இப்படி வேண்டுமென்றுதான் அவர்களை இகழும்படி மோசம் செய்திருக்கிறார்கள்” என்று சொல்லி அவ்விடத்தை விட்டு நகர்ந்தாள்.

# தனிமை

எனக்கு வயது எட்டு அல்லது ஒன்பது இருக்கலாம். கல்யாணி என்னைவிட நாலைந்து வயது பெரியவள். ஆனால் நாங்கள் இருவரும் சம வயது போல் விளையாடிக்கொண் டிருப்போம். கல்யாணியின் அப்பா அம்மாவிற்கு அவள் ஒரே பெண்.

வக்கீல் தசரத ராமையரின் மூத்த பிள்ளை கோபாலன் சீமையில் ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்கு வாசிக்கப் போவதாகப் பிடிவாதம் பண்ணிக்கொண் டிருந்தான். எப்படியாவது கல்யாணம் செய்து வைத்த பிறகே அவனை அவ்விடத்திற்கு அனுப்ப வேண்டும் என்று அவன் தகப்பனாரும் தவித்தார். கல்யாணியின் ஜாதக விசேஷத்தால் அவனுக்கே அவளைக் கல்யாணம் செய்வதாக நிச்சயித்தார்கள். கல்யாணம் நடந்த மறு மாதமே அவனும் சீமைக்குப் புறப்பட்டான்.

தீபாவளிக்கு இன்னும் ஒரு வாரந்தான் இருந்தது. கல்யாணியின் தகப்பனார் எப்பொழுதும், "தந்தி ஏதாவது வந்ததா?" என்று சம்பந்தி வீட்டிற்கு ஆள் அனுப்பியவண்ணம் இருந்தார். தீபாவளி அன்று சாயந்தரம் நான் வழக்கம்போல் கல்யாணி வீட்டிற்குப் போனேன். நாங்கள் இருவரும் மறு நாள் சுட வேண்டிய சீனவெடிகளைப்பற்றியும், எங்களுக்காக வாங்கியிருந்த பாவாடை சிற்றாடைகளைக் குறித்தும் என்ன என்னவோ பேசிக்கொண் டிருந்தோம். திடீரென்று கல்யாணியின் தமையன்மார் இருவரும் நாங்கள் உட்கார்ந்துகொண் டிருந்த அறையில் வந்து, "கல்யாணி! மாப்பிள்ளைக்குப் பாஸாய்விட்டதாம்!" என்று சொல்லிக்கொண்டே

ஒரு தந்தியை அவளிடம் நீட்டினார்கள். கல்யாணி கொஞ்சம் வெட்கப்பட்டாலும் சந்தோஷத்தை அடக்க முடியாமல், அதை வாங்கிக்கொண்டு உள்ளே எழுந்து சென்றாள். அவளுடன் அவள் சகோதரர்கள் இருவரும் உள்ளே சென்றார்கள். நான் தனியாக உட்கார்ந்துகொண்டிருந்தேன். அவர்கள் வீட்டில் எல்லோரும் உள்ளே கூடிச் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தது என் காதில் மாத்திரம் விழுந்துகொண்டே இருந்தது. என்னை ஏன் அவர்கள் தங்களுடன் சேர்த்துக் கொள்ளவில்லை?

அப்பொழுதுதான் கல்யாணியின் தங்கையாக நான் இருக்கக் கூடாதா என்று எண்ணினேன்.

* * *

எனக்கும் பதினாறு வயது ஆயிற்று. ஆனால் என்ன? எங்கள் அம்மா எப்பொழுதும் எனக்குக் கல்யாணம் ஆகாததைக் குறித்து வருத்தப்படுவாள். என் தகப்பனார் எங்கெங்கேயோ அலைந்துதான் பார்த்துக்கொண்டிருந்தார். பெற்ற பெண்ணைக் கிணற்றில் தள்ளுவதென்றால் யாருக்குத்தான் பிடிக்கும்? ஆகையால், நாளைக்கு நான் நன்றாக இருக்க வேண்டுமே என்றுதான் அவரும் அவசரத்தில் எதையும் முடித்துவிடக் கூடாது என்று நல்ல வரன் கிடைக்காத காரணத்தினால் ஒவ்வொரு வருஷமாகத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தார். என் தமக்கைகளை எல்லாம் சுமாராக நல்ல இடங்களிலேயே கொடுத்திருந்தார். ஆனால் பணக் கஷ்டம் அதிகமாக ஆக அவருக்கும் தம்மிடத்தில் நம்பிக்கை குறைந்துகொண்டே வந்தது. அடிக்கடி எங்கள் அம்மா, “இவள் பிள்ளையாகப் பிறந்திருக்க லாகாதா?” என்று சொல்வது உண்டு.

ஒரு நாள் என்னை யாரோ ஒருவர் வந்து பார்க்கப் போவதாகச் சொல்லிக்கொண்டார்கள். அப்பா

அம்மாவுடன் ரகசியமாக ஏதோ பேசிக்கொண் டிருந்ததை எவ்வளவு முயன்றும் என்னுல் அறிய முடியவில்லை. என்னை மாத்திரம் அம்மா தலைவாரிக் கொண்டு நல்ல புடைவையைக் கட்டிக்கொள்ளச் சொல்லி, வெளியே போக வேண்டாம் என்று எச்சரிக்கை செய்தாள். வருகிறவர் எப்படி இருக்கக் கூடுமென்று நானும் என் மனக் கண்ணுல் பார்க்க முயன்றேன். ஒன்றும் தெரியவில்லை. வரப்போகிற வர் சிவப்பா கறுப்பா என்றுகூட அறிந்துகொள்ள முடியவில்லை. சொல்லுவார் ஒருவரும் இல்லை. அப் பொழுதுதான் என் தம்பி கிட்டுவின் வயது எனக்கு இருக்க லாகாதா என்று மனம் நொந்தேன். அவனை ஒருவரும் சந்தேகிப்பதில்லை. அவன் அப்பா எங்கிருந் தாலும் அங்கேயே இருப்பான். அப்பாவும் அம்மா வும் பேசிக்கொள்வதை எல்லாம் அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு கேட்டுக்கொண் டிருப்பான். ஆனுல் அவனிடமிருந்து ஒன்றையும் நாம் தெரிந்து கொள்ளவே முடியாது. நான் அவனுக மாத்திரம் இருந்தால் எவ்வளவு தெளிவாக அவர்கள் பேசுவதை எல்லாம் கவனித்திருப்பேன்!

* * *

என்னை ஒரு தனவந்தருக்கு இளையாளாகவே கொடுத்தார்கள். அவரும் வயது ஐம்பதிற்குச் சற் றுத்தான் குறைந்தவராக இருந்தாலும், வயது முதிர்ச் சியைக் காட்டாத தேகக் கட்டு வாய்ந்தவராக இருந் தார். முதலில், அவரைக் காண வெறுப்பு உண்டாக வில்லை. என் கணவர் கல்யாணமானவுடன் என்னை ஊருக்கு அழைத்துப் போக வேண்டுமென்று சொல் லியது எனக்குக் கவலையை உண்டுபண்ணியது. இருந் தாலும் நான் என்ன செய்ய முடியும்? என் தகப்பனுர் என்னை ரெயிலடிவரைக்கும் கொண்டுவந்து விட்டு விட்டுத் திரும்பிவிட்டார். நான் ரெயில்வண்டியில்

ஏறி உட்கார்ந்தேன். என் கணவரும் வண்டி புறப் பட்டதும் என் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு என்னைச் சற்று நிதானமாகவே கவனித்தார். புதிய மனிதர் ஆனதாலும், அவர் எப்படிப்பட்டவர் என்று தெரியாததாலும், ஒன்றும் தோன்றாமல் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண் டிருந்தேன். மெதுவாக அவர், "என்னைக் கல்யாணம் செய்துகொண்டதில் உனக்கு வருத்தமா?" என்று கேட்டது, அவருக்கு நான் இளையாள் என்பதை எனக்கு நன்கு தெரியப் படுத்தும் விதமாக இருந்தது. அவர் குரலிலிருந்து அவர் மனத்தில் நடந்த போராட்டத்தை உணர்ந்தேன். ஆதலால், 'இல்லை' என்னும் குறிப்போடு தலையை மாத்திரம் அசைத்தேன். அவரும் மறுபடி, "கொஞ்சம் சிரமந்தான். என் மூத்த பையன் ராமு சற்றுப் பிடிவாதக்காரன்; அவனிடத்தில் மாத்திரம் நீ ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்" என்று தாழ்ந்த குரலில் வெளியிட்டார். அப்பொழுதுதான் அவருக்குக் குழந்தைகள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவந்தது. அதனால் எவ்வளவு குழந்தை கள் அவருக்கு இருந்தார்கள் என்று தெரிந்துகொள்ள மனம் தூண்டிற்று. எப்படிக் கேட்பது? கேட்டால், அவர்தான் என்ன நினைப்பார்? பேசாமல் இருப்பதே உசிதம் என்று சும்மா இருந்தேன்.

ஊருக்கு வந்ததும், ரெயிலடியில் அவர் மோட்டார் கார் வந்து காத்துக்கொண் டிருந்தது. வண்டியில் ஏறி உட்கார்ந்ததும் டிரைவரைப் பார்த்து, "ஏண்டா! சுந் தரம் இங்கே இருக்கிறாளா?" என்று கேட்டதிலிருந்து அவருக்குப் பெண் ஒருத்தியும் இருப்பதை அறிந்து கொண்டேன். "எசமான்! இங்கேதான் இருக்குது" என்று அவன் பதில் அளிக்கவும், அவர் என்னைப் பார்த்து, "சுந்தரத்தைப்பற்றிக் கவலை இல்லை. அவளுக்கு ஒன்றும் தெரியாது. அவளை நீ சிரமம் இல்லாமல் கவனித்துக்கொள்ளலாம்" என்றதும்,

அவர் மனம் படும் கவலை எனக்கு நன்றாக விளங்கிற்று.

மோட்டார் ஒரு சிறிய பங்களாவின் வாசலில் வந்து நின்றதும், சாமான்களை வேலைக்காரர்கள் உள்ளே எடுத்துச் சென்றார்கள். உள்ளேயிருந்து, “அப்பா!” என்று ஒரு சப்தம் கிளம்பிற்று. நாங்கள் படி ஏறுவதற்குள் ஒரு சிறுமி எங்களைப் பார்த்து ஓடிவந்தாள். ஆம், அவள்தான் சுந்தரம். தகப்பனார் நீட்டிய இரு கைகளுக்கிடையே நெருங்கிய வண்ணம் அந்தக் குழந்தை என்னையே பார்த்தாள். என் கணவரும் அவளை வாரி எடுத்துத் தோள்மேல் சாய்த்துக்கொண்டு உள்ளே சென்றார். நான் நாலடி நகர்ந்ததும் ஒரு வெள்ளை வஸ்திரம் தரித்த மாது, “வா, அம்மா! இப்படிக் கொடு!’ என்று என் கையில் இருந்த கூஜாவை வாங்கிக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றாள். ஆனால் என் கணவர் எச்சரித்த மூத்த பையன் எங்கே என்று தான் நானும் பார்த்துக்கொண் டிருந்தேன். சாப்பாட்டு வேளை வந்ததும், “ராமு! வா!” என்று என் கணவர் கூப்பிட்ட பிறகு, பதில் சொல்லாமல் மாடியிலிருந்து இறங்கி வந்த பையன் ஒருவன், தலை நிமிர்ந்து பாராமல் இலை போட்டிருந்த இடத்தில் தகப்பனார் பக்கத்தில் உட்கார்ந்ததை நான் மறைவான இடத்திலிருந்து பார்த்தேன். “என்ன! ஸ்கூல் இல்லையோ?” என்று அவர் கேட்கவும், காதில் படாதவன்போல் இருந்தவன், “இல்லை....உண்டு” என்று ஏதோ அரை குறையாகப் பதில் சொன்னதுதான் என் காதில் விழுந்தது. நான் என்னவோ அவனை அடிக்கடி அந்த வீட்டில் அப்புறம் பார்க்க முடியவில்லை. அன்று பார்த்தவள் தான்; அப்புறம் நன்றாக அவனைக் கவனிக்க முடியவில்லை.

நான்கு வருஷங்கள் பறந்தன. என் மேல் என் கணவர் ஆசையுடன் இருந்ததும் அல்லாமல், ஒரு நாள்

கூட என்னை எவ்விஷயத்திலும் சந்தேகித்ததே இல்லை. நானும் என் வயிற்றில் பிறந்த குழந்தையைப்போல் சுந்தரத்தைப் பார்த்துக்கொண் டிருந்தேன். ராமு மாத்திரம் கலாசாலைப் படிப்பிற்காக, விடுமுறைக் காலங்களைத் தவிரப் பாக்கி நாட்களில் பட்டணத்தில் வசித்து வந்தான். பி. ஏ. பரீட்சையில் அவன் முதலில் தேர்ச்சி பெற்ற விவரம், அவன் தகப்பனுருக்கு இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாத ஆனந்தத்தை உண்டுபண்ணியது. பிள்ளையிடமிருந்து வரும் கடிதங்களுக்கு உடனுக்குடனே பதில் போடுவார். மாதம் மாதம் கேட்ட பணத்தைத் தாராளமாகவே கொடுப்பார். அவன் மேல்படிப்பிற்குச் சீமைக்குப் போக வேண்டும் என்றதையுங்கூட ஆட்சேபிக்காமல், அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, கொழும்பு வரையிலும் கூடச் சென்று வழி அனுப்பியதுடன், ஊருக்குத் திரும்பி வந்த பிறகு ஒரு வாரம் பித்துப் பிடித்தவர்போல் இருந்தார்.

என்னுடன் பேசுவதெல்லாம் என்னைப்பற்றிய விஷயந்தான்; ஒவ்வொரு சமயம் சுந்தரத்தைப்பற்றியும் இருக்கும். ஆனால் தப்பித் தவறிக்கூட ராமுவின் விஷயமாகப் பேச்சே எடுக்கமாட்டார். நான் என்ன அபராதம் செய்தேன்? எனக்கு அவனைப் பார்த்தது முதல் அவன் புத்திசாலித் தோற்றத்தில் மனம் சென்றது. என்னதான் தகப்பனுர் தனக்கு வேண்டியதைச் செய்தாலும் தான் ஊருக்குப் புறப்படும்பொழுது தன்னைப்பற்றியும் தன் உடம்பைப்பற்றியும் கவலையுடன் கவனித்துக்கொள்ளும்படி சொல்லி அனுப்பத் தாய் ஒருத்தி தனக்கு இல்லையே என்ற குறை ராமுவுக்கு இருந்திருக்கலாம் அல்லவா! 'இளம் வயதில் வெகு தூரம் தனியாகப் பிரயாணம் செய்ய வேண்டுமே, பாவம்!' என்று நான் பயத்துடன் என் கணவரை விசாரித்தேன். அதற்கு அவர், "நீ வேண்டுமானுல் அவனிடம் சொல்"

என்றார். நாலுகு முன் பின் பேசாதவனுடன் எப்படி அவ்வளவு சுலபமாகப் பேசுவது? அவன் மாத்திரம் என்னுடன் போய்வருகிறேன் என்று சொல்லி யிருக்கக் கூடாதா?

ராமு சீமையில் படித்தது என் கணவருக்கு வெகு பெருமையை அளித்தது. "பையன் எப்பொழுது வருகிறான்?" என்று யாராவது கேட்டுவிட்டால், அவ்வளவுதான்; "அவன் எல்லாப் பரீட்சைகளுக்கும் உட்காருவேன் என்கிறான். ஐ. ஸி. எஸ். எதற்கு என்கிறான்! அவன் புரொபஸர்களும் அவனை மெச்சியே பேசுகிறார்களாம். போன வாரம் திரும்பி வந்த ரங்கையங்கார் பிள்ளை கூட அப்படித்தான் சொல்லுகிறான்" என்று பெருமை அடித்துக்கொள்ளுவார்.

ஒரு நாள் சாயங்காலம் நான் வெளியிலிருந்து வீட்டுக்குத் திரும்பினேன். என் கணவர் வீட்டில் இல்லை. நான் வாசலில் காலை வைத்ததுதான் தாமதம்; வேலைக்காரன் வந்து சீமைத் தந்தி என்று ஒன்றை என்னிடம் கொடுத்தான். நான் பரபரப்புடன் அதை உடைத்துப் பிரித்துப் பார்த்தேன். அதில் ராமுவிற்கு உடம்பு சரியாக இல்லாமல் ஒரு வாரமாக அதிக ஜுரம் கண்டிருப்பதாக அவன் சிநேகிதன் தகவல் அனுப்பியிருந்தான். என் கணவருக்கு அதைக் கொடுத்தனுப்ப வேண்டும் என்ற வேகம் ஒரு பக்கமும், அதைப் பார்த்ததால் கவலையும் என்னை வேதனை செய்தன. உடனே வேலையாளிடம், கிளப்பிற்குச் சென்று அதை அவரிடம் கொடுத்துவிட்டு வரும்படி அனுப்பினேன். பத்து நிமிஷத்திற்குள் அவரும் வேகமாக வந்தவர், ஒன்றும் சொல்லாமல் தபாலாபீஸிற்கு அந்த ஆள் வசம் வேறொரு காகிதத்தைக் கொடுத்து அனுப்பினார். நான் கவலை தோய்ந்த முகத்துடன் அவரைப் பார்த்தேன். அவர் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு உள்ளே சென்றவர் வெளியே வரவில்லை.

நான் மெள்ள அவர் அறைக்குச் சென்றேன். சாய்வு நாற்காலியில் அவர் கண்களை மூடிய வண்ணம் ஒரு கையைத் தலையில் வைத்துக்கொண்டு படுத்திருந்தார். என் காலடிச் சத்தத்தால் கண்ணைத் திறந்தவர், மறுபடியும் கண்ணை மூடி, "சுந்தரம் தூங்கிவிட்டாளா?" என்றுதான் கேட்டார். நான் அவர் படும் கவலையைச் சேர்ந்து அநுபவிப்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை போலும்! என் மனம் வருத்தத்தினுல் வாடியது. என்ன செய்வது! என் கணவரை, எப்படி என்னிடம் அவர் கவலையைப் பகிர்ந்துகொள்ளும்படி செய்வது என்று எனக்குப் புரியவில்லை. சாப்பாடு கூடச் சரியாகச் செல்லவில்லை அவருக்கு. அவர் சாப்பாடு சரியாக உட்கொள்ளாதபோது நான்மாத்திரம் வயிறு புடைக்கச் சாப்பிடுவது என்னுல் எப்படி முடியும்?

இவ்விதம் இரண்டு நாட்கள் கழிந்தன. மூன்றும் நாள், - ஐயோ! பொழுது விடியாமல் இருந்திருக்கலாகாதா? - மறபடியும் ஒரு தந்தி! என் கணவர் கவலையுடன் அதை வாங்கியவர், உள்ளே இருந்த சமாசாரத்தைப் பார்த்தவுடன் அப்படியே நாறகாலியில் சாய்ந்தார். என்ன வந்துவிட்டதோ என்று நான் திகில் அடைந்தேன். ஓடி அதை எடுத்துப் பார்த்தேன். 'ராமு இறந்தான்!' என்று இருந்தது.

வேறு என்ன வேண்டும்? என் கணவர் தம் கண்ணை இழந்தார்; பரிதபித்தார். எனக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது. என் கணவரைக் கட்டிக்கொண்டு, அழ வேண்டும் என்று தோன்றிற்று. ஆனுல் அவர் அருகில் போகத் துணிச்சல் ஏற்படவில்லை. அந்த ஏக்கத்துக்கும் மனவேதனைக்கும் இடையே ஓர் எண்ணம் தோன்றிக் கொண்டிருந்தது; ராமு மட்டும் என் பிள்ளையாக இருந்திருக்கலாகாதா?

# ஆச்சரியமா? ஏமாற்றமா?

ரமணிக்கு ரங்காசாரியைக் கண்டுவிட்டால் எப்பொழுதும் சொல்ல முடியாத ஆனந்தம். காரணம் கேட்டால் அவனுக்கே தெரியாது. அப்படித் தெரிந்தாலும் ஒவ்வொரு சமயம் ஒவ்வொன்றாக இருக்கும். தனக்கு ரங்காசாரி சிநேகிதனாக இருப்பதில் எல்லோருக்கும் பொறாமை என்றுகூடச் சில சமயங்களில் ரமணி நினைப்பது உண்டு. அவர்கள் இருவரும் சேர்ந்து பள்ளிக்கூடத்தில் வாசித்தவர்கள் அல்ல. இருந்தாலும் எப்படியோ வாழ்க்கைத் துறையில் அவர்கள் சேர்ந்து விட்டது பொய் ஆகுமா? ஆனால் தன்னுடைய இலக்கியப் பற்றுதலுக்கு மிகவும் சாதனமாகவே ரங்காசாரி இருப்பதாக ரமணி கருதுவான். அப்படி அவன் நினைப்பதற்கு ஆதாரம் இல்லாமல் இல்லை. ரங்காசாரி தானாக ஒன்றையும் படிப்பதில்லை. ரமணி சொல்வதையோ வாசிப்பதையோ மட்டும் விடாமல் கவனமாகக் கேட்டுத் தெரிந்துகொண்டுவிடுவான். அவ்விதம் கவனமாகக் கேட்பதும் கேட்டதை அநுபவிப்பதும் ஸஹிருதயர்களின் தனிப்பட்ட அநுபவம் ஆனதால், ரமணியின் அன்பிற்கு ரங்காசாரி மிகவும் பாத்திரனானான் என்பது ஓர் ஆச்சரியம் இல்லை அல்லவா?

மேலும் ரங்காசாரியின் சிற்சில வெளித் தோற்றங்களில் ரமணிக்குப் பிரமை. தோற்றங்கள்தாமே என்று மனத்தை ஆராயும் அவனுடைய சுபாவம், அவனிடத்தில் மாத்திரம் அவைகளைப் பொருட்படுத்தாமல் இருந்ததும் அவனுக்கே ஆச்சரியம். அப்படி என்ன இருந்தது என்று கவனிப்போம்.

ரங்காசாரி பணக்காரன். ஆனாலும் செல்வத்தின் சின்னங்களே வெளித் தெரியாமல் இருப்பான்.

தெரிந்தவர்களிடம் தன்னுடைய அடக்கம் எவ்வளவு சிலாகிக்கத் தக்கது என்பதையும் ரங்காசாரி காட்டிக் கொள்வான். பத்துப் பேர் நடுவில் பதற்றம் இல்லாமலும் சுய ஞாபகத்தை எக்காரணத்தினாலும் இழக்காமலும் நடந்துகொள்வான். அதற்காகத் தன் கௌரவத்தைக் காட்டிக்கொள்ளத் தெரியாதவனும் அல்ல. சிரிக்கச் சிரிக்கப் பேசுவான். ஆனால் தன்னைப் பிறர் வேடிக்கை செய்ய இடங் கொடாதபடி தானாகவே தன்னையும் பரிகாசத்திற்கு உள்ளாக்கிக்கொள்வான். இவையெல்லாம் அவனைப் புத்திசாலி என்று காட்டவில்லையா? ரமணிக்கு மாத்திரம் அவைகளில் ஏன் ஓரளவு ஆச்சரியம் இருக்கலாகாது? அதற்கு அவனுடைய சுபாவமும் உதவி செய்தது.

ரமணிக்கு நாலு பேரைக் கண்டுவிட்டால் தலை கால் தெரியாது. மேலும் பிறர் மனத்தை ஆராய்வதாக எண்ணி, வேண்டியவா வேண்டாதவர் என்று கூடக் கவனியாமல் எல்லோரிடமும் நம்பிக்கை வைத்துச் சொந்த அபிப்பிராயங்களைக் கவலை இல்லாமல் கூட்டத்தின் நடுவில் போட்டு உடைத்துவிடுவான். அதனால் சில மித்திரபேதங்களும் காரிய நஷ்டங்களும் அவனுக்கு ஏற்பட்டன. அவனுக்கும் அவை தெரியாமல் இல்லை. இருந்தாலும் சமயத்தில் தன்னை அடக்கிக்கொள்ள அவனால் முடியாது. ரங்காசாரி ரமணிக்குப் பெரிய உபகாரம் செய்பவனாகி, சில சமயம் பக்கம் பார்த்துப் பேச எச்சரிக்கை செய்தாலும், அவனுக்கு அந்த ஹிதோபதேசங்கள் காதில் ஏறுவதில்லை. சுபாவமும் குழந்தையிலிருந்து ஏற்பட்ட பழக்கமுந்தான் அவனுடைய வெகுளித்தனத்திற்குக் காரணம்.

ரங்காசாரி தன் வீட்டில் வேலையாட்களிடங்கூட இரையாமலே பேசி நடந்துகொள்வான். அதிலும் ரமணி தன்னைக் கண்டு நிஜமாகப் பிரமிக்கிறான் என்பதை அறிந்த அவன் மனம், ஆட்களைக் கடிந்துகொள்ள வேண்

டிய சந்தர்ப்பங்களிலும் கடிந்துகொள்ளாமல் மிகவும் நிதானமாக நடந்துகொள்வதுமாதிரி காட்டத் தூண்டும். வேண்டுமென்றே எவ்வளவோ சாமர்த்தியமாக இப்படிச் செய்வான். அவன் எதிர்பார்த்த மாதிரியே, அவன் மனம், ரமணி அவனுடைய சுபாவத்தை மெச்சு வதைக் கேட்டுப் பரம திருப்தி அடைந்துவிடும். தான் அமரிக்கையாக நடந்துகொள்வது குடும்பத்தின் பழக்கம் என்றுகூடக் காட்டித் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் உயர்த்திக்கொள்ளவே ரங்காச்சாரி வழி தேடுவான். ரமணிக்கு மாத்திரம் என்ன புத்தி கட்டையா? அவன் அறிவான் இதன் சூக்ஷ்மத்தை. 'இருந்தாலும், பொறுமை வேண்டாமா, இதற்குக்கூட?' என்றுதான் அவனும் வேறு எண்ணங்களுக்கு இடம் கொடுக்கமாட்டான். தன்னால் ஒருகாலும் அம்மாதிரி நடந்துகொள்வது சுலபமல்ல என்பதும் மற்றொரு காரணம், ரங்காச்சாரியினிடம் அவனுக்குக் குறையாத மதிப்பு இருந்ததற்கு.

ஒரு நாள் சாயங்காலம் கடற்கரையின் சமீபம், இரண்டு சிநேகிதர்களும் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். இம்மாதிரி தனிச் சம்பாஷணை களில் ரமணிக்கு வெகு இஷ்டம். இலக்கியப் பேச் சுக்கு அதுதான் தக்க சமயமும் கூட. ரங்காச்சாரி அரசன் ஒருவன் தன் ஆஸ்தான வித்துவானை மெச்சு வதுபோல், "ரமணி! நீ பாடுவதே தனி! நீ வாசிப்பதே வேறேதான்!'' என்றெல்லாம் சிலாகித்துப் பேசும் நேரமும் அதுதான். மனித சுபாவந்தானே? ரமணிக்கு ரங்காச்சாரியின் இலக்கிய அபிருசியில் பூர்ண நம்பிக்கை இருந்தபடியால், தன்னை அவன் புகழ்வது நியாயம் என்று படுவது சகசம் ஆகிவிட்டது.

அன்று பௌர்ணமி. ஆகாயத்திலும் பூமியிலும் சமுத்திரத்திலும் நிலவின் வெண்மை பளீரென்று பாவியிருந்தது. அலைகளின் கொந்தளிப்பினால் தக

தகவென்று ஜலத்தின்மேல் சந்திர கிரணங்கள் பிரகாசித்தன. காற்றும் ஜில்லென்று வீசியது. ரங்காச்சாரி சுக புருஷன். வாழ்க்கையின் சுகத்தை அநுபவிப்பதில் குறைத்துக்கொள்ளத் தெரியாதவன். மணலில் சாய்ந்து கொண்டே, "ரமணி, என்ன திவ்வியமான ராத்திரி! பார்த்தாயா?" என்றான் ரங்காச்சாரி.

அதற்கு முன்னமேயே தயாராகக் காத்திருந்த ரமணி அதை வருணிக்க ஆரம்பித்தான்.

"சமுத்திரத்தைத்தான் பாரேன்: என்ன அட்டகாசம் செய்கிறது! கட்டில் அடங்காத யௌவனம் வாய்ந்த வாலிபனைப்போல் அல்லவா விளங்குகிறது? இதைக் காளிதாஸன்தான் சரியான உபமானமாக உபயோகப்படுத்துவான். வேறு யாராலும் முடியாது" என்று பதில் உரைத்தான்.

உடனே ரங்காச்சாரி நிமிர்ந்துகொண்டு, "சொல்லு, சொல்லு; நன்றாக இருக்கும் நீ சொன்னால். சிருங்கார சுலோகமா?" என்று ஆவலுடன் கேட்டான்.

ரமணிக்குக் காளிதாஸன் சுலோகம் என்றாலே வெகு உத்ஸாகம். அதிலும் ஸம்ஸ்கிருதம் கொஞ்சங்கூட ரங்காச்சாரிக்குத் தெரியாததால், தான் வேண்டுமளவும் சொந்தக் கைச்சரக்குகளுடன் அதை விரித்துச் சொல்ல முடிவதில் இன்னுங்கூட ஆசை. ஆகையால், "காளிதாஸனுக்கு என்ன வரவா, செலவா? எத்தனையோ சொல்லியிருக்கிறான். எதைச் சொல்லுவது என்றுதான் தெரியவில்லை" என்று பதில் சொன்னான்.

"அட! சொல்லேன். வேண்டாத பேச்சில் காலத்தைக் கழிக்காதே. இப்போது என்னவோ சமுத்திரத்தைப்பற்றி அல்லவா ஆரம்பித்தாய்? அதைப்பற்றிக் காளிதாஸன் என்ன சொல்லுகிறான்; சொல், பார்ப்போம்" என்று ரங்காச்சாரி தன்னுடைய அவாவை வெளிக் காட்டிக்கொண்டான்.

"சரி. சொல்லுகிறேன். கேள்" என்று ரமணி சுவாரஸ்யம் ததும்பும் குரலில் ஆரம்பித்தான். "நான் சொல்லும் சுலோகம் குமார ஸம்பவத்தில் வருகிறது. பரமசிவன் செய்யும் தவம்; பார்வதி வழக்கம்போல் பணிவிடை செய்ய வருகிறாள். அதுதான் தக்க சமயம் என்று மன்மதன் வில்லில் புஷ்ப பாணத்தைப் பூட்டித் தயாராகிறான். பார்வதி என்ன சாமான்ய அழகா? புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு வருகிறாள், இளங் கொடி காற்றில் ஆடி அசைவதுபோல்."

இங்கே ரமணி சற்று நிறுத்தினான்.

ரங்காச்சாரி கண்ணை மூடிக்கொண்டு ரசிப்பதில் ஈடுபட்டிருந்தவன், "ஏன் நிறுத்திவிட்டாய்? சொல்லேன்" என்றான்.

"ஒன்றும் இல்லை. அங்கொரு சுலோகம் வருகிறது. அதை ஞாபகப்படுத்திக்கொண்டேன். ஆனால் அதைப் பிறகு சொல்லுகிறேன். முதலில் இதைச் சொல்லி முடிக்கிறேன்" என்று ரமணி ஆரம்பித்து, "கேள், சுலோகத்தை: சிவபிரான் உமாதேவியின் முகத்தையும், கோவைப் பழங்கள் போன்ற உதடுகளையும் கவனித்தாராம். அப்பொழுது அவர் உள்ளம் கட்டில் அடங்காமல் எழும்பியதாம். அது எவ்விதம் இருந்ததென்றால், கவி சொல்லுகிறான்: 'சந்திரனைக் கண்ட சமுத்திரம் எப்படிக் கொந்தளித்து அலைகளுடன் எழும்புமோ அம் மாதிரி இருந்தது' என்கிறான். பார்த்தாயா? சிவபிரானுடைய மனத்தை வேறு எவன் சமுத்திரத்திற்குச் சமானமாகச் சொல்லுவான்?" என்று ரமணி காவியச் சுவையை நன்கு அநுபவிக்கப் புகுந்துவிட்டான்.

அப்பொழுது திடீரென்று அவர்கள் பின்னால் ஒரு தீனமான குரல், "ஐயா!" என்று கூவியது அவர்கள் காதுகளில் விழுந்தது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். அங்கே ஒரு நொண்டிப் பிச்சைக்காரன் நின்று

கொண்டு அவர்களைத் தன் பக்கம் பார்க்கும்படி செய்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

"அட இழவே! இங்குமா உங்கள் தொந்தரவு?" என்று ரமணி கோபத்திலும் பேச்சுத் தடைப்பட்டதனால் உண்டான மனச் சலிப்பிலும் எரிந்து விழுந்தான். அதோடு நில்லாமல், பிச்சைக்காரன் நெருங்கவே, ரமணி, "போடா, நாளைக்கு வா. இப்போது தொந்தரவு செய்யாதே. ஏதோ பேசிக்கொண்டிருக்கச்சே தொந்தரவு செய்யக் கூடாது" என்று அவனுக்குப் புத்தி புகட்ட, அதிகாரத் தொனியோடு கூறினான். இதற்குள் ரங்காச்சாரி தன் மணிபர்ஸை எடுத்து அதனுள் காசைத் தேடுவதை ரமணி பார்த்துவிட்டான். "ரமணி! உன்னிடம் சில்லறை இருக்கா!" என்று ரங்காச்சாரி கேட்டதையும் ரமணி முதலில் பொருட்படுத்தாமல், கோபமாகப் பிச்சைக்காரனைப் பார்த்து, "போடா. ஏன் நிக்கறே? நாளைக்கு வா" என்று அதட்டினான்.

ஆனால் பிச்சைக்காரனுக்குத் தெரியும் மனித சுபாவம். பிச்சைக் காசின் சப்தத்தை அவன் எவ்விதமாகவாவது கண்டுகொள்வான். அவன், ரங்காச்சாரி எப்பொழுது பையை எடுத்தானோ அப்பொழுதே தனக்கு ஏதாவது கிடைக்கும் என்பதை அறிந்துகொண்டு விட்டான். ஆகையால், "எசமானே! நான் நொண்டியாச்சே! நாளைக்கு எங்கே வருவேன்? என் காலைப் பாருங்களேன்" என்று காலைக் காட்டி மன்றாடினான்.

ரங்காச்சாரி அவனை உற்றுப் பார்த்தான். அந்தப் பிச்சைக்காரன் பெருவியாதி பிடித்தவன். முகம், கை, கால் எல்லாம் தேய்ந்துபோய் இருந்தன. காலில் நீர் வடிவதைக் கந்தைத் துணியால் கட்டியிருந்தான். ரங்காச்சாரிக்கு இக்காட்சியைக் காணச் சகிக்கவில்லை; "அப்பா, எதிரே நில்லாதே; அப்படித் தள்ளி நில். காசு தரேன்" என்று பணிவுடன் கேட்டுக்கொண்டான்.

ரமணிக்கு அப்பொழுதுதான் கொஞ்சங் கொஞ்சமாகச் சுய ஞாபகம் வந்துகொண் டிருந்தது. காளிதாஸன் வருணித்த சிவபிரானிடமிருந்து ஒரு சாமானியப் பிச்சைக்காரனிடம் வருவது ஒரு ரஸிகனால் உடனே சாத்தியமா? ஆனால் ஞாபகம் வந்ததும், தான் குரூரமாக நடந்துகொண்டதையும், ரங்காச்சாரி நிதானமாகவும் கருணையுடனும் பிச்சைக்காரனுக்குப் பிச்சை கொடுக்க முயலுவதையும் கண்டு தனக்குள் வெட்கம் அடைந்தான். பிறகு ரங்காச்சாரியின் நிதான மனத்தையும் ஒரு தரம் நினைத்து ஆச்சரியம் அடைந்தான்.

இதற்குள் ரங்காச்சாரி பிச்சைக்காரனைப் பார்த்து, "அப்பா! உன்னிடம் ஓரணாவுக்குச் சில்லறை இருக்கா? இருந்தால் இந்த ஓரணாவை எடுத்துக்கொண்டு பாக்கி முக்காலணா கொடு" என்று கேட்டுக்கொண் டிருந்தான்.

பிச்சைக்காரன் தன் தகரக் குவளையில் கையை விட்டுத் தேடி மூன்று காலணாக்களை எடுத்து, "இந்தாங்க சாமி" என்று ரங்காச்சாரியிடம் கொடுத்தான். ரங்காச்சாரி சற்று முன்புதான் பெருவியாதியின் தோற்றங்களைச் சகியாமல் பிச்சைக்காரனைத் தள்ளி நிற்கச் சொன்னான். ஆனால் அவனே கூச்சம் இப்பொழுது கொஞ்சங்கூட இல்லாமல் அவனிடமிருந்து சில்லறையை வாங்கிப் பையில் போட்டுக்கொண்டு ரமணியிடம், "உம், சொல்லு; நிறுத்திவிட்டாயே; அப்புறம்?" என்று பேச ஆரம்பித்தான்.

ரமணி ஒன்றுமே பதில் சொல்லவில்லை. ஏன் அவனால் முடியவில்லை? ரங்காச்சாரி பிச்சைக்காரனிடம் சில்லறை வாங்கிக்கொண்டதையே அவன் மனம் நினைத்துக்கொண் டிருந்தது. மனித சுபாவத்தை ஆராய்ச்சி செய்யும் பழக்கம் அவனுக்கு அதிகம் அல்லவா! ஆனால் இன்று அதன் முடிவு ஆச்சரியமா, அல்லது ஏமாற்றமா? யார் நிச்சயமாகச் சொல்ல முடியும்?

# விளையாட்டும் வினையும்

கோபுவுக்கு வயது ஐந்துதான் முடிந்திருந்தது. ஆனாலும் வயதிற்கும் மேம்பட்ட அறிவு அவனிடம் தென்பட்டது. அவனுக்கு மனத்தில் படும் விஷயங்கள் என்னவோ அதிகந்தான். குழந்தைப் பருவம் ஆனதால் ஓரளவு பயத்துடன் கலந்தே எதுவும் அவனுடைய இதயத்தில் பதியும்.

கோபுவின் தாய் அவனைக் கவனியாமல் இருந்ததே கிடையாது. அவளுக்குக் கடைசிக் குழந்தை அவன் தான். மூத்தவனான மணியும் அவனுக்கு அடுத்த தர்மாம்பாளும், சதா கோபுவை அழவிடுவது உண்டு. அக்காலங்களில் அவன் தாய் அவர்களைக் கண்டிப்பதும், கோபுவின்பால் வாஞ்சையுடன் இருப்பதும் சகசம் ஆகிவிட்டன.

இதிலெல்லாம் குழந்தைகளுக்கு எவ்வளவோ வேடிக்கையும் விளையாட்டுங்கூட. வயதான குழந்தைகள் இருவரும் கோபுவைத் தனிமையில், 'அம்மாக் கோதண்டராமன்' என்றே அழைப்பார்கள். அவனும், "பாரு, அம்மா, என்னை இவாள்ளாம் பரியாசம் பண்றா!" என்று அம்மாவிடமே சொல்லி அழ ஆரம்பித்து விடுவான்.

கோபுவின் தந்தை ரங்கூனுக்கு வந்து வருஷங்கள் பத்து இருக்கும். கவர்ன்மென்டு ஆபீஸில் அவருக்கு வேலை. அவர் வசித்தது நாற்பத்துமூன்றும் நம்பர் தெரு. கேட்க வேண்டுமா, ரங்கூனில் உள்ள பல மாடிகள் கொண்ட வீடுகளுக்கு! நீண்ட தெருக்களும் இரு புறமும் உயர்ந்த அந்தஸ்துகள் கொண்ட கட்டிடங்களும் எங்கும் நிரம்பியிருந்தன. அந்த மாதிரி கட்டிடங்களில்

ஒன்றின் கீழ்த்தளத்தில்தான் அவரும் குடியிருந்தார். மேல்தளங்களில் வேறு குடும்பங்கள் வசித்து வந்தன.

ஜப்பான் யுத்தம் தொடங்கியதும் ரங்கூனுக்குத் தான் முதலில் ஆபத்து என்று பலருக்கும் தெரிந்து விட்டது. அங்கே இருந்த தென்னிந்தியர்களின் குடும்பங்களில், பெண்களும் குழந்தைகளும் கொஞ்சம் கொஞ்சமாகக் கப்பல்களில் தாய் நாட்டிற்குப் பிரயாண மானார்கள். அண்டை வீடுகளில் உள்ளவர்களும் மேல் அந்தஸ்தில் உள்ளவர்களும் பட்ட கலவரத்தில் கோபு வின் தாய் அவ்வளவாகச் சேரவில்லை. காரணம், அவளுக்குத் தன் கணவர் அரசாங்க உத்தியோகத் தில் இருந்ததால் சீக்கிரம் அவருக்கு விடுதலை கிடைக் காது என்று தெரிந்ததுதான். அவரை மட்டும் தனியே ரங்கூனில் விட்டுத் தான்மட்டும் குழந்தைகளுடன் தாய் நாட்டுக்குச் செல்லவும் அவள் தயாராக இல்லை.

அன்று சாயங்காலம் மணி நாலு அல்லது நாலரை இருக்கலாம். குழந்தை கோபு வாசலில் நின்றவன் எதையோ காதால் கேட்பவன்போல் நின்றிருந்தான். சற்று நேரத்தில் அவன் உள்ளே வேகமாக ஓடி வந்து, "அம்மா, அம்மா, ஆகாயக் கப்பல் அதோ ஒண்ணு பாரு" என்று உரக்கச் சொல்லியவண்ணம், தாயின் புடைவை நுனியைப் பிடித்து வாசலுக்கு இழுத்துச் சென்றான். பக்கத்து அறையில் விளையாட்டில் முழு கிக் கிடந்த மணியும் தர்முவும் சட்டென்று கோபுவின் வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் எழுந்து வந்தார் கள். மேற்கு வானத்தில் சூரியன் பிரகாசித்துக்கொண் டிருந்தான். அதனால் கிழக்கு வானத்தில் காணப்பட்ட வைகள் பளிச்சென்று தெரிந்தன. ஓர் ஆகாய விமானம் பொட்டளவில் வெகு தூரத்தில் தெரிந்தது. வண்டின் ரீங்காரம்போல் அதன் சுருதி காதில் கேட்க ஆரம்பித் தது. குழந்தையின் செவி வெகு நுட்பமாகக் கவனித்த தைத் தாய் நினைத்துச் சந்தோஷம் அடைந்தாள்.

ஆனால் இவர்கள் கவனிக்கையிலேயே, எதிரி விமானத்தைப் பார்த்ததும் அபாயச் சங்கு ஒலமிடும் சப்தம் எல்லாப் பக்கங்களிலும் கேட்க ஆரம்பித்தது. அவ்வளவு தான், தாய், குழந்தைகளை விறுவிறு என்று சேர்த்து உள்ளே அழைத்துச் சென்றுவிட்டாள். சங்கு ஊதவும், தெருக்களில் உள்ள ஜனங்கள் ஓட ஆரம்பித்தார்கள். வண்டிகள் ஆங்காங்கே நிறுத்தப்பட்டு அவற்றில் உள்ளவர்கள் கீழே இறங்கி அகப்பட்ட இடங்களில் மறைந்துகொண்டார்கள். சிலர் வெட்டியிருந்த கிடங்குகளில் குதித்துவிட்டார்கள். கோபுவின் வீட்டினுள் ஓர் அறையில், தாயும் மூன்று சிறுவர்களும் மேஜையின் கீழ்ப் பதுங்கிக்கொண்டார்கள். கோபு மட்டும் கூர்மையாகச் சப்தத்தைக் கவனித்துக்கொண்டும், வாய் ஓயாமல் கேள்விகளைக் கேட்டுக்கொண்டும் இருந்தான்.

"ஏம்மா, குண்டு விழுமோ? எத்தனை கப்பல் பறக்கும்? குண்டு போட்டா, நம்மாத்து மாடியிலே தானே விழும்? பயம் இல்லையே? அப்பா வறல்லியே?" என்றெல்லாம் கோபுவின் வாய், விடாமல் சொல்லியது.

"த்சு! பேசாதேடா; காதுலே பஞ்சை வைச்சுக் கோடான்னா மாட்டேங்கிறயே! அப்பா வரட்டும், சொல்றேன் பாரு" என்று பெரியவனான மணி அதட்டினான் கோபுவை. வயதில் மணி சற்றுப் பெரியவன் ஆனதாலும், அம்மாதிரி அபாய காலங்களில் செய்ய வேண்டியவைகளைச் சரியாக ஞாபகத்தில் வைத்திருந்ததாலும், தன் ஜேபியில் வைத்திருந்த பஞ்சை எடுத்து ஒவ்வொருவருக்கும் கொஞ்சம் கொடுத்தான். கலவரத்தில் கோபுவின் தாய்க்கு இவையெல்லாம் மறந்து போய் விட்டன. மேலும், 'புருஷன் ஆபீஸிலிருந்து வரும் வேளை ஆயிற்றே! ஐயோ! தங்க இடம் தெரியாமல் பாதையில் தத்தளித்தாரேயானால் என்ன செய்வது!' என்றெல்லாம் அவள் மனம் கவலைகொண்டதைக் குழந்தைகள் அறிவார்களா?

விமானங்கள் பறக்கும் சப்தம் வரவர அதிகம் ஆயிற்று. ஒன்று அல்ல, அநேக விமானங்கள் பறப்பது, காதை அடைக்கும் பெரிய சப்தமாக ஆகிவிட்டது. யந்திரம் சுற்றும் சப்தம் சமீபிக்கவும், 'தடால் தடால்' என்று குண்டுகள் விழும் இடி போன்ற அதிர்ச்சி எங்கும் பரவிக் காதைத் துளைத்தது. தாயும் குழந்தைகளும் நடுநடுங்கினார்கள். தர்முவும் கோபுவும் சேர்ந்து தாயின் தோள்களைக் கட்டிக்கொண்டு, 'ஓ'வென்று அழுதார்கள். மணி மட்டும் மேஜையின் கால்களில் ஒன்றை இறுகத் தழுவிக்கொண்டு அச்சத்துடன் விழித்தான். தன் கைகள் குழந்தைகளைக் கட்டி அணைக்க, தாயும் ஒன்றும் புரியாமல் கதி கலங்கினாள்.

எல்லாம் அரை மணி வரையில்தான் இருந்திருக்கும். ஆனால் மேஜையின் கீழே கிடந்தவர்களுக்கு அவ்வளவும் ஒரு யுகமாகத் தோன்றியதில் ஆச்சரியம் இல்லை! வர வரச் சப்தமும் குறைந்து, கொஞ்சங் கொஞ்சமாக விமானத்தின் ஓசையும் தூரத்தில் சென்று, கடைசியாக மறைந்தது. அபாயம் நீங்கியதை நீண்ட சங்கு ஊதல் வெளியிட்டது. குழந்தைகள் மூன்று பேரும், 'அப்பாடி!' என்று கவலை நீங்கினவர்களாக, மேஜையின் கீழிருந்து வெளிக் கிளம்பி வாசலுக்கு ஓடினார்கள். பெரிய விடுதலை பெற்றதுபோல் அவர்களுக்குத் தோன்றியது. ஆனால் அவர்களுடைய தாய் மட்டும் கணவன் ஞாபகம் ஏற்பட்டு, அதிகமான மனவேதனையில் அகப்பட்டுத் தத்தளித்தாள். இதுகாறும் புத்தி, வேலை செய்யாதிருந்ததனால் அவளுக்கு ஒருவாறு மனத்தில் இதாக் கவலை உண்டாகவில்லை. ஆனால் குண்டுப் பயம் போகவே, ஆபீஸிலிருந்து வருகையில் கணவன் பேரில் குண்டு விழுந்து, அவர் அடிபட்டோ இறந்தோ போயிருந்தால் என்ன செய்வது என்ற எண்ணம் அதிகரிக்கத் தொடங்கியது. உடனே உடம்பு குபீரென்று வேர்த்தது; நாக்கும் வறண்டுவிட்டது. படபடவென்று மார்பு அடித்துக்கொண்டது. போதாததற்கு, தெரு

வில் சென்ற ஒருவன், 'கவர்ன்மென்டு கட்டிடங்களின் மேல்தான் குண்டுகள் விழுந்தனவாம்' என்று பெரும் கூச்சல் போட்டுக்கொண்டு ஓடினன். அதைக் கேட்ட பிறகும் மனத்தில் கவலே அதிகரிக்காமல் இருப்பது அசாத்தியம் ஆகிவிட்டது.

இதற்குள் வாசலில் மோட்டார் வண்டி ஒன்று வந்து நின்றது. குழந்தைகள் மூவரும் ஏக காலத்தில், 'அப்பா வந்தாட்டார்!' என்று உரக்கக் கத்தவே தவித்துக்கொண் டிருந்த தங்கம்மாளின் உடம்பில் ரத்த ஓட்டம் ஏற்பட்டது. தன்னே அறியாமலே அவளும் வாசலுக்கு வேகமாக எழுந்து சென்ருள்.

ஸீதாராமையர் வண்டியிலிருந்து இறங்கிஞர். அவர் முகத்தில் ஆயாசக் குறிகள் தென்பட்டன. கண்களில் கலவரம் தெரிந்தது. சட்டையெல்லாம் புழுதியாகி இருந்தது. நெற்றியில் வேர்வைத் துளிகள் வழிந்தோடின. மனேவியைப் பார்த்ததும் சற்றுச் சிரிக்க முயன்றுவிட்டு, "அப்பாடா! போதும், போதும், இந்த அவஸ்தை! நாளேக்கே புறப்பட வேண்டியது தான், ஊரைப் பார்க்க. 'குழந்தைகளே அழைத்துக் கொண்டு நீ போ' என்று போன வாரமே நான் சொன்னேன். நீ கேட்டாயா?" என்ருர்.

"ஆமாம், உங்களே விட்டுட்டுப் போக எனக்குப் பிடிக்கல்லே. வேலேயும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம். நாம்பாட்டுக்கு ஊருக்குப் போவோம்" என்ருள் மனேவி சலிப்புடன்.

"ஊருக்கு என்ன, ரெயிலா போறது? இந்த எழவு கப்பல்லே இடம் கிடைக்கணும். எதுவும் வெள்ளேக்காரன்களுக்கு அபபுறந்தான் நமக்கு இடம் தருன். என்னவெல்லாம் நமக்கு இன்னும் ஏற்படணுமோ?" என்று அவர் சொல்லிவிட்டு, குழந்தைகளேப் பார்த்ததும், "ஏண்டா, நீங்கள்ளாம் ரொம்பப் பயந்து

போயிட்டேளோ?'' என்றார். அதற்கு மணி, "இல்லை அப்பா, நாங்கள்ளாம் மேஜையின் கீழேதான் பதுங் கிண்டோம். கோபுமாத்திரம் சொன்னாக் கேக்க மாட் டேங்கிறான், அப்பா! காதுலே பஞ்சை வைச்சுக் கோன்னு எடுத்து எடுத்து எறிஞ்சுடறான்'' என்று சொன்னான்.

''ஏண்டா பயலே, சொன்னதைக் கேக்காட்டாத் தெரியுமோன்னோ? இங்கேயே விட்டுவிட்டு நாங்கள் ளாம் போய்டுவோம். நீ மாத்திரம் முழிக்க வேண்டியது தான்'' என்றார் தந்தை கோபுவைப் பார்த்து.

''அவர் வேடிக்கையாகத்தான் சொன்னார் குழந்தை கோபுவுக்குக் கடைசி வார்த்தைகளால் பயம் அதிகம் உண்டாயிற்று. முகம் உடனே வாடியது. கண்களிலும் நீர் நிரம்பியது. தங்கம்மாளும் வழக்கம் போல் குழந்தைக்குப் பரிந்துகொண்டு பேசாமல், ஏனோ வாயை மூடிக்கொண்டு சும்மா இருந்தாள்! கோபுவின் மனத்தில் தைத்துவிட்டது அவ்வெண்ணம்.

மறுநாள் காலையில் ஊரில் எங்கும் சற்று அமைதி யாக இருந்தது. இருந்தாலும், சீதாராமையர் வரையி லும், ஆபீஸுக்குச் சென்றவர், மேலதிகாரியிடம் தமக்கு லீவு வேண்டும் என்று கேட்டார். தங்கம்மாளும் மூட்டை முடிச்சுகளைக் கட்டித் தயாரானாள். கப்பலில் இடம் கிடைக்க வேண்டியதுதான் பாக்கி. மற்றப்படி ஊருக்குப் போவதில்தான் எல்லோருக்கும் திருஷ்டி.

'குட்டிக்கும் நாய்க்கும் குடி போகச் சந்தோஷம்' என்று ஒரு பழமொழி உண்டு. அவ்விதந்தான் இருந் தது சிறுவர்களின் மனமும். மணி வயதில பன்னிரண்டு ஆனவனாயினும் சதா கோபுவைக் கிண்டுவதில்தான் குறியாக இருப்பான். தர்முவோவெனில் தமைய னோடு சேர்ந்து தம்பியைத் தொந்தரவு செய்வதில் உத்ஸாகமாக இருப்பாள். அவ்விருவரும் தங்களுக்கு

என்று தனிப் பெட்டியில் தங்கள் சாமான்களை மட்டும் அடுக்கி வைத்துக்கொண் டிருந்தார்கள். கோபுவுக்குத் தன்னுடைய சிலேட்டுப் பலகையை அவர்கள் பெட்டியில் வைக்க வேண்டுமென்று தோன்றிவிட்டது. பெட்டி நிறையச் சாமான்களுடன் மூடி பிதுங்கியதால் சிலேட்டுப் பலகையை வைக்க முடியவில்லை. மணி வேறு, “போடா, உன் சிலேட்டை இங்கேயே வச்சுடு. இடமில்லே பொட்டியிலே” என்று சொல்லிச் சிரித்தான்.

சும்மா இராமல் தர்முவும், “சிலேட்டு எதுக்கு? நீதான் படிக்கிறதில்லையே; ஓடச்சு எறி அதை!” என்று மணியோடு சேர்ந்து கூடச் சொன்னாள்.

கோபுவுக்கு வந்துவிட்டது ரோஷம். அம்மாவிடம் போய்ப் புகார் சொன்னான். அவள் ஏதேதோ பல கவலைகளின் மத்தியில் இருந்தாள். காதில் குழந்தையின் குரல் பட்டதோ என்னவோ? “போ, தொந்தரவு செய்யாதே. பெரியவா சொன்னத்தைக் கேளு” என்ற புத்திமதிதான் அவள் வாயிலிருந்து வந்தது.

மணிக்கு இதில் சந்தோஷம். அம்மா இதுவரையிலும் கோபிக்காமல் இருந்ததே கிடையாது. இன்றுதான் தன்னை ஒன்றும் அவள் கோபுவுக்காகக் கோபிக்கவில்லை. தன் தங்கையிடம் சமிக்ஞை செய்துவிட்டு அவன், “டே கோபு, ரொம்ப வம்பு பண்ணினயோ, பாரு. அப்பா சொன்னமாதிரி, உன்னே இங்கேயே விட்டுடுவோம். அவ்வளவுதான், ஜாக்கிரதை” என்று அதட்டினான். பாவம்! கோபுவுக்குத் திகில் உண்டாகிவிட்டது. தர்மு மட்டும் சற்றுத் தயங்கி, “மணி, அப்பறம் அம்மா வைவாடா!” என்று எச்சரிக்கை செய்தாள். அழாத தோஷமாகக் கலங்கிய கோபுவின் கண்களைக் கண்டு அவளுக்கு மனம் இளகியது. “போடி, உன் வேலையைப் பாரு” என்று மணி இன்னும் உத்ஸாகமாகக் கோபுவைத் தொந்தரவுக்கு உள்ளாக்கினான்.

மத்தியான்னம், தாம் வழக்கமாக வரும் வேளைக்குச் சற்று முன்பே சீதாராமையர் வீடு திரும்பினார். ஆபீஸில் மற்றொரு சிநேகிதர் தமக்காகக் கிடைத்த நான்கு டிக்கெட்டுகளை அவரிடம் நீட்டி, "ஓய், நீர் வேண்டுமானால் நாளையே புறப்படும். எனக்கு அந்தப் பாவி அடுத்த வாரந்தான் லீவு தருவானாம். உமக்கு வேண்டுமானால் இதோ நான்கு டிக்கட்டுகள் இருக்கின்றன" என்று கொடுக்கவும், நன்றி மேலிட்ட முகத்துடன் அவைகளை வாங்கிக்கொண்டு சீதாராமையர், 'இனித் தாமதிப்பதில் பிரயோசனம் இல்லை; வேலையும் வேண்டாம், லீவு கிடைக்காவிட்டால்' என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டார். மேலதிகாரியிடமும் தம் தீர்மானத்தை வெளியிட்டார். அவன் மறுத்துப் பேசவே ராஜீநாமாவைக் கையிலேயே எழுதிக் கொடுத்துவிட்டு, நுகத்தடியினின்றும் கழற்றப்பட்டவர்போல் வீட்டை நோக்கி மன அமைதியுடன் நடந்து சென்றார்.

பொழுது விடிந்தால் கப்பலில் ஏற வேண்டும். வீட்டில் அவர் அதைச் சொல்லவே, குழந்தைகள் மூன்று பேரும் குதூகலத்துடன் வாசலில் ஓடிவந்து நின்றார்கள். இதுவரையில் அவர்கள் கப்பல் பிரயாணம் செய்ததில்லை. ஆதலால் அவர்களுக்கு இப்பொழுது கொண்டாட்டமாக இருந்தது. ஒருவரோடு ஒருவர் அதைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள்.

"தர்மு, நானும் நீயும் முன் சீட்டில் டிரைவர் பக்கத்தில் உட்காருவோம் காரிலே. கோபு மட்டும் பின்னால் அம்மா அப்பாவோடே உக்காரட்டும்" என்றான் மணி குறும்பாக.

"சரிடா" என்றாள் தர்மு தயாராக.

"இல்லை, நானுந்தான் முன்னாலே உட்காருவேன்" என்று ஊளையிட்டான் கோபு.

உடனே மணி, "ஏண்டா கத்தறே? அப்பறம் உன்னே விட்டுட்டுப் போயிடுவோம். நீ மாத்திரம் இங்கேதான் கிடக்கணும்" என்று சொன்னான்.

முந்திய தினம் பிரயோகித்த பாணம் அல்லவா அது? அதில் கோபுவின் ஸப்த நாடிகளும் அடங்கிய தையும் அவன் தெரிந்துகொண்டுவிட்டான் அல்லவா? கோபுவின் கண்களில் நீர் பெருகி ஆறாக ஓடியது. அவன் தாயும் என்னவோ யோசனையில் கிடந்தவள், வாசலில் நடக்கும் சண்டையைக் கவனிக்கவே இல்லை.

மறு நாள் காலை விடியும் நேரத்திலேயே துறை முகத்திற்குக் காரில் ஏறினார்கள் எல்லோரும். வண்டி துறைமுகத்தில் வந்து நின்றதுதான் தாமதம், எச்சரிக் கைச் சங்கு திடீரென்று ஊளையிட ஆரம்பித்தது. உடனே வண்டியை விட்டுக் கூட்டத்துடன் உள்ளே சென்று, மறைந்துகொள்ள வேண்டிய இடங்களில் ஒளிந்துகொண்டார்கள். ஆனால் கொஞ்ச நேரத்தில், மறுபடியும் பயம் நீங்கிய ஒலி கிளம்பியதால் எல் லோரும் அவரவர்கள் இடங்களை விட்டு வெளிக் கிளம்பினார்கள். எச்சரிக்கையைத் தவறிச் செய்ததாகப் பிறகு தெரியவந்தது. எல்லாம் ஒரே கலவரமாக இருந்த தோற்றம் சற்று அடங்கியது. அவரவர்கள் சாமான் கள் இடம் தெரியாமல் மாற்றப்பட்டுக் கிடந்தன. ஒரு வாறு சீதாராமையரும் தங்கம்மாளும் தங்கள் மூட்டை களைக் கண்டு பிடித்து, கப்பலருகில் வந்து சேர்ந்தார் கள். கேட்க வேண்டுமா ஜனங்களின் கூட்டத்திற்கு! குழந்தைகளின் அழுகையும், பலருடைய இரைச்சலும் ஒன்றாகக் கலந்து காதில் விழுந்தன.

இதனிடையில், திரும்பவும் ஏதாவது சங்கு ஊதல் கேட்டால் என்ன செய்வது! அதற்குள் கப்பலில் அவரவர்கள் இடங்களில் சென்று அமருவதுதான் சரி என்று ஏககாலத்தில் பலரும் விழுந்தடித்துக்கொண்டு, கப்பலிலிருந்து தொங்கிய ஏணிகளில் ஏறினார்கள்.

ஒழுங்குக்கே அடங்காத கூட்டமாக இருந்ததால் ஒரு வரும் அமரிக்கையாக நடந்துகொள்ள முடியவில்லை. சீதாராமையர் முந்தியும், பிறகு மணியும், தங்கம்மாள் இடுப்பில் குழந்தை கோபுவுடனும், ஒரு கையால் தர்முவைப் பிடித்துக்கொண்டும், ஜாக்கிரதையாக ஒருவர் பின் ஒருவராக நடந்து சென்றார்கள்.

ஏணி ஏறுவதில் சற்றுச் சிரமம் உண்டு. இரண்டு கைகளையும் உபயோகித்தேதான் ஏற வேண்டும். ஆகை யால் இடுப்பில் கோபுவைத் தூக்கிக்கொண்டு ஏறுவது சிரமமாக்கி விட்டது தங்கம்மாளுக்கு. அவனைக் கீழே விடவும் முடியவில்லை; அவன் கெட்டியாக அவளைப் பிடித்துக்கொண்டு கீழே இறங்க மாட்டேன் என்றான். இதற்குள் சீதாராமையர் மேலே ஏறிச் சென்று விட்டார். குழந்தைகள் மணியும் தர்முவுங்கூட உத்ஸாக மாகத் திரும்பிப் பாராமல் ஏணியில் ஏறிவிட்டார்கள். தங்கம்மாள் மட்டும் குழந்தை கோபுவுடன் கீழே திண்டாடினாள். சீதாராமையர், இருந்த இடத்திலிருந்து கோபம் மேலிட்டுக் கத்தினார். "இந்தா, அந்தச் சனியனைக் கீழே விடு. கையைப் பிடிச்சுண்டு வரட் டுமே!" என்று. கோபு உண்மையில் பயந்துவிட் டான்! இதனிடையில் பின்னால் ஏறிய வயசான ஒருவர், "அம்மா, இங்கே குழந்தையைக் கொடுங்கோ, நான் ஜாக்கிரதையாகத் தோளிலே தூக்கிண்டு வரேன். நீங்கள் நிற்பதால் பலருக்கு இடைஞ்சலாக இருக்கு!" என்று கையை நீட்டினார். தங்கம்மாளும் அழுது கொண்டிருந்த கோபுவை வெடுக்கென்று அவரிடம் கொடுத்தாள். மறு நிமிஷம் அவள் கிடுகிடுவென்று மேலே தனியாக ஏறிவிட்டாள். மேல் அந்தஸ்திலும் காலை வைத்தாகி விட்டது. ஆனால் அவள் நினைத்த விதம் குழந்தை கோபு பெரியவருடன் மேலே ஏறி வரவில்லை. அவருடைய மேல் வேஷ்டியை யாரோ இழுத்துக்கொண்டு போனதில் அவர் முதலில் அதை விடுவித்துக்கொண்டுதான் ஏணியின் படியில் காலை

வைக்க முடிந்தது. கோபுவும் அவர் தலையை இரு கைகளாலும் கட்டிக்கொண்டு மிகுந்த ஏக்கத்துடன் கப்பலில் ஏறிச் செல்லும் தன் தாயைக் கவனித்தான். நிச்சயம் குழந்தையும் சீக்கிரம் மேலே வந்துவிடுவான் என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். மணி மேலே இருந்து, "கோபு! அழாதே! நாங்கள்ளாம் பாத்துண்டிருக்கோம்" என்று கத்தியது அங்குள்ள ஜன சந்தடியில் கோபுவின் செவிகளில் விழுந்ததோ என்னவோ?

ஆனால் திடீரென்று அச்சமயத்தில் அபாயச் சங்கு மறுபடி ஊதத் தொடங்கிவிட்டது. கப்பல் தலைவன் உடனே ஆக்ஞை யிட்டான்: "இனி ஒருவரும் மேலே ஏறி வரக் கூடாது. கப்பலும் உடனே நகர்ந்துவிடும்" என்று. அடுத்த கணம் பலரைக் கீழே தள்ளிவிட்டு ஏணிகளை உயர இழுத்துக்கொண்டார்கள் மாலுமிகள். சீதாராமையரும் தங்கம்மாளும் கோபு ஏறவில்லை என்று அறிந்ததும் திகிலடைந்தனர். "ஐயோ, குழந்தையை ஏத்தமாட்டேங்கறானே, பாவி!" என்று தங்கம்மாள் கதறினாள். "கோபு, கோபு!" என்று மணியும் தர்முவும் கீழே கூட்டத்தில் குழந்தை தெரிவதைக் கண்டு கூக்குரலிட்டார்கள்.

சீதாராமையர் கப்பல் தலைவனிடம் ஓடி, "ஐயா, உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. அந்தக் குழந்தையை மட்டும் ஏற்றிவிடுங்கோ. இல்லாவிட்டால் என்னையாவது கீழே இறக்கி விட்டுடுங்கோ" என்று கெஞ்சி மன்றாடினார். "முடியாது, கப்பல் நகர்ந்து விட்டது. நாளை அல்லது மறு நாள் கிளம்பும் கப்பலில் குழந்தை தானே ஜாக்கிரதையாக வந்து சேருவான்" என்றுதான் பதில் வந்தது தலைவனிடமிருந்து. 'சமுத்திரத்தில் குதித்துவிடுவோமா?' என்று தங்கம்மாளின் மனம் போராடியது.

கப்பல் சற்றும் ஈவு இரக்கமின்றி மிதந்து கொண்டே ஜலத்தின் நடுவில் போகத் தொடங்கியது.

குழந்தை கோபுவின் முகமும் அவன் கண்களில் தெரிந்த பயமும் அப்படியே மணியின் மனத்தில் பதிந்துவிட்டன.

"மணி, நீதாண்டா கோபுவை விட்டுட்டு வந்துடுவோம்னு வெறுமனே சொன்னே; அப்படியே நிஜமாயிடுத்து" என்று தர்மு அழுதுகொண்டே சொன்னாள்.

மணி ஒன்றும் பதில் சொல்லாமல் விம்மி விம்மி அழத் தொடங்கினான். 'இனிக் குழந்தையைப் பார்ப்போமா!' என்று தங்கம்மாளின் மனம் இடிந்தது.

ரங்கூனுக்கு எதிரிகள் இட்ட தீ அணைந்தும் தங்கம்மாளின் வயிற்றில் இட்ட தீ அணைவதாகத் தெரியவில்லை!

# அக்கரை பச்சை!

முருகேச முதலியாருக்கு முனிசீப் உத்தியோகம் கிடைத்துப் பத்து வருஷங்கள் ஆகின்றன. அவர் மனத்திற்கிசைந்த வேலையும், அதிக சிரமம் இல்லாத வழியில் காலம் கழிப்பதற்கு ஏற்ற சம்பாத்தியமும் ஏற்பட்டன. குழந்தைகளும் இல்லாததால் அவருக்கு வீட்டு விசாரங்கள் அதிகம் இல்லை. சுகமாகவே காலம் கழித்ததனால்தானோ என்று சந்தேகிக்கும்படியாகச் சிறிய சிரமம் ஏற்பட்டால்கூட அவரால் அதைத் தாங்க முடியாமல் போயிற்று. அற்ப விஷயங்கள் கூட மனத்தின் ஆயாசத்தினால் பெரிதாகத் தோன்றுவது சகசந்தானே?

அவர் மனைவி மீனாம்பாள் கொஞ்சம் படித்தவள். பட்டணத்துப் பெண் ஆனதாலும் லட்சணமாக இருந்ததாலுந்தான் முருகேசம் அவளை விவாகம் செய்து கொண்டார். ஆனால் அவர் எதிர்பாராதவாறு அவள் கேவலம் நகை நட்டுகளில் ஆசை வைக்காமல், பாட்டு, படிப்பு முதலிய அறிவுக்கு இன்பம் தரும் விஷயங்களிலேயே கவனத்தைச் செலுத்தி வந்தாள். அதிலும் நவநாகரிக முறையை அநுசரித்துப் பெண்களின் முன்னேற்றம், சமூக வாழ்வில் ஸ்திரீகளின் உரிமைகள் முதலியவைகளில் ஊக்கம் உடையவளாக இருந்தாள். எந்த ஊருக்குத் தன் கணவன் மாற்றப்பட்டாலும் அங்கங்கே புதிய இயக்கம் ஒன்றை உண்டாக்கி, பெண்கள் சாயங்கால வேளைகளில் ஒன்று சேர்ந்து விளையாடவும், தங்கள் வீட்டுக் கவலைகளை மறந்து மற்றவர்களுடன் பேசிக் காலத்தைக் கழிக்கவும் வசதியான, 'கிளப்புகளை' ஸ்தாபிப்பதில் தன் முழுச் செல்வாக்கையும் உபயோகிப்பாள். அக்காரியங்களினால்

சில சமயம் வீட்டு வேலைகளையும் சற்றுத் தாமதமாகவே செய்யும்படி நேரிடும்.

முருகேசத்துக்குத் தம் மனைவியைப்பற்றி ஊரில் உள்ளவர்கள் புகழ்ந்து பேசுவதில் திருப்தி உண்டு என்றாலும், எப்பொழுதும் தாம் வீட்டுக் கவலைகளையே அறியாதபடி இருப்பது மாறி, அவள் இல்லாத சில சமயம் வீட்டுப் பொறுப்பைத் தாம் வகிக்க நேர்வதைக் குறித்துக் கோபம் அடைவார். அநாவசியமாக ஸ்திரீகளுக்குரிய காரியங்களைத் தாம் செய்ய நேரிடுவதாகவும் கவலைப்படுவார். வரவரப் பொதுஜன ஊழியத்தில் மீனாம்பாளின் மன வலிமையையும் தளரா முயற்சியையும் கண்டு அவருக்குப் பொறாமைகூட ஏற்படலாயிற்று.

* * *

ஒரு நாள் சாயங்காலம் கச்சேரியிலிருந்து வீட்டுக்குத் திரும்பியதும் மனைவியுடன் மோட்டாரில் சென்று காற்று வாங்கிவிட்டு வரலாம் என்று முருகேசம் நினைத்தார். ஆனால் அவர் வண்டியை விட்டு இறங்குவதற்குள் மீனாம்பாள், "நல்ல வேளை! நீங்கள் சீக்கிரம் வந்தீர்களே! வண்டிக்கு என்ன செய்வது என்று ஏங்கினேன்! இன்றைக்கு எங்கள் கிளப்பில் விசேஷம். நான் காரியதரிசியானதால் முன்னதாகவே போய் ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டும். நான் போய் வண்டியை அனுப்பட்டுமா?" என்று சொல்லிக் கொண்டே அவருடைய பதிலை எதிர்பாராதவளாக வண்டியில் கிளம்பினாள். முருகேசத்துக்குக் கோபம் ஒரு பக்கமும் வருத்தம் ஒரு பக்கமுமாக எழுந்தன. பரிசாரகன் கொண்டு வந்து வைத்த காபி, பலகாரங்களைக் கவனியாமல் தம் அறைக்குச் சென்றவர், அப்படியே சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டார். மன நிம்மதி வாராததால் செருப்பை மாட்டிக்கொண்டு கைத்தடியையும் எடுத்துக்கொண்டு வெளியே மைதானத்தைப் பார்க்க நடந்தார்.

அங்கே சென்றதும் அந்த ஊர்ப் பெரிய வக்கீல் கோவிந்தராஜுலுவும் அவர் மனைவியும் மோட்டார் வண்டியை நிறுத்திக்கொண்டு, அதில் உட்கார்ந்தபடி, பேசிக்கொண்டு காற்று வாங்குவது அவர் கண்ணில் பட்டது. கோவிந்தராஜுலு முனிசிப்பைக் கண்டதும் வண்டியிலிருந்து இறங்கி அருகில் சென்று, "ஏது! நடையிலேயே கிளம்பிட்டீங்க இவ்வளவு தூரம்!" என்றார். "ஒன்றும் இல்லை, நடை வேண்டுமென்றுதான் வந்தேன்" என்று முருகேசம் சொல்லி, நிற்காமல் போய்க்கொண்டிருந்தார். கொஞ்ச தூரம் இருவரும் மௌனமாக நடந்தார்கள். பிறகு, முருகேசம் தம் ஏகாந்த சிந்தனைகளுக்கு இடையூறாக வந்த கோவிந்தராஜுலுவை எவ்விதம் போகச் சொல்வது என்று யோசித்து, "உங்கள் மனைவி தனியாக வண்டியில் இருக்கிறார்களே!" என்று நினைவூட்டியதும், கோவிந்தராஜுலு, "ஆமாம். அவள் பயந்தவள் தான். நான் இதோ போகிறேன்" என்று நகர்ந்தார்.

"ஏன் உங்க வீட்டிலே லேடீஸ் கிளப்பில் மெம்பராகவில்லையோ?" என்று முருகேசம் வினவினர்.

"அவளா! அவள் போவதில்லை. எங்கே, வீட்டு வேலைதான் சரியாக இருக்கிறதே! சாயந்தரந்தான் நான் வீட்டுக்கு வருகிறேன். அப்போது அவளும் வெளியே போய்விட்டால் என்ன செய்கிறது? அவளுக்கு வீட்டை விட்டுத் தனியே போகிறதற்கே பிடிக்காது. என்னோடே எங்கேயாவது வருவாள்; அதுவும் நான் கூப்பிட்டால்தான். தானாக எங்கும் போவதில்லை" என்று பெருமையுடன் பேசினார்.

முருகேசத்துக்கு அவர் பேசுவதில் எங்கே தம்மை ஏளனம் செய்கிறாரோ என்றுகூடச் சந்தேகம். ஆகையால், "சரி, வரட்டுமா?" என்று விடை பெற்றுக் கொண்டு மேலே நடந்தார்.

தீபாவளி வந்தது, எண்ணெய் ஸ்நானம் செய்து, காலையில் பலபலவென்று விடியும் நேரத்தில் புது

வேஷ்டி உடுத்து, மாடியில் ஜன்னல் கதவண்டை வந்து உட்கார்ந்தார் முருகேசம். அவர் மனைவி மீனும் பாள், தானும் புதுப் புடைவை கட்டிக்கொண்டு, ஊரில் அக்கம் பக்கங்களில் இருக்கும் ஏழைக் குழந்தை களுக்குப் பழைய வஸ்திரங்களையும் தாங்கள் உபயோ கப்படுத்தாத துணிமணி சாமான்களையும் கொடுத்துக் கட்டிக்கொண்டு வரச்சொல்லிப் பார்த்துச் சந்தோஷித் துக்கொண் டிருந்தாள். சமையற்காரனைக் கூப்பிட்டு, "கிருஷ்ணு! மேலே ஐயாவுக்குத் தீபாவளி பக்ஷணங் களைக் கொடுத்துவிட்டு வா" என்று சொல்லும் அவள் குரல் முருகேசம் காதிலும் பட்டது. அவருக்கு வந்த கோபத்தில், 'நான் என்ன அந்தத் தரித்திரங்களைவிட மட்டமா? இன்றைக்குக்கூட எனக்கு இவளே கொண்டு வந்து கொடுக்கப்படாதா?' என்று முணுமுணுத்துக் கொண்டே எழுந்திருந்து ஜன்னல் கதவுகளைத் திறந்தார்.

காலை வேளை ஆனதாலும் முந்திய தினம் மழை பெய்திருந்தபடியாலும் காற்றுக் குளிர்ந்து அடித்துக் கொண்டிருந்தது. வெகு தூரம் மாந்தோப்பு, கண்ணுக் குப் புலப்பட்டது. கொஞ்ச தூரத்தில் ஒரு குடிசை யும் அதன் வாசலில் மாட்டுக்காரக் கந்தன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யும் கோலமும் அவர் கண்களில் விழுந்தன. கந்தன் பெண்சாதி முருகாயி, அவனுக்குச் சுடு தண்ணீர் காய்ச்சித் தகர டின்னில் ஜலத்தை விட்டு விட்டு, அவனுக்குத் தலையில் சிகைக்காய் தேய்க்க ஆரம்பித்துக்கொண் டிருந்தாள்.

முருகேசத்தின் மனம் அதி வேகமாக எண்ணங் களைச் சேர்த்து ஆராயத் தொடங்கியது. எங்கும் மனித சுபாவம் ஒரே விதமாகக் காணப்பட்டது. 'இவ்வளவு ஏழைமையில் இருப்பவர்கள்கூட நல்ல நாளில் எவ்வளவு அந்நியோந்நியமாக இருக்கிறார் கள்! நமக்கேன் இந்த அதிருஷ்டங்கூடக் கிட்டவில்லை?' என்று மனம் நொந்துகொண்டார். மீனும்பாள்

தம்மை வேண்டுமென்றே நிராகரிப்பதாக அவருக்குத் தோன்றியது. அந்தச் சமயம் கிருஷ்ணன் வெள்ளித் தட்டில் பக்ஷணங்கள் கொண்டுவந்து, "வைக்கட்டுமா?" என்று அவரைக் கேட்டான்.

"வேண்டாம்! அம்மாவையே சாப்பிடச் சொல்லு! இல்லாவிட்டால் அந்தப் பிச்சைக்காரர்களுக்குக் கொடு!" என்று சீறி விழுந்தார். கிருஷ்ணன் மௌனமாக அவைகளை ஏந்திய வண்ணம் கீழே திரும்பினான்.

மீனும்பாளுக்கு முருகேசம் தன் பேரில் ஏதோ புகார் செய்வது காதில் விழுந்தது. தான் வெளியே போய்க் கிளப்பில் தாமதித்து வருவதில் அவருக்கு மிகவும் வருத்தம் இருக்கும் என்று ஊகித்து அறிந்து கொண்டாள். இருந்தாலும் வீட்டிலுள்ள காரியங்களைக் கவனியாமல் தப்புகள் நேரிடும்படி தான் ஒரு நாளும் விடாததால் தன் பேரில் புகார் செய்யக் காரணம் வேறு ஏதாவது தனக்குத் தெரியாத விஷயமாக இருக்க வேண்டுமென்று தோன்றிற்று. உடனே சமையற்காரன் கையிலிருந்து அந்தச் சாமான்களை வாங்கிக்கொண்டு, "அடுப்பில் பால் காய்கிறது, நான் மெத்தைக்குப் போய் விட்டு வருகிறேன்; பார்த்துக்கொள்!" என்று சொல்லி விட்டு மேலே வந்து, அவர் அருகில் மேஜையின்பேரில் அவைகளை வைத்துவிட்டு அவர் ஜன்னலின் வழியாகப் பார்த்துக்கொண்டிருப்பதைக் கவனித்துத் தானும் அந்தப் பக்கம் பார்த்தாள். முருகாயி அப்பொழுது தான் கந்தன் தலையின்பேரில் தகரக் குவளையிலிருந்து ஒரு கையால் ஜலத்தை வார்த்துக்கொண்டு மற்றொரு கையால் அவன் தலைமயிரை அலசிக்கொண்டிருந்தாள். மீனும்பாள் மெதுவாகச் சிரிப்புடன் கலந்த வார்த்தைகளில், "ஏது! முருகாயி அமர்க்களம் செய்கிறாளே! கந்தன் பாடு தேவலை!" என்று சொல்லிப் பக்ஷணத்தை அவர் முன் நீட்டினாள்.

"ஆமாம். நம்ம வீட்டிலேதான் எல்லாம் தாறு மாறுகக் கிடக்கிறது. ஏழையானல் என்ன? கந்தன் பாடு அதிருஷ்டம்! முருகாயி அன்போடு அவனுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுகிருள்" என்று முருகேசம் சொல்லித் துயரத்தை ஒருவிதமாக வெளியிட்டு, மேலும் பெரிய பிரசங்கம் ஒன்றைச் செய்தார்.

"நான் என்ன, ஏதோ காலையில் எழுந்து கோர்ட்டு வேலை கவனிக்கிறேன். அப்புறம் வீட்டை விட்டுப் போனல் சாயங்காலம் வருகிறேன். வந்தால், இங் கென்ன, 'வந்தீர்களா? காபி சாப்பிடுகிறீர்களா?' என்று கேட்பார் இல்லை. நீதான் தினம், 'கிளப் கிளப்' என்று பறக்கிறே. அன்றைக்குக் கோவிந்தராஜுலு சம்சாரம் அவரோடே மைதானத்துக்கு வந்திருந்தாள். அந்த மாதிரி என்றைக்காவது நீ என்னோடே, போனல் போகிறதென்று ஒரு நாள் வந்திருக்கிருயா? மனுஷர் களுக்கு வேறு என்ன வேணும்! பெண்சாதி அடங்கிய வளாக இருக்க வேணும். இந்த ஜன்மத்தில் இனி மேல் இல்லை. கந்தன் மாதிரி கூழ் குடித்தாலும் தேவலை. அந்த முருகாயி மாதிரி ஒரு பெண்சாதி யுடன் வாழ்ந்தால் போதும்" என்று மழை பெய்தாற் போல் தம் மனக்குறையைக் கொட்டி முடித்தார்.

தர்மாம்பாள் எவ்வளவு அடக்க சுபாவம் உடையவ ளாக இருந்தாலும், இன்றைக்கு அவர் மனம் பொறுக்க வில்லை. நாளும் கிழமையுமாக ஏன் இந்த மனக் குறை என்று அவளுக்கு வெறுப்பு உண்டாயிற்று, அவர் பேரில்.

உடனே, "சரி. முருகாயி மாதிரி கிடைக்கணுமா! இந்த வயசிலேயே இன்னும் இது மாதிரி எல்லாம் வேண்டியிருக்கே!" என்று சொல்லிவிட்டு அப்படியே திரும்பினுள்.

மறு நாள் காலையில் வழக்கம்போல் முருகேசம் தம் அறையில் கோர்ட்டுக் காகிதங்களைப் படித்துக்

கொண்டிருந்தார். அப்பொழுது கந்தன் ஓடிவந்து, "சாமி, சாமி! ஐயோ! படுபாவி இப்படிப் பண்ணிட்டுப் பூட்டாளே!" என்று அலறினன்.

"என்னடா கந்தா? என்ன வந்துவிட்டது சொல்லு" என்று கேட்டார் முருகேசம்.

"என் பொண்டாட்டி ஓடிடிச்சு, சாமி. அந்தக் கழுதே, பாவிமவன் காளியோடே ஓடிப்பூட்டா, என் சம்சாரம். ரொம்ப நல்லவளாட்டம் வேசம் போட்டா ஐயா! இப்போ அவனைக் கட்டி இழுத்துக்கிட்டுப் பூட்டாளே! எங் கொளந்தையை எப்படிக் காப்பாத்து வேன்!" என்று அழுதான்.

முருகேசத்துக்கு ஒன்றும் புரியவில்லை. "ஏண்டா, அன்றைக்குக்கூட உனக்கு எண்ணெய் தேய்த்தா ளேடா. சே சே. இருக்காது. அவசரப்படாதே! மாமன் வீட்டுக்குப் போயிருப்பாடா. நல்லாத்தேடிப் பாரு. அவசரப்பட்டு அவள் பேரில் புகார் செய்யாதே" என்று புத்திமதி சொன்னர்.

"இல்லேங்க, சாமி. இப்பத்தான் தெரிஞ்சுது அவ நீலித்தனமெல்லாம். நான் ஏமாந்துட்டேன். அவ சமாசாரம் நம்ம அம்மாவுக்குக்கூட முன்னேயே தெரியும். எங்கிட்டக்கூடச் சொல்லியிருக்காங்க, கொளந்தைக்கிக் கொடுத்த துணியை அவ வித்துட் டான்னு. நான் எங்கே வீட்டிலே இருக்கேன், அதெல்லாம் கவனிக்க? இப்பத்தான் வெளிச்சமாச் சுங்க!" என்று மறுபடியும் சொன்னன்.

முதல் நாள் முருகாயியின் புகழைத் தாம் பாடியது முருகேசத்துக்கு ஞாபகம் வரவே மீனும் பாள் தம்மைப் பார்த்துச் சிரிக்க அங்கே வந்து பின்னல் நிற்கிருளோ என்று சந்தேகித்துத் திரும்பிப் பார்த்தார். மீனும்பாள் வரவே இல்லை. ஆனல் அவள் கீழே

கந்தனைப் பார்த்துப் பேசின வார்த்தைகள் மாத்திரம் காதில் விழுந்தன.

"கந்தா! நீ குழந்தையைப்பற்றிக் கவலைப்படாதே; நான் ஏற்பாடு செய்கிறேன். அவள் எங்கே என்று மாத்திரம் விசாரித்துப் பார்!"

தம்மை ஏன் அவள் பரிகசிக்காமல் விட்டுவிட்டாள் என்று முருகேசத்துக்குப் புரியவில்லை. அந்தக் கவலையில் அவர் மறுபடியும் ஆழ்ந்தார்.

# தேற்றுபவர் யார்?

எங்கள் வீட்டிற்கு நாலு வீடு தாண்டினல் கமலத்தின் வீடு. பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் கமலத்துடன் விளையாட வேண்டுமென்று ஆசையாக இருந்தது. மன்னி உள்ளே போயிருந்த சமயமாக இருந்ததால் வாசற்படியில் மெதுவாக இறங்கினேன். ஜன்னல் வழியாக என் அண்ணு பிள்ளை கிட்டு என்னைப் பார்த்துக்கொண் டிருப்பதை நான் கவனிக்கவில்லை. "எங்கே அக்கா போறே? நானும் வரட்டுமா?'' என்று கத்தியது காதில் விழவே திடுக்கிட்டு நின்றேன். நான் அவனுக்கு அத்தையானலும், எனக்கு வயசு ஜாஸ்தியாக இல்லாததாலோ என்னவோ என்னை அக்கா என்றுதான் கிட்டு கூப்பிடுவது வழக்கம். நான் கண்ணைக் காட்டி, "கிட்டு! அதோ பூச்சாண்டி வருன்; உள்ளே ஓடிப் போயிடு!'' என்று சொன்னேன். ஆனல், "எங்கே பூச்சாண்டி'' என்று கிட்டு எழும்பிப் பார்த்தான்.

"எனக்கென்ன, அதோ வந்துவிட்டான். உன்னைத் தூக்கிண்டு போகப் போருன். நான் போறேன்: எனக்குப் பயமா யிருக்கு!'' என்று நான் சொல்லிப் பாசாங்கு செய்தேன். கிட்டு ஜன்னலிலிருந்து கீழே இறங்கி, உள்ளே ஓடும் சப்தம் காதில் விழவே, நானும் கமலத்தின் வீட்டைப் பார்க்க ஓட்டமாக ஓடினேன்.

அப்பொழுதுதான் கமலம் வாசல் திண்ணையின் மேல் முல்லை அரும்புகளை வைத்துக்கொண்டு மாலை தொடுத்துக்கொண் டிருந்தாள். அவள் வேலையிலேயே கவனமாக இருந்ததால், நான் வாசற்படி ஏறுமளவும் என்னை அவள் கவனிக்கவில்லை. ஆனல் அவள் பின்னல்

அவள் சகோதரன் சாம்பு ஓசை செய்யாமல் வந்து அவள் கண்களை இறுகப் பொத்தினான்.

"எனக்குத் தெரியாதோ? நீதான் அண்ணா" என்று கமலம் திமிறிக்கொண்டும், தன் கைகளால் அவன் கைகளைத் தள்ளிக்கொண்டும் முகமெல்லாம் சிவக்கக் கன்னங்களில் குழிகள் விழச் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

அவன், "கன்னத்தில் குழியைப் பாரு" என்று சொல்லி அவள் கன்னத்தைக் கிள்ளினான்.

"இருக்கட்டும் உன் கொஞ்சலெல்லாம். நீ வாங்கிண்டு வறேன்னுட்டுப் பேசாமல் இருக்கயே! நான் நன்னாக் கோத்து மணியெல்லாம் உன் ரூம் வாசல்லே கட்டறேன்னேனே" என்று சொல்லி முகத்தை அப்புறம் திருப்பிக்கொண்டாள்.

"ஆகட்டும், நாளைக்குக் காலேஜிலிருந்து வரும் போது வாங்கிண்டு வறேன். ஆனால் நீ மாத்திரம் நான் சொல்றதை நிச்சயமாகக் கேக்கறேன்னு சொல்லு" என்றான். "ஆகட்டும் அண்ணா" என்று சொல்லி விட்டு என்ன கேட்கப்போகிறானோ என்று அவனையே பார்த்தவளாக மகிழ்ச்சியால் முகம் மலர்ந்தாள்.

"நீ இனிமேல் கணக்கிலே சைபர் வாங்கறதில் லேன்னு சொல்லு."

இதைக் கேட்டவுடன் இடி இடி என்று நான் சிரித்தேன். சாம்புவும் நகைத்தான். வந்து விட்டது கமலத்திற்கு ரோஷம். வயது பதினாலு ஆனாலும் என்ன? அவளுக்கு வழக்கமாகிவிட்டதால், கண்களைப் பிசைய ஆரம்பித்தாள்.

"அட அசடே, இதுக்கு அழுவானேன்?" என்று சாம்புவும் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அவளைத் தேற்றினான். அழுகை வலுத்ததே ஒழிய நிற்கவில்லை.

"என்ன சின்னக் குழந்தையாட்டமா? போதும், நிறுத்து அழுகையை. எங்கே, சிரி பார்ப்போம்" என்று மறுபடியும் அவளைக் கையால் அணைத்துக் கொண்டு சொல்லிவிட்டு, கைவிரலால் கன்னத்தைக் குத்தவே, சற்று நிமிர்ந்து என்னைப் பார்த்துச் சிரித்தாள். சாம்புவும், "போதும் விளையாட்டு" என்று மெதுவாகச் சமயம் பார்த்து நழுவினான்.

"நான் பாக்கி மாலையைத் தொடுக்கிறேன்" என்று கையை நீட்டி அவள் கையிலிருந்து மாலையை வாங்கப் போனேன். "சாரதா, நீ வேறொரு மாலை தொடு. அதோ உள்ளே ஜன்னல்லே நார் கிழித்துக் கட்டியிருக்கு. எடுத்துண்டு வா" என்று என்னிடம் சொல்லித் தன் கையிலிருந்த மாலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள். நான் சரேலென்று உள்ளே நுழைந்தேன். கமலத்தின் தாய் கண்ணாடியில் பார்த்துக் கொண்டு நெற்றிக்குக் குங்குமம் இட்டுக்கொண் டிருந்தாள். என்னைப் பார்த்ததும் "சாரதா, எங்கே கமலம்? நாழியாச்சு. கூப்பிடு" என்று சொல்லிக் கொண்டே வாசலுக்கு வந்தாள். கமலம் மாலை கட்டுவதைப் பார்த்து, "போதும் அம்மா, நாழியாச்சு. வெள்ளிக்கிழமை. எடுத்துண்டு வா கோத்ததை. காலை அலம்பிண்டு பூஜையுள்ளே அம்மன் படத்துக்குச் சாத்திவிட்டு இரண்டு பாட்டுச் சொல்லு. அம்மா, வா" என்று வாஞ்சையுடன் அவள் சொன்னது என் உள்ளத்தைக் கவர்ந்தது. எனக்குத் தாயில்லாத காரணமோ என்னவோ, அவள் அப்படி என்னைப் பார்த்துச் சொல்லியிருந்தால் தட்டவே மாட்டேன் என்றுதான் எனக்குத் தோன்றியது. ஆனால் கமலம், "போ அம்மா, இப்பத்தான் சாரதா வந்தா. நான் விளையாடணும்" என்றாள்.

"என்னடீது! நாழிகை ஆச்சுன்னா. அவாத்துலே இருட்டினாக் கவலைப்படுவா, அம்மா சாரதா! ஆத்துக்

குப் போ! சந்தியா காலம் ஆச்சு'' என்று என்னைப் பார்த்துச் சொல்லவும், எனக்கு அப்பொழுது, "ஆம்'' என்ற எண்ணம் மனத்தை வாட்டியது. 'கமலத்தின் அண்ணா சாம்பு எவ்வளவு ஆசையுடன் அவளிடம் கொஞ்சுகிறான்!' அவளுக்கு இருக்கும் செல்வாக்கைப் பார்த்து நான் எப்படிப் பொறாமைப்படாமல் இருக்க முடியும்? வீட்டு ஞாபகம் வரவே என் சந்தோஷமெல்லாம் பறந்தோடியது.

* * *

என்னை யார் அங்கே சீந்துகிறார்கள்? வாசிக்கிறாயா, பாட்டுப் பாடுகிறாயா என்று அண்ணா ஒரு நாள் என்னைக் கேட்டதுண்டா? எப்பொழுதாவது கிட்டுவிற்கு ஜுரம் வந்துவிட்டால் மாத்திரம் என் அண்ணா, "எல்லாம் சாரதாதான் காரணம். ஜலத்தில் அவனோடு விளையாடாதே என்றால் எங்கே சும்மா இருக்கா? கேட்கிறதில்லை. சின்னக் குழந்தை மாதிரி இவளுக்கு ஓர் ஆள் வேண்டியிருக்கு, கவனிக்க'' என்று என்மேல் பாய்வார்.

ஒரு நாள் நான் ஓட, கிட்டு என்னைத் துரத்திப் பிடித்தான். வாழைப்பழத் தோலின்மேல் காலை வைத்துச் சறுக்கி மடேரென்று கீழே விழுந்தேன். மண்டை கலங்கிச் சிறிது நேரம் ஒன்றும் புரியாமல் விழித்தேன். பிறகு வலி பொறுக்காமல் அழ எத்தனித்தேன். அவ்வளவுதான். என் அண்ணா, அவர் அறையிலிருந்து வேகமாக வந்து, "வேணும் நன்னா!'' என்று என்னைப் பார்த்துக் கையை ஓங்கியவர் அடிக்காமல் திரும்பினார். என்னை அழாதே என்று சொல்ல ஒருவரும் இல்லை. இன்று கமலம் என்ன பாடு படுத்தினாள்? அப்போது? அவள் அண்ணா என்ன என்னவெல்லாம் சொல்லித் தேற்றினான்? எனக்கோ அழுவதற்குக்கூடப் பயமாக இருந்தது. எல்லாவற்றிற்கும் அதிருஷ்டம் வேண்டாமா?

வீடு வந்து சேர்ந்தேன். வாசற்படியில் நின்ற கிட்டு நான் புதிதாக வாங்கிய புத்தகம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு என்னைப் பார்த்தவுடன், "வா, சொல்றேன்; அப்பா உன்னை அடிக்கிறேன்னு. இன்னமே என்னை விட்டுட்டுப் போவையோ?" என்று சொல்லிக்கொண்டே போய், "அப்பா, அக்கா வந்தூட்டா. நீ அடிக்கிறேன்னையே" என்றான். அவரும், "இதோ வந்தூட்டேன்னு சொல்லு" என்று வாயால் மாத்திரம் சொல்லிவிட்டுப் பத்திரிகை ஒன்றை வாசித்துக்கொண் டிருந்தார். எனக்கு அவன் கையில் இருந்த புத்தகத்தைப் பிடுங்கிக்கொண்டு போக வேண்டும் என்று தோன்றியதால், "உனக்கு யார் கொடுத்தா?" என்று சொல்லி அவனை நெருங்கினேன். "நான் கொடுப்பேனோ?" என்று சொல்லிவிட்டு அவன் அம்மாவிடம் ஓடினான். நீலவர்ணப் பென்ஸிலால் குறுக்கும் நெடுக்குமாக அவன் அப்புத்தகத்தின் மேல் அட்டையில் கிறுக்கி இருந்தான். நான் என்ன செய்வது? அவனை வசப்படுத்த வழி இல்லாமல்,, "நீ எங்கே யிருந்து எடுத்தே?" என்றேன். "அப்பாதான் கொடுத்தா" என்று முணுமுணுத்துக்கொண்டே, அவன் அதைக் கீழே போட்டு அதன்மேல் உட்கார்ந்து கொண்டான். எனக்கு வந்த கோபத்திற்கும் துக்கத்திற்கும் அளவே இல்லை.

* * *

ஒன்றும் தோன்றாதவளாக என் அறையில் போய் உட்கார்ந்தேன். அப்படியே ஆழ்ந்த யோசனையில் இருந்தேன். எனக்கும் அப்பா அம்மா இருந்தால் இப்படியெல்லாம் இருப்பேனா?

அப்பொழுது வீல் என்று கதறிக்கொண்டே கிட்டு உள்ளே ஓடி வந்தான். "அம்மா, நாளைக்கி எனக்கு எண்ணெய் கொடுப்பாளாம். நான் சாப்பிட மாட்டேன்" என்று அழுதான். "போ, அப்பாவிடம்

சொல்லு" என்று நானும் கேட்கப் பிடிக்காமல் சொன்னேன். இதற்குள் ராத்திரி ஆயிற்று. படுக்கையில் வெகு நேரம் தூக்கம் இல்லாமல் புரண்டேன். அப்புறம் எப்படியோ தூங்கிப் போனேன்.

பொழுது விடிந்து மணி ஏழு இருக்கலாம். கிட்டுவின் அழுகை காதில் விழவே பாயைச் சுருட்டிக் கொண்டு வேகமாகக் கிளம்பினேன். கிட்டு எண்ணெய் சாப்பிடமாட்டேன் என்று படுத்திக்கொண் டிருந்தான். முற்றத்தின் தாழ்வாரத்தில் எண்ணெய் ஜாடியும் பக்கத்தில் கஷாயக் கற்சட்டியும் வைத்திருந்தன. அந்தக் காஷாயத்தின் வாசனை என் வயிற்றை ஒரே குமட்டலாகக் குமட்டிற்று. கிட்டு, பாவம்! எப்படிச் சாப்பிடுவான்? இங்கும் அங்குமாகத் தாவித் தவித்துக்கொண் டிருந்தான். என் மன்னியும் சமாதானங்களால் முடியாமல் கடைசியில் அடிப் பிரயோகத்தை நாடினாள். அவன் பின்னும் அதிகமாகக் கதறத் தொடங்கினான். என் அண்ணாவோ இடித்த புளிமாதிரி மணையின்மேல் உட்கார்ந்துகொண்டு மேல்வேஷ்டியினுள் கையை விட்டுக் கொண்டு ஜபம் செய்துகொண் டிருந்தார். எனக்குத் தூக்கக் கலக்கமாக இருந்ததால் கண்ணை முழுவதும் திறக்காமல் முற்றத்தில் இறங்கினேன். குழாயில் ஜலம் எடுத்துக்கொண்டு போய் முகம் பல் எல்லாம் சுத்தம் செய்வதற்காக இறங்கினேன். பக்கத்துச் சாக்கடையிலிருந்த தவளை ஒன்று என்மேல் தாவிற்று. அவ்வளவுதான்; பயத்தால் அக்கம் பக்கங்கூடப் பார்க்காமல் அப்படியே மேடைமேல் தாவினேன். அங்கிருந்த எண்ணெய் ஜாடி என் பாவாடையில் அகப்பட்டுக்கொண்டு சாய்ந்து உருண்டதில், அதிலுள்ள எண்ணெய் எல்லாம் கொட்டிப் போயிற்று.

இந்தச் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்து, "அட அப்பா, வந்தாடா என் எழவைக் கொட்டிக்க! ஆச்சா, கொட்டியாச்சா? போ. நல்ல காரியந்தான்! கையும்

காலும் இப்படிப் பரபரப்பாக இருந்தால் யார் வீட்டில் வச்சுக்கிறது?" என்று சீறினாள் என் மன்னி.

எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அப்படியே திக்பிரமை பிடித்தவள்போல் நின்றேன். என் அண்ணா சும்மா இருந்தவர், "எனக்கு அப்பவே தெரியும்" என்று சொல்லி என்னை வெறிக்கப் பார்த்தார். என்னை வைவதற்கு முடியாமல் தவித்தார் என்று தான் எனக்குத் தோன்றியது. கிட்டுவும் அழுகையை அப்படியே நிறுத்திவிட்டு மூக்கை உறிஞ்சிக்கொண்டே வந்து, "அம்மா, இன்னமே காபி சாப்பிடட்டுமா?" என்று என் மன்னியின் தலைப்பைப் பிடித்துக்கொண்டு கேட்டான்.

"உனக்குக் கொண்டாட்டந்தான், போ" என்று என் மன்னியும் அவன் முதுகில் ஓர் அடி அடித்தாள். ஆனால் கிட்டு அதைக் கவனியாது உள்ளே ஓடினான்.

* * *

நடந்த சம்பவங்களை யோசித்துப் பார்க்கையில் எல்லாம் என் துரதிருஷ்டத்தின் பலன் என்றே தோன்றிற்று. "என்னை யார் தேற்றுவார்?" என்று நினைக்கும்பொழுது கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருக, விம்மி விம்மி அழுதேன். குடுகுடுவென்று கிட்டு ஓடி வந்து, "அக்கா! நீ காபி சாப்பிட்டாச்சோ?" என்று கேட்டான். நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அழுகையை மாத்திரம் நிறுத்தாமல் தேம்பினேன்.

கிட்டு என் அருகில் வந்தான்; என்னை ஏற இறங்கப் பார்த்தான். மெள்ளத் தன் முகத்தை என் மடியில் வைத்துக்கொண்டு தேய்த்தான்; மறு நிமிஷம், "உம்...உம்...நான் எண்ணெய் சாப்பிடறேன், இனிமே" என்று அழவும் ஆரம்பித்தான்.

# வள்ளி பெற்ற பட்டாசு

## 1

"இதோ வரேன் பாரு. ஏண்டீ, இப்படி அமர்க்களம் பண்ணினுல் உடம்புக்கு ஆகுமா? டாக்டர் தான் பேசாமல் படுத்துக்கொண்டிரு என்று சொன்னுரே! கேட்டால்தானே? எல்லோரும் நாளைக் குத் தீபாவளிக்குப் புதுப் பாவாடை உடுத்துக்கொள் ளட்டும். நீ மாத்திரம் ஜுரத்தோடே படுக்கையிலே கிட" என்று மங்களத்தின் தாய் கதவண்டை வந்து நின்றுகொண்டு பெண்ணை ஆசீர்வதித்தாள்.

"இல்லே அம்மா, நான் சும்மாத்தான் இருக்கேன், அம்மா! வள்ளிதான் பேசினு" என்று மங்களம் பயத் துடன் சொல்லி, தலையணைமேல் திரும்பிப் படுத்துக் கொண்டாள். உண்மையில் பேசினதெல்லாம் மங்களந் தான். வள்ளி வாயே திறக்கவில்லை. கண்ணை மாத்திரம் விழித்துக்கொண்டு எதிரில் வைத்திருந்த பட்டாசுக் கட்டுகளையும் மத்தாப்பு வாணங்களையும் பார்த்து, 'ஏ அப்பா, எவ்வளவு!' என்று பிரமித்துக் கொண்டிருந்தாள் வள்ளி.

தாய் மறைந்தவுடன் மறுபடியும் குசுகுசுவென்று மங்களம் பேசலானுள்: "இதோ பார்த்தாயா, பூ வாணம்! இதோ பாம்பு வாணம். போன வருஷம் எதிராத்துச சுப்பு, நேக்கு ஒண்ணுகூடத் தரமாட் டேன்னு. நான் மாத்திரம் கொடுப்பேனே இப்போ, அவளுக்கு?"

வள்ளி, அவர்கள் வீட்டில் சின்னக் குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாயியின் பெண். சாதாரணமாக

வள்ளி அங்கே அதிகமாக வருவதில்லை. வந்தாலும் உடனே போய்விடுவாள். ஆனால் இன்றைக்கு மங்களம் வைத்திருந்த பட்டாசுக் கட்டுகளைப் பார்த்தவுடன் அங்கேயே இருக்க அவளுக்கு ஆசை உண்டாயிற்று. அவளும் குழந்தைதானே?

"ஏண்டி வள்ளி, உனக்குப் பட்டாசைக் கையிலே பிடிச்சுண்டு விடத் தெரியுமோ? நம்ம ராஜு நன்னு விடுவாண்டி" என்று சளசளவென்று பேசிக்கொண்டிருந்தாள் மங்களம்.

மங்களம் சொல்வது வள்ளி காதில் ஏறவே இல்லை. மத்தாப்புப் பெட்டிகளின்மேல் ஒட்டியிருந்த வர்ணக் காகிதங்களையே அவள் கவனித்துக்கொண் டிருந்தாள். வள்ளியின் ஆவல் நிறைந்த பார்வையே மங்களத்திற்கு மேல் மேலும் பேசுவதற்கு உத்ஸாகம் அளித்தது. மத்தாப்புப் பெட்டிகளைக் கட்டிலின்மேல் படுக்கையில் வைத்துக்கொண்டு, "ஒண்ணு, ரெண்டு" என்று எண்ண ஆரம்பித்தாள் மங்களம்.

"போடி, அப்பா ஏமாத்திட்டார்; அவுட்டு வாணம் வாங்கித் தரேன்னுட்டு! 'நீ மேலே கொளுத்திண்டுடுவே. அதான் வாங்கிண்டு வரல்லே' என்கிறார். வள்ளி, உனக்குச் சிவப்பு மத்தாப்பு வேணுமா? பச்சை வேணுமா? இந்தா, கம்பி வாணம் ரெண்டு தரேன். பட்டாசு ரெண்டு போருமா?"

'உம்' என்று வள்ளி தலையை மாத்திரம் அசைத்தாள். வாயால் ஒன்றும் சொல்லவில்லை. அவள் மனம் எங்கெங்கேயோ சென்றுவிட்டது. 'இவ்வளவு பட்டாசுக் கட்டுகளையுமா மங்களம் விடப்போகிறாள்! எவ்வளவு நேரம் விடலாம்!' வள்ளிக்கு ஒன்றுமே தெரியவில்லை. கையில் வாங்கிக்கொண்ட பட்டாசுக் கட்டுகளில் இரண்டையும் கம்பி வாணங்களில் இரண்டையும் பார்த்து, அவளுக்கு இன்னது செய்வதென்று தோன்ற

வில்லை. இதுவரையிலும் பட்டாசு வெடிப்பதைப் பார்த்தது உண்டே தவிர, பட்டாசுக் கட்டை அவள் தொட்டதில்லை. "வள்ளி, இதை இன்னிக்கு ஒண்ணு, நாளைக்கு ஒண்ணு கொளுத்து. இப்போ நாம் ஒண்ணு விடுவோமா? உள்ளே போய் அம்மாவுக்குத் தெரியாமல் நெருப்புக் கொண்டு வறயா?" என்று மங்களம் அவளைத் தூண்டினாள்.

கையிலிருந்த வாணங்களை எங்கே வைப்பதென்று வள்ளிக்குப் புலப்படவில்லை. பட்டாசுக் கட்டுகளைத் தன் கந்தை மேலாக்கில் வைத்து மறைத்து, மடியில் கட்டிக்கொண்டாள்! அதற்குள் மங்களம், "இந்தா, இப்படி என் பக்கத்திலே இருக்கட்டும், நீ போ, நான் பாத்துக்கறேன்" என்று தைரியம் சொல்லி அவளை உள்ளே அனுப்பினாள்.

வள்ளி ஒரு வறட்டியில் தணல் துண்டுகளை எடுத்துக்கொண்டு வந்து ஜன்னல்மேல் வைத்தாள். "உஸ்! கதவைத் தாழ்ப்பாள் போடுடீ" என்று மங்களம் எச்சரிக்கை செய்தாள்.

வள்ளிக்கு நடுத் தாழ்ப்பாளைத் தவிர மேல் தாழ்ப்பாள்களைப் போட முடியவில்லை. எழும்பி எழும்பிப் பார்த்துவிட்டு முடியாமல் வந்துவிட்டாள். இருவருமாகப் பட்டாசுக் கட்டை உதிர்த்து ஒவ்வொன்றாகக் கொளுத்தி ஜன்னலுக்கு வெளியே எறிந்தார்கள். நடுவில் மங்களம் ஒரு கம்பி வாணத்தைக் கொளுத்தி, "இந்தாடி, நீ பிடிச்சுக்கோ, தூரக்கப் பிடிச்சுக்கோ. அப்புறம் மேலே பட்டுடும்" என்று வள்ளியின் கையில் கொடுத்தாள். வள்ளிக்கு, தான் எவ்விடத்தில் இருக்கிறோம் என்பதே புரியவில்லை. சுய ஞாபகம் மட்டும் சிறிது சிறிது வந்துகொண்டிருந்தது. கம்பி வாணம் வீணாக எறிந்துபோகிறதே என்று மாத்திரம் அடிக்கடி தோன்றியது; ஆனாலும் பேசாமல் மங்களம் சொன்னதைச் செய்தாள். தனக்கு

ஏற்பட்ட ஆனந்தத்தில் கட்டிலின்மேல் தானும் மங்களத்தின் எதிரில் உட்கார்ந்தாள்.

பட்டாசு வெடிக்கும் சப்தமும் வாணத்தின் புகையும் அதிகமாகவே, சமையலறையில் வேலை செய்து கொண்டிருந்த மங்களத்தின் தாய், "ஏண்டி, தாயி, குழந்தையைப் பார்த்துக்கோன்னு, போயிட்டையே! என்ன பண்றது பாரு. ஜுரம் ஜாஸ்தியாயிடும் போ!" என்று சொல்லிக்கொண்டே சார்த்தி யிருந்த கதவுகளைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தாள். அவள் கூடத் தாயியும் தன் வேலையை அப்படியே போட்டுவிட்டு நுழைந்தாள். இருவரும் உள்ளே நடக்கும் விளையாட்டைப் பார்த்தார்கள். மங்களத்தின் அம்மாவுக்குக் கோபம் பொங்கியது.

"தாயி, பாத்தாயோன்னே, உன் பெண் செய்யறதை! அதுக்கு வந்த தைரியத்தைப் பாரு! கட்டிலிலே ஏறிண்டு! ஏண்டி, மங்களம்! உனக்கெங்கே போச்சு புத்தி? அவள் மேலே இடிச்சுண்டு - நன்னயிருக்கு! வெட்கமா இல்லே?" என்று அதட்டினாள்.

வேலைக்காரி தாயி அசாத்தியக் கோபத்துடன், "அட சீ, வா இப்படி!" என்று சொல்லி வள்ளியைக் கட்டிலின்மேல் இருந்து அப்படியே காகரவென்று இழுத்து முதுகில் இரண்டு வைத்தாள்.

மங்களத்திற்குப் பயமாகிவிட்டது. "அவ ஒண்ணும் செய்யலே. நான்தான் அவளை ஒக்காரச் சொன்னேன். அடிக்கச் சொல்லாதே அம்மா" என்று கத்தினாள்.

"இல்லேம்மா, அது அப்படித்தான். கழுதை! ரொம்ப நெஞ்சுத் தைரியம்" என்று சொல்லி வள்ளியை முறைத்துப் பார்த்தாள் தாயி. வள்ளி அழாமல் தன் மடியிலிருந்த பட்டாசுக் கட்டுகளைப் பத்திரப்படுத்திக் கொண்டே மற்றொரு கையால் கம்பி வாணங்களை எடுத்துக்கொண் டிருந்தாள்.

"சீ! போடு அதைக் கீழே!" என்று தாயி அவளைத் தள்ள, வள்ளி அப்பொழுதுதான் தன் அம்மாவைக் கவனித்தாள். தாயி அன்றுதான் மங்களத்தின் தாய் கொடுத்த பழம் பெங்களூர்ப் புடைவை ஒன்றை உடுத்திருந்தாள். பழசானாலும் பட்டானதால் மட்ட ரகத் துணிகளையே வழக்கமாகக் கட்டும் தாயியின் இடுப்பில் பளிச்சென்று அந்தப் புடைவை காணப்பட்டது. அதைப் பார்த்து வள்ளிக்கு அவள் தன் தாய்தானோ, வேறு யாரோ என்று சந்தேகம் ஏற்பட்டதால் அழ வேண்டியதைக்கூட மறந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள். மறுபடியும் தாயி சிறியவுடன் வள்ளி மூலையில் சேர்த்து வைத்திருந்த காலி மத்தாப்புப் பெட்டிகளை எல்லாம் வாரி எடுத்துக்கொண்டு தெருப் பக்கம் ஓடினாள்.

கம்பி வாணங்களை வள்ளி வைத்துவிட்டு மறந்து போய்விட்டதைப் பார்த்து மங்களம், "வள்ளி, கம்பி வாணம் வேண்டாமா? எடுத்துண்டு போ" என்று கூப்பிட்டாள்.

அதற்குத் தாயி, "ஆ, அதுக்கென்னத்துக்கு அதெல்லாம்; வீட்டிலே வேலையிருக்கு. வாணத்தை என்ன செய்யறது? போகட்டும்" என்று மறுத்தாள்.

வாஸ்தவத்தில் வள்ளி மறக்கவில்லை. எங்கே தான் எடுக்கப்போனால் தன் தாய் கோபிப்பாளோ என்று பயந்து சென்றவள், மங்களத்தின் குரலைக் கேட்டு உள்ளே மறுபடியும் நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் தாயி, "எங்கேடி மறுபடியும் வர்றே? போடின்னா, நிக்கறே! வீட்டிலே நாயனா வந்திருப்பாரு. கோச்சுப் பாரு, போ!" என்று அவளைத் துரத்திவிட்டாள்.

இருந்தாலும் மடியில் பட்டாசுக் கட்டுகளை வள்ளி ஒளித்து வைத்திருந்தாள். ஒருவரும் கேட்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையால் காலிப் பெட்டிகளை மட்டும்

கையில் சேர்த்து வைத்துக்கொண் டிருந்தாள். நின்ருல் எங்கே அடி விழுமோ என்று பயந்து, பதில் சொல்லாமல், வீட்டை நோக்கி வேகமாகச் சென்ருள்.

## 2

நாயகு எங்கே? இப்பொழுது வள்ளியின் மனத்தில் நாயகு வெறும் பிசாசாகவே தோன்றினன். குடிவெறியில் அவளை அடித்தும் திட்டியும் செய்வதைத் தவிர வேறென்ன அவனல் செய்ய முடியும்! வீட்டிலோ அவள் தாய் இருப்பதே இல்லை. எல்லா வேலையையும் வள்ளிதான் செய்தாக வேண்டும். இதன் நடுவில் நாயகுவின் அடியையும் வசவையும் தாங்கிக்கொள்ள வேண்டும்.

வள்ளி தெருவில் நடந்துகொண்டே, 'நாம்பளும் மங்களத்தைப்போல் ஐயர் வீட்டிலே பிறக்காமே போயிட்டமே! அவள் அப்பா அவளை அடிக்கிறதில்லே. பட்டாசு வாங்கித் தரூர்!' என்று யோசித்துக் கொண்டே போனுள். அப்போது எதிரில் மாரி மகன் மாயாண்டி சிரித்துக்கொண்டே வந்து அவள் கையிலிருந்த காலிப் பெட்டிகளைத் தட்டிவிட்டான். கீழே விழுந்த பெட்டிகளைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு வள்ளி நிற்காமல் ஓட்டம் எடுத்தாள். குடிசையை அடைந்தவுடன் அவர்கள் வீட்டு வளர்ப்பு நாய், தன் கையிலிருந்த பெட்டிகளை மோந்ததையும் சட்டை செய்யாமல் ஒரு மூலையில் போய்ப் பானை ஒன்றுக்குள் தான் கொண்டுவந்ததை எல்லாம் வைத்து மூடினுள் வள்ளி. 'அப்பாடா!' என்று உட்கார்ந்து, வாசலில் படுத்திருந்த நாயின் வாலைப் பார்த்தவண்ணம் சற்று நேரம் போக்கினுள். ஒருவரையும் காணவில்லை. அவள் தகப்பன் இனிமேல் எப்போது வருவாஞே?

வள்ளி பானையில் கையிட்டு மறுபடியும் எல்லாச் சாமான்களையும் எடுத்துப் பரப்பினுள். ஒரு பலகை

யில் பட்டாசுக் கட்டுகளை வைத்து, காலி மத்தாப்புப் பெட்டிகளை ஒன்றினுள் ஒன்றாக மாட்டிக் கோத்து வரிசையாக நிறுத்தினாள். 'கூ....கூ!' என்று வாயால் ரெயில் சப்தம் செய்வதுபோல் செய்துகொண்டே அவற்றை முன்னும் பின்னும் தள்ளினாள்.

"இது ரெயில் டேஷன்; புது இன்ஜின் மாட்டப் போகிறேன்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

பட்டாசுக் கட்டுகள் இரண்டையும் மோந்து பார்த்தாள். மறுபடியும் உள்ளே பானைக்குள் அவற்றைப் பத்திரமாக வைத்தாள். வெளியில் எடுத்து மறுபடியும், 'நல்ல வேளை, மாயாண்டி பார்க்கல்லே. பாத்தா விடமாட்டான் என்னை!' என்று தனக்குள் முணுமுணுத்தாள். பட்டாசுக் கட்டுகளை நடுவில் வைத்து மத்தாப்புப் பெட்டிகளைச் சுற்றி வைத்து, விதம் விதமாக அவற்றை நிறுத்திப் பார்த்துக்கொண் டிருப்பதில் மனத்தைப் பறி கொடுத்துவிட்டாள்.

"அடே களுதே! வள்ளீ! ஏ மூதேவி! என்ன செய்யறே? இதோ வந்து ஒதைக்கிறேன்" என்றெல்லாம் வெளியிலிருந்து வந்த சப்தம் அவள் காதில் விழவில்லை. பின்னால் தெரிந்த நிழலைக்கூட அவள் பார்க்கவில்லை.

திடீரென்று ஒரு முரட்டுக் கை அவளைத் தள்ளிவிட்டு அந்தப் பட்டாசுக் கட்டுகள் இரண்டையும் எடுத்து, மத்தாப்புப் பெட்டிகளைச் சிதறிய பிறகே மனோராஜ்யத்திலிருந்து அவள் விழித்துக்கொண்டாள். திரும்பிப் பார்த்துத் தன் தகப்பன் என்று அறிந்தவுடன் அவள் மார்பு திக் திக்கென்று அடித்துக்கொண்டது. பட்டாசுக் கட்டுகளுக்கு என்ன கதியோ என்று அவள் கலங்கினாள்.

"பட்டாசு வேறேயா உனக்கு!" என்று அவன் உறுமிக்கொண்டே அவற்றின் மேல் காகிதத்தை

உரித்து, தான் வாயில் பிடித்து வந்த சுருட்டின் நெருப்பில் கொளுத்தி வெளியே எறிந்தான். படபட வென்று இரண்டு கட்டு வெடிகளும் இரண்டே நிமிஷத்தில் வெடித்து ஓய்ந்தன. அக்கம் பக்கத்துக் குடிசைகளிலிருந்து குழந்தைகள் வெளியே வந்து வேடிக்கை பார்த்துவிட்டு, சுட்ட துண்டுகளைப் பொறுக்க ஆரம்பித்தனர். வள்ளி உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு நகரவில்லை. மறு நிமிஷம் ஒரு பலமான உதை அவளைத் தூக்கி அப்புறம் எறிந்தது. "எழுந்து போன்னு, குந்திக் கிடக்கறே! வேலையைப் பாரு!" என்ற அவள் தகப்பன் கர்ஜனையைக் கேட்டவுடன்தான், சுய ஞாபகம் சிறிது வந்தது.

சிறுமியின் உள்ளம் சிதைந்துவிட்டது. சுட்டுக் கரியான பட்டாசுத் துண்டுகளைப்போல் அவளுடைய உணர்ச்சிகளும் கருகிச் சிதறிவிட்டன. வெடித்த பட்டாசுத் துண்டுகளையாவது பொறுக்க அக்கம் பக்கத்துச் சிறுவர்கள் தோன்றினார்கள். ஆனால் அவள் இதயத்தில் ஒடிந்து கிடந்த ஆசைகளைக் கவனிக்க அவளைச் சேர்ந்தவர் ஒருவரும் இல்லை.

# தஞ்சம்

அவளுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. அதிருஷ்டத்திற்கே அவள்மேல் அசூயை.

கன்னிப் பருவம் அவளைக் கட்டி அணைத்தது. யௌவனம் அவள் மேலெல்லாம் தன் முத்தங்களைச் சொரிந்தது. ஒளி திகழும் வானத்தையும், அதன் நிர்மலமான நீலத்தைப் பிரதிபலிக்கும் கடலையும் போன்றது அவள் உள்ளம்; அன்பென்னும் வரம்பற்ற தத்துவத்தில் தோய்ந்திருந்தது.

தஞ்சத்தின் தாயுடன் பிறந்தவள் இறந்தபோது, தன் சகோதரியின் பாதுகாப்பில் கமலத்தை விட்டுச் சென்றாள். குழந்தைப்பருவ முதல் ஒன்றாக வளர்ந்தவர்களே தஞ்சமும் கமலமும். ஆனால் கமலத்தைத் தஞ்சம் நினைத்தவாறு கமலம் அவளை நினைக்கவில்லை. பிறவிக் குணத்தின் மாறுதலே அதற்குக் காரணம்.

ஒரு நாள் தஞ்சத்தின் பதினைந்தாம் ஆண்டு நிறைவுக்காக அவள் தந்தை அவள் விரும்பிய நீலப் புடைவையை வாங்கி வந்தார். இரவில் ஆகாயத்தில் ஜ்வலிக்கும் நக்ஷத்திரங்கள்போல் மினுமினுவென்று பிரகாசித்த ஜரிகைப் புட்டாக்கள் நிறைந்த அச்சேலையைக் காணவும், கட்டில் அடங்காத களிப்புடன் தஞ்சம் அதை இரு கைகளிலும் ஏந்திக்கொண்டு, "கமலம், இந்த நீலாம்பரங்களை மாலையாகத் தொடு; நான் அப்பா வாங்கி வந்த ஆடையை அணிந்து வருகிறேன்" என்று ஓட்டமாக உள்ளே தாவிச் சென்றாள்.

மனிதப் பிறவியிலே காணாத அழகுடன் சோபித்தாள் தஞ்சம், அந்த ஆடையின் சுழல்களில். அதைப்

பார்த்துக் கமலம் சட்டென்று, "என்னவோ மாதிரி இருக்கிறதே புடவை! உன் நிறத்திற்கு ஒத்ததாக இல்லையே" என்றாள். தஞ்சத்தின் முகம் மலர்ச்சி இழந்தது. மறு விநாடி தன் அறைக்குச் சென்றவள், தான் முன் உடுத்திருந்த சேலையையே கட்டிக் கொண்டு திரும்பி வந்தாள்.

* * * *

கலாசாலைப் படிப்பு ஆரம்பமாயிற்று, தஞ்சத்திற்கு. அவள் வகுப்பில், கூட வாசித்த மற்றப் பெண்கள் அவள் வருகையையே எதிர்பார்த்து நிற்பார்கள். சதா அவளுக்கு விஷமமும் விளையாட்டுந்தான். ஆனால் மணி அடித்ததும் வகுப்பினுள் நுழைந்துவிட்டால், பிறகு அவளுடைய துறுதுறு என்ற விழிகள் பாடங்களில் கவனமாக இருக்கும்.

'கலைத் தத்துவம்' என்ற விஷயத்தை வைத்து வியாசம் ஒன்று எழுதும்படி வாத்தியாரம்மா பெண்களைக் கேட்டாள். எழுத உட்கார்ந்ததுதான் தாமதம், தஞ்சம் தன் பேனாவை நிறுத்தாமல் காகிதங்களின் மேல் செலுத்தினாள். அரை மணியில் தன் கட்டுரையை முடித்துவிட்டு, நோட்டுப் புத்தக சகிதம் வாத்தியாரம்மாவிடம் நின்றாள். "இவ்வளவு அவசரம் எதற்கு?" என்றார்கள் அவளுடைய சிநேகிதிகள். என்னதான் எழுதுவது என்று ஏக்கங் கொண்டவர்கள் ஆனதால் தங்கள் வேலையை விட்டு, தஞ்சம் செய்வதில் அவர்களுக்குப் புத்தி சென்றது.

மறு நாள் வகுப்பில் பாடம் தொடங்குவதற்கு முன் வாத்தியாரம்மா தஞ்சத்தைக் கூப்பிட்டு, "நீதான் இதை எழுதினாயா? அல்லது ஏதாவது புத்தகத்தை ரகசியமாகப் பக்கத்தில் வைத்துக்கொண்டு பார்த்து எழுதினாயா?" என்றாள். கடைசிப் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த ஸரோஜா எழுந்து நின்றுகொண்டு, "நான்

நன்றாகப் பார்த்தேன். தஞ்சத்தின் கையில் அச்சிட்ட ஒரு புத்தகத்தின் தாள் இருந்தது" என்று கோள் சொன்னாள்.

தஞ்சத்தின் மனம் பட்ட பாட்டை விவரிக்கவும் வேண்டுமா? உதடுகள் துடிதுடிக்க அவள், "இல்லை, நான் காபி அடிக்கவில்லை. இது அபாண்டமான பொய். வேண்டுமென்றுதான் ஸரோஜா சொல்லுகிறாள்" என்றாள்.

ஆனால் வாத்தியாரம்மா மட்டும், "என்னவோ? எழுதியிருப்பதைப் பார்த்தால் சந்தேகமாகத்தான் இருக்கிறது" என்றாள்.

மறுநாள் காலையிலிருந்து தஞ்சம் கலாசாலைக்குப் போவதை நிறுத்திவிட்டாள்.

* * *

'சரி; கலாசாலைப் படிப்பு நின்றது நல்லதுதான், தஞ்சத்திற்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும்' என்று அவள் தந்தை ஜாதகக் கட்டை எடுத்துக் கொண்டு ஜோஸ்யர் வீட்டுக்குச் சென்றார்.

டாக்டர் ரகுநாதன் பரீக்ஷையில் முதலில் தேறி, ஜெனரல் ஆஸ்பத்திரியிலும் வேலை பார்த்துக்கொண்டிருந்தான். நல்ல அழகு வாய்ந்தவன். வயதும் முப்பதுக்குள் இருக்கும். பார்வைக்குக் கண்ணியமான தோற்றம் அவனிடம். கல்யாணத்திற்கு முகூர்த்தமும் வைத்தார், தஞ்சத்தின் தந்தை. தாலி கட்டி முடிந்ததும் தம்பதிகள் சேர்ந்து நின்ற மணக்கோலம் பார்த்தவர் கண்களைக் கொள்ளை கொண்டது. ஆனால் வயது கடந்த ஒரு மாது, வதூவரர்கள் நமஸ்கரிக்கையில், தஞ்சத்தின் தாயின் காதில் மெதுவாகச் சொல்லும் பாவனையாக, தஞ்சத்திற்கும் கேட்கும்படி, "அம்மாமி, என்ன மாப்பிள்ளையின் தலையில்? விளாங்காய் அகலம் மயிர் உதிர்ந்து கிடக்கே!" என்றாள்.

அடுத்த கணம் தஞ்சம், "அம்மா இதோ வந்துவிட்டேன்" என்று கூறி உள்ளே சென்றவள்தான்; வெற்றிலை மஞ்சள் வாங்க வந்தவர்கள் கல்யாணக் கூடத்தை விட்டு அகலும் வரையில் வெளிக் கிளம்பவே இல்லை.

*   *   *

தஞ்சம் தனிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்தாள். கணவனும் மனைவியும் வெகு அந்நியோன்னியம். இருவருக்கும் பிடித்த விஷயம் சங்கீதம். கேட்க வேண்டுமா தம்பதிகளின் மன ஒற்றுமைக்கு? கணவனுக்கு வீணை வாசிப்பதில் பைத்தியம். மனைவிக்கு வீணையுடன் சேர்ந்து பாடுவதில் கொண்டாட்டம்.

ஒரு நாள் சாயங்காலம் ரகுநாதனுடைய நண்பன் ஒருவன் அவர்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். பள்ளிக்கூடச் சிநேகமானதால் வெகு நாழிகை வரையில் தங்கிவிட்டான் வந்தவன். மேலும் தஞ்சத்தின் பாட்டையும் அன்றுதான் முதல் தடவை அவன் கேட்டான். இனிய குரலும் கமக மயமான பிடிகளும் அவன் உள்ளத்தை எங்கோ கொண்டு சென்றன. அவனால் சொல்லாமல் இருப்பது அசாத்தியமாகி விட்டது. "அப்பா, ரகு, என்ன பாக்கியம் செய்தாயோ இவளை மனைவியாகப் பெற!" என்று பாராட்டு மொழிகளைக் கொட்டிவிட்டான்; அவ்வளவுதான். அன்றுதான் தஞ்சத்தின் இன்பக் கனவுகள் சிதறின.

"ஏன் உங்கள் சிநேகிதர் இப்பொழுதெல்லாம் இங்கே வருவதில்லை?" என்று தஞ்சம் ஒரு நாள் கணவனைக் கேட்டாள்.

"எனக்குத் தெரியாது, ஏன் என்று. உனக்கு என்ன இவ்வளவு கவலை? உன்னுடைய சங்கீதத்தை அநுபவிக்க வேறு ஒருவருக்கும் ஞானம் போதாது என்பது உன் அபிப்பிராயம் போலும்!" என்று சற்று மனச் சலிப்புடன் பதில் உரைத்தான் ரகுநாதன்.

தஞ்சத்தின் இதயம், அடித்துக்கொள்வதையும் சற்று நேரம் மறந்தது; அவள் கண்களில் நீர் துளித்தது.

"போதும் எனக்கு. இனி இந்தப் பாட்டும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம்" என்றுதான் அவளுடைய வாயினின்றும் மொழிகள் பெருமூச்சுடன் கலந்து வெளிவந்தன.

அப்பொழுது அவள் தனிமையில் ஜன்னலின் வழியாக வெளியே எதையோ உற்றுப் பார்த்த வண்ணம் நின்றிருந்தாள். ஆம், கறுத்த மேகம் ஒன்று வளர்பிறையின் நிலவொளியை மறைத்துக்கொண்டிருந்தது.

# ஸெப்டெம்பர் பரீக்ஷை

## 1

கடற்கரை மணலின்மேல் ஸ்ரீகாந்தன் தனியே படுத்திருந்தான். ஆகாயத்தையே நோக்கிக்கொண்டிருந்த அவனுடைய பார்வையில் சிறிது சிறிதாக நக்ஷத்திர மண்டலங்கள் தென்பட்டன. சந்தியா காலத்தின் மங்கிய ஒளியில் விண் மீன்களும் அவனுடைய வருங்காலத்தை ஒட்டிய எண்ணங்களைப் போலவே தெளிவுபடாமல் இருந்தன.

அன்று சாயந்தரந்தான் அவன் பி. ஏ. பரீக்ஷையில் தவறிய செய்தி கிடைத்திருந்தது. அதனால் அவன் அந்தரங்கத்தில் கட்டிய மனக்கோட்டைகளெல்லாம் தகர்ந்து வீழ்ந்து கிடந்தன.

கைம்பெண்ணான அவன் தாய்க்கு அவன் ஒரே மகன்; கூடப் பிறந்த தங்கை ஒருத்தியும் உண்டு. ஆனால் சமீபத்தில் சிறிது காலமாக, அவனிடமேதான் அவன் தாய்க்குத் தன் உலக வாழ்க்கை சம்பந்தமான ஆசைகள் எல்லாம் வேரூன்றி நின்றன. முதலில் அதிருஷ்டசாலி என்று நினைத்திருந்த அவன் தங்கை விஜயலக்ஷ்மி, இளம் வயதிலேயே விதவையானாள். தனவந்தரான மிராசுதார் குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டவள், திடீரென்று புருஷனைப் பறிகொடுத்துவிட்டுத் தாயின் மடியை வந்து அடைந்திருந்தாள். அந்தோ! பளிச்சென்று கொழுந்துவிட்டு எரியக் கூடிய தீபம் புயல் காற்றினால் இடம் தெரியாமல் அணைந்துவிட்டது.

ஸ்ரீகாந்தனுடைய தந்தை வாழ்ந்த காலத்தில் அவருக்கு அதிகச் சம்பாத்தியம் இல்லை. அவர் வைத்துப்போன சொற்பத் தனமும், அவன் மேற்

படிப்புக்கும், மற்ற முக்கியச் செலவுகளுக்கும் மட்டுமே போதுமானதாக இருந்தது. சப் ரிஜிஸ்திரார் வேலையில் இருந்துகொண்டு மேல்வரும்படி சம்பாதிக்கத் தெரியாத ஒருவரால் எவ்வளவு சேர்க்க முடியும்! ஏதோ இவ்வளவாகிலும் கைக்குக் கிடைத்ததே பெரிய லாபம் என்று கருதிய அவன் தாயும், கிராம வாழ்க்கையை விட்டுப் பட்டணத்தில் பிள்ளையின் படிப்பிற்காகக் காலம் கடத்தி வந்தாள். ஒரே ஒரு திருப்தி அவளுக்கு உண்டு. பிள்ளையாண்டான் இதுவரையிலும் பரீக்ஷைகளில் தேறி வந்ததே அதற்குக் காரணம்.

வெகு நாழிகை ஸ்ரீகாந்தனும் அப்படியே மணலின் மேல் அசைவற்று யோசனையில் ஆழ்ந்து கிடந்தான். வெளியே இனித் தலையை நீட்ட முடியாதே என்றுதான் அவன் உள்ளம் தவித்தது. தன்னைவிடச் சுமாரான புத்தியைப் பெற்றவர்கள் எல்லாரும் எப்படியோ பரீக்ஷையைத் தாண்டிவிட்டார்களே என்று எண்ணவும், நாக்கைப் பிடுங்கிக்கொள்ளலாமா என்று அவனுக்குப் பட்டது. எல்லாவற்றையும்விட, வீட்டில் தன் தாய்க்கு ஏற்படக்கூடிய ஏமாற்றத்தை நினைத்தபோது, அவனுக்கு வேதனை அதிகரித்தது. அடிக்கடி அவன் காது கேட்க அவன் தாய் பெருமை அடித்துக்கொள்வதையும் கேட்டிருக்கிறான் அல்லவா! 'அவப்பா சம்பாத்தியம் நல்ல வழியில் வந்ததாலேதான் அவனும் சப்பை, சோடை என்ற பட்டம் வாங்காமல் சுமாராகத் தேறி வந்திண்டிருக்கான்' என்பாள் அவன் தாய்.

அது போகட்டும். சாயந்தரம் அவன் பெயர் பரீக்ஷைக்குச் சென்றவர்களின் ஜாபிதாவில் சிவப்பு மசியினால் நடுவே அடிக்கப்பட்டிருந்ததை நினைக்கையில் பழைய ஞாபகங்களெல்லாம் புற்றீசல்போல் கிளம்பின. பக்கத்தில் உள்ளவாகள் தன்னையே கவனிப்பதாகத் தோன்றியதும் இப்பொழுது அவன் ஞாபகத்தில் வந்தது. 'சிவப்பு மசியில் தோய்த்த

பேனாவைக் கையில் ஏந்திய ஓர் அற்பக் குமாஸ்தா தன்னுடைய இதயம் அதனால் ரத்தம் கசியப்போவதை உணர்ந்திருந்தால் - இவ்வளவு தயை தாக்ஷிண்யம் இல்லாமல் பெயரை அடித்திருப்பானா?'

ஆம், பரீக்ஷையில் தவறியது அவனுக்குப் புதிய அநுபவந்தான். ஆகையால் என்றும் இல்லாத ஒரு துயரம் அவனுக்கு ஏற்படவே, சமுத்திரக் கரையைப் பார்க்க ஓடிவிட்டான். அங்கே தனியாக இருந்த படகொன்றின் பக்கத்தில் மறைவாக முதலில் உட்கார்ந்தான். பக்கத்தில் கிடந்த படகுகூட, சமுத்திர அலைகளின்மேல் மிதக்கும்பொழுது அவன் மனம் போல் அவ்வளவு தத்தளித்திராது.

'ராமேசுவரம் போனாலும் சனீசுவரன் விடான்' என்பதற் கேற்ப அவனுடைய தனிமையையும் கெடுக்க ஒரு சம்பவம் ஏற்பட்டது. "அடே, இங்கேயா இருக்கே!" என்று கேட்டுக்கொண்டே அவனைப் பார்த்துத் தாவி வந்தான், நீலகண்டன் என்னும் மற்றொரு மாணவன். அவனை வரவேற்க மனமில்லாமல் ஸ்ரீகாந்தன் திகைப்பைக் காட்டினான். வந்தவன் பரிகாசச் சிரிப்புடன். "ஏண்டா உடம்பு சரி இல்லையா; ஒரு மாதிரியா இருக்கையே!" என்றான். என்ன சொல்வதென்று திணறிய ஸ்ரீகாந்தனும், 'ஆம்' என்பதுபோல் தலையை ஆட்டினானே தவிர, வாயைத் திறந்து ஒன்றும் சொல்லவில்லை.

இதற்குள் அவன். "நீ என்னமாடா பரீக்ஷையில் 'கோட்' அடிச்சே! உங்க கலாசாலையில் உள்ள மத்தப் பையன்களெல்லாம், 'பாஸ்' பண்ணியிருக்கான்களே!" என்று கேட்டான். கேள்விக்குப் பதில் வராது என்பதை உணர்ந்தவன்போல் மேலும் அவன், "தெரியுமா உனக்கு என் சேதி! எனக்குத்தான் ரெண்டு பரிசுப் பதக்கங்களும். ஆனால் பொருளாதார சாஸ்திரப் பாடத்தில் மட்டும் திருச்சிக் கலாசாலைப்

பையன் ஒருவனுடன் எனக்கு ஒரு பரிசில் பங்கு. அந்தத் திருச்சி வாத்தியார்களுக்கெல்லாம் எப்பவும் இப்படித்தான்; யாராவது ஒருவனே சென்னையில் பரிசுகளையெல்லாம் கொண்டுபோயிடுவான்னு புகைச்சல்கூட. டே, இந்த வருஷம் எனக்கு வந்த மொத்த மார்க்கு இதுவரையிலும் ஒருவனுக்கும் வந்ததில்லையாம்டா!'' என்று முதல் அத்தியாயம் வாசிக்கத் தொடங்கிவிட்டான். பாவம்! ஸ்ரீகாந்தனுடைய மனம் பட்ட பாட்டை விவரிக்க ஒண்ணாது. நீலகண்டனோ தலைகால் புரியாமல் தன் பெருமையில் முழுகிக் கிடந்தான். மனிதனுக்குத்தான் என்ன அகம்பாவம்! அதிருஷ்டம் வந்தால் கானல் காற்றைப்போல் கொஞ்சநஞ்சமுள்ள ஈரத்தையும் நெஞ்சிலிருந்து வறட்டி எடுத்துவிடுகிறதே!

நல்ல வேளையாக நீலகண்டன் சற்று ஓய்ந்தான். எதிரில் உள்ளவனுடைய மௌனம் அவனுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. ஆகையால், "வறேண்டா" என்று எழுந்துவிட்டான். "வற ஸெப்டெம்பரிலே 'பாஸ்' பண்ணிடுவேன்னு நினைக்கிறேன்" என்று ஆசீர்வாதத்தையும் அள்ளிவிட்டுச் சென்றான் வந்த வழியே. ஸ்ரீகாந்தனுடைய கண்கள் சென்றவனைக் கொஞ்சமும் பின்தொடரவில்லை. அவனுக்குத்தான் திரும்பிப் பார்க்கக்கூடக் கூச்சமாய்விட்டதே! யாராவது மற்றொரு தெரிந்த மாணவன் கண்ணில் தென்பட்டால் என்ன செய்வது என்ற கவலைதான், அவன் வேறு ஒன்றையுமே கவனிக்க முடியாமல் செய்துவிட்டது.

வர வர, வானத்தையும் மணல் வெளியையும் இருள் சூழ்ந்துகொண்டது. ஆகாயத்தில் ஜ்வலித்த சுடரொளிகளையும், மெரினாவில் கண்ணுக்கெட்டிய தூரம் பளிச்சென்று எரிந்த தீபங்களையும் தவிர, வேறு ஒன்றும் அவ்விருட்டில் புலனாகவில்லை. ஒன்பது மணி ஆனதும் விளக்கு அணைக்கப்பட்டது. ஸ்ரீகாந்தன்

எழுந்திருந்து மெதுவாக மனத்தாங்கலுடன் வீட்டை நோக்கி நடந்தான்.

தெருக்கோடிக்கு வந்தவுடன், தன் வரவைக் கவலையுடன் எதிர்பார்க்கும் தன் தாயின் தலை வெளியே எட்டிப் பார்ப்பதைத் தூரத்திலிருந்தே உணர்ந்து கொண்டான். குழப்பங்கள் மனத்தினுள் மறுபடியும் எழுந்தன. தன் அபஜயத்தைப்பற்றித் தானே அவளிடம் தெரிவிப்பதா? வேறு ஓர் அநுதாபமுள்ள ஆத்மாவும் இத்தருணத்தில் தன்னுடன் இல்லையே என்றுதான் அவன் உள்ளம் கரைந்தது. அவன் கால்கள் எப்படியும் அவனை வீட்டின் அருகில் கொண்டு சேர்த்துவிட்டன. தன் தாயின் கண்களை அவன் ஏனோ இன்று சந்திக்கக் கூச்சப்பட்டான்! ஒரு வேளை எதிர் வீட்டு ராமு, தான் பரீக்ஷையில் தவறியதைச் சொல்லியிருக்கக் கூடும். குருட்டு அதிருஷ்டம் ராமுவுக்கு இவ்வருஷம் அடித்துவிட்டது. கஜினி முகம்மது போல் வருஷந்தோறும் முற்றுகை போட்ட ராமுவும் பரீக்ஷையில் தேறி யிருந்தான்.

ஆனால் அவன் எண்ணியதவ்வளவும் தவறு என்று உடனே ஏற்பட்டது. அவனைக் கண்ட அவன் தாய், "அப்பா, ஏண்டா இவ்வளவு நாழி? நீதானேன்னுட்டு வறவா போறவாளெல்லாம் கவனிச்சுக் கவனிச்சுத் தலைவலி எடுத்துவிட்டது. மணி ரொம்ப ஆகல்லே இன்னும். டாக்டரைக் கூப்பிட்டுண்டு வந்தாத் தேவலை. என்னமோ விஜயம் இன்னிக்குக் கலவரப்படுத்தி விட்டா!" என்றாள் வேகமாக.

"என்ன அவளுக்கு?" என்றான் ஸ்ரீகாந்தன் திகிலுடன்.

"வேறு என்னவா இருக்க முடியும்? அவ இருமறத்தைப் பாத்தா, கோபால் சொன்னது சரியோ என்றுதான் பயப்படறேன்."

"பூ! கோபாலன் பெரிய அநுபவசாலியாக்கும்! பாக்கறத்துக்கு முன்னாலேயே வியாதியைப்பத்திப் புரிஞ்சுபோச்சோ! இப்பத்தானே இவன் டாக்டரானான். அதுக்குள்ளே வியாதிகளைப் பரீக்ஷை செய்வதில் நிபுணனாயிட்டானே! அடேயப்பா!"

மேலும் அவன் தாய் ஏதோ சொல்ல முயன்றதும், அவளைத் தடுத்து ஸ்ரீகாந்தன், "அம்மா, நீ ஒண்ணும் கவலைப்படாதே! அநாவசியமாகப் பயப்படறத்தைத் தவிர இதிலே ஒண்ணும் இருக்காது. நான் நிச்சயம் சொல்கிறேன்" என்றான்.

இதனுடன் வாசலில் நடந்த சம்பாஷணை முடிவடைந்தது. இருவரும் உள்ளே நுழையவே, வெளிச்சத்தில் ஸ்ரீகாந்தனுடைய முகத்தோற்றத்திலுள்ள ஆயாசக் குறியை அவன் தாய் சூட்சுமமாக அறிந்து கொண்டாள். ஒருவேளை பரீக்ஷையில் ஏதாவது ஆயிருக்குமோ என்றுதான் அவள் நெஞ்சில் சுருக்கென்று பட்டது. அடுத்த நிமிஷம் அவள் வாய் கேட்டுவிட்டது: "ஏண்டப்பா, பரீக்ஷை விவரம் தெரிஞ்சுதா? என்ன? போயிடுத்தா! அட பாவமே!" என்று ஏக்கம் கலந்த குரலில் இரைந்து கூவினாள்.

ஸ்ரீகாந்தனும் இதைத்தான் நினைத்து ஏற்கனவே விசாரப்பட்டுக்கொண்டிருந்தான். என்ன செய்வான்! தானாகவே அவளுக்குச் சமாதானமும் உரைக்கத் தொடங்கினான்: "கெட்ட வேளைதான் காரணம், பரீக்ஷை இந்த மாதிரி குட்டிச்சுவரானத்துக்கு."

"எப்படிடா தவறித்து? நன்னாத்தானே படிச்சுண்டிருந்தே! வேணும்னு யாராவது பண்ணிப்பிட்டாளோ ஒருவேளை? சரியாக விசாரிச்சையா?!" என்றாள்; அவன் வார்த்தைகளையும் அவளுக்கு நம்பப் பிடிக்கவில்லை.

"என் கண்ணாலேயே பார்த்தேனே, என் பெயரை அடிச்சிருக்கிறதை."

அவன் தாய்க்கு ரோஷம் அதிகம். ஆகையால் அவள், "போருமடா, நீ சொல்றது. இந்த வெக்கக் கேடு வேறையா நமக்கு? காசைக் கரியா அடிச்சாச்சா? தம்படிகூடத் தப்பு வழியிலே சம்பாதிக்கலே உங்கப்பா! நீ என்ன, இப்படிப் பண்ணிப்பிட்டயே?"

நிதானப் பிரகிருதிகளாலேயே தவிர்க்க முடியாத சந்தர்ப்பம் இது. ஸ்ரீகாந்தனுக்குக் குற்றம் வேறு சாட்டப்படுவதாகப் படவே இரைந்து பேசினுன். தன் அன்னையின் அன்புதான் அவளுடைய அளவு கடந்த துக்கத்திற்குக் காரணம் என்று அறிந்திருந்துங்கூட, படபடப்பான பேச்சை அவனுல் நிறுத்த இயலவில்லை.

"என்ன கெட்டுப்போச்சு இப்போ? அடுத்த ஸெப்டெம்பர்லே ஜம்முன்னு 'பாஸ்' பண்ணிவிடறேன்! அவ்வளவுதானே? ஏதுக்குக் கூப்பாடு போடறே? யார் காதிலேயாவது விழப்போறது. எதுத்தாத்து ராமுவுக்குக் கேக்கப்போறது!" என்று சீறினுன்.

அவன் தாய் ஒப்பாரிவைக்கத் தொடங்கிவிட்டாள். "ராமு தேறிட்டானே; அவன்கூடத் தேறச்சே, நீ இப்படிப் பண்ணுவேன்னுட்டு நினைக்கவே இல்லை நான்! ராமுவுக்கு என்ன குறைச்சல் இனிமே? கல்யாணம் ஆயிடும், வற தைக்கு. அவப்பா காத்துண்டிருந்தார், பிள்ளை பாஸ் பண்ணினதும் வரதட்சிணையை ஏத்த. எனக்கு இந்த வெக்கக்கேட்டைப் பொறுக்க முடியல்லே" என்ருள்.

"ராமுவுக்கு 'பாஸ்' பண்ணக் காரணம் எவ்வளவோ இருக்கு. அவனுக்கு என்ன? அப்பன் செத்துப்போய் வீட்டு அலுவல்கள் நிறைய உண்டா? பால்ய விதவைகளின் கஷ்ட நிஷ்டுரங்களில் பங்கு ஏதேனும் அவனுக்கு இருக்கா? வேறே என்னதான் கவலை இருக்கு அவனுக்கு? இங்கே எப்போ விஜயம் திரும்பி வந்தாளோ அப்பவே இதை எதிர்பார்த்துண்டுதான்

நான் இருந்தேன். நீங்க ரெண்டு பேரும் வீட்டிலே என்னவெல்லாம் கூப்பாடு போட்டுண்டிருந்தேள்? அழாத நாள் இல்லையே! படிக்கணும்னு எவ்வளவு நிம்மதி வேணும் தெரியுமா?" என்று வார்த்தைகளை இடம் தெரியாமல் வீசினான்.

வேறு சமயமாக இருந்திருந்தால் ஸ்ரீகாந்தனும் தன் அருமைச் சகோதரியின் பரிதாப நிலையைக் குறித்து இவ்வளவு அலக்ஷ்யமாகப் பேசியிருக்கவே மாட்டான். இன்று என்னவோ ஒன்றுமே தெரியாதவன்போல் நடந்துகொண்டான்.

கஷ்டத்தைச் சகிக்காத உள்ளம், ஒரு துக்க சம்பவம் நினைவுக்கு வந்தால் மற்றவைகளையும் தொடர்பாக ஞாபகத்தில் கொண்டுவர முயற்சி செய்யும். ஸ்ரீகாந்தனின் தாயின் இதயம் தன் வாழ்நாளில் பட்டவைகளையெல்லாம் நினைக்கத் தொடங்கியது. ஸ்ரீகாந்தனுக்கும் ஒன்றும் பிடிக்காமல் தன்மேல் வெறுப்பு உண்டாயிற்று. அவன் மனத்தைக் குரங்காக அடித்தது, அந்தப் பரீக்ஷை விஷயம். அவன் செவிகளில் கொஞ்சமேனும் கதவண்டை கேட்ட விம்மல்கள் விழவில்லை. விஜயாவின் காதுகளில் உரக்கப் பேசிய வார்த்தைகள் விழவே, அவள் என்னவென்று அறியவே எழுந்து வந்திருந்தாள். உள்ளே வரப் பயந்தவளுடைய செவிகளில் தமையன் சொன்ன நாராசம் போன்ற மொழிகள் குத்திப் பாயவே, நின்ற இடத்திலேயே அழத் தொடங்கிவிட்டாள். சங்கோசமும் ரோஷமும் ஒருங்கே சேர்ந்து கிடந்த இதயத்தில்தான், எவ்வளவு நுட்பமாகப் பாய்கின்றன சிறு சந்தேகங்களும்! அநுதாப வார்த்தை ஒன்று மட்டும் இருந்தால் எவ்வளவு இன்பம் அங்கே உண்டாகும்?

அன்று பகலெல்லாம் வெயில் காய்ந்து புழுக்கமாகவும் இருந்ததால், மழை வரப்போவதற்குச் சூசகமாக இருந்ததென்று பிற்பாடு கொட்டிய மழையி

லிருந்து தெரிந்தது. காற்றென்று திடீரென்று அடித்துக் கதவுகளைப் படீரென்று சாத்தியதுடன், கம்பியில் தொங்கிய சிம்னி விளக்கையும் அணைத்துவிட்டது. எங்கும் ஒரே இருட்டு மயம் ஆகிவிட்டது. மூன்று ஆத்மாக்கள் மட்டும் தங்களுக்குள்ளே பற்பல யோசனைகளில் முழுகி எழுந்தார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? வெளியே மழை பெய்வதால் தூசிகள் எல்லாம் அலம்பப்பட்டுப் பச்சென்று விளங்கும் மரத்து இலைகளைப்போலவே, பச்சாத்தாபத்தின் கண்ணீரில் ஸ்நானம் செய்த இதயங்களும் பரிசுத்தமாக விளங்கத் தொடங்கின.

## 2

இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன. விஜயத்தின் உடம்பு ஸ்திதி அவள் தாய்க்கு மிகவும் கவலைக்கு இடம் தந்தது. அடிக்கடி இருமியதால் அவள் முகத் தோற்றமெல்லாம் மாறிவிட்டது. வெளுத்துத் துரும்பாகத் தேய்ந்திருந்தன அவளுடைய அங்கங்கள். டாக்டர் கோபாலன் கேவலம் தன் சிறிய அநுபவத்தில் நம்பிக்கை வைக்காமல், பெரிய வைத்தியர் ஒருவரையும் அழைத்து வந்து காட்டினான். அவரும் க்ஷயரோகந் தான் என்று முடிவு கட்டினார். டாக்டர் கோபாலன் நல்லவன். தொழில் முறையை எல்லா இடங்களிலும் பிரயோகிப்பவனும் அல்ல. இந்தக் குடும்பத்தில் அவனுக்குப் பற்றுதலுக்குச் சிறிது காரணமும் உண்டு. ஸ்ரீகாந்தனுடைய தாய் டாக்டர் கோபாலன் தந்தைக்குத் தெரிந்தவள். மேலும் விஜயாவினிடம் அவனுக்கு மதிப்பும் அநுதாபமும் இருந்தன. ஸ்ரீகாந்தன் மட்டும் டாக்டர் வார்த்தைகளில் கவனம் செலுத்தியிருப்பின், உடனே விஜயாவை க்ஷயரோக சிகிச்சை செய்யும் வேறு ஊருக்கு அனுப்பியிருப்பான். அவன் காதுகள்தாம் ஒன்றையும் கேட்கவில்லையே! பரீக்ஷை, பரீக்ஷை என்று

தான் சதா ஜபம் செய்து வந்தான். க்ஷயத்துக்கும் ஈரப் பசையுள்ள சென்னைச் சமுத்திரக் காற்றுக்கும் சற்றேனும் ஆகாது. உலர்ந்த வாயு அந்த வியாதியினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு இன்றியமையாதது என்று சாமானியர்கள்கூட அறிவார்கள். அப்படி இருந்தும் ஏனோ ஸ்ரீகாந்தனுக்கு மட்டும் புரியவில்லை!

தன் மனச் சாட்சியை விசாரணை செய்யவும் அவனுக்கு அவகாசமே கிடைக்கவில்லை. பரீக்ஷை ஞாபகமே எப்பொழுதும் இருந்ததால், டாக்டர் சொல்லுவதையும் ஒப்புக்கொண்டு, "இன்னும் ஒரு மாசந்தானே, ஸார்? அப்புறம் புறப்பட்டுடலாம், எங்கே வேணும்னாலும்'' என்பான். அவன் தாயும், 'இன்னும் வியாதி பயங்கரமான அளவு விருத்தியாகவில்லையே. ஆகையால் சீக்கிரம் கிராமத்தைப் பார்க்கப் போய்விட்டால், கிராமாந்தர வாசமே போதும் ஆரோக்கியத்திற்கு' என்று தன்னையே தேற்றிக் கொள்வாள்.

ஒரு நாள் விஜயத்தின் பக்கத்தில் உட்கார்ந்து அவள், "விஜயம், நம்ம ஸ்ரீயைப் பார். என்னமாப் படிக்கிறான்! டாக்டர் சொன்னத்தைத் தெரிஞ்சுக்கணும்னு ஏதாவது நான் கேட்டாக்கூட அவன் அதிகம் பேசறதில்லே. தலையைத் தூக்காமல் பதில் சொல்லிவிட்டு மறுபடியும் புஸ்தகத்திலேயே கவனம் அவனுக்கு. எல்லாம் அவப்பா மாதிரியே இருக்கான். அவரும் இப்படித்தான் இருப்பார், வேலை பாக்கற நாள்ளே. அது என்ன ஊரு - கிள்ளம்பாடியா? - அந்த, மறந்து போச்சு எழவு - அங்கே உள்ள ஜவான்கள்ளாம் இப்படியே சொல்லுவா அவருடைய வேலைச் சிரத்தையைப்பத்தி.''

இதைச் சொல்லும்பொழுதே தன் வெளுப்பு வஸ்திரத்தின் முன்றானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"அந்த மாதிரி அந்த நாளைக் கழிச்சேன். இன்னும் கஷ்டம் பாக்கி இருக்கோ என்னமோ? பகவானே, இந்தக் குழந்தையை மட்டும் எனக்கு வெச்சுடு!" என்று சொல்லி வெகு நாட்களாக வாராத விஜயத்தின் கூந்தலின்மேல் கையை வைத்துத் தடவினாள். பரிவுடன் கூடிய அந்தக் கையின் ஸ்பரிசம் பட்டதும், எங்கோ புதைந்து கிடந்த துக்கமெல்லாம் ஆறாகப் பெருகத் தொடங்கின விஜயாவினிடம். "அழப்படாதுடி அம்மா! உனக்கு உடம்புக்கு ஆகாது. என்னை அப்புறம் டாக்டர் கோவிச்சுப்பார்" என்று சொல்லி அவள் தாய் அவளை அணைக்கவே, பின்னும் அதிகரித்தது அவள் துயரம்.

தன் அண்ணாவினிடம் கண்ட மாறுதலை அவளால் பொறுக்க முடியவில்லை. தான் படுத்த படுக்கையாக இருக்கையில் பரீக்ஷை என்று சதா ஒரு நிமிஷங்கூடத் தன்னோடு பழையபடி பேசாமல் இருக்கிறானே என்று விஜயாவின் உள்ளம் வாடி வதங்கியது. ஆனாலும் தாயின் பேச்சில் கலப்பதுபோல் அவளும், "நன்னாப் படிக்கிறானா? படிக்கட்டும்; பாஸும் முதல்லே பண்ணட்டும். நான்தான் சந்தோஷ சமாசாரத்தைக் கேட்கக் கொடுத்து வைக்கமாட்டேன்" என்றாள்.

ஒரு குலுக்குக் குலுக்கிப் போட்டது அவள் மார்பு. இருமல்கள் ஒன்றன்மேல் ஒன்றாகக் கிளம்பின. வாயிலிருந்து கோழை வரவும் தட்டில் அவள் தாய் அதை ஏந்தினாள். ஆனால் கோழையுடன் இரண்டு மூன்று கட்டி ரத்தம் கலந்து கிடந்தது. தாய் திடுக்கிட்டாள். பக்கத்து அறையிலிருந்த ஸ்ரீகாந்தனைக் கூப்பிட்டாள். "அட இழவே! என்ன தொல்லை!" என்று அவனும் மனம் கசந்துகொண்டே எழுந்து வந்தான்.

"இது என்ன?" என்றாள் அவன் தாய், ரத்தத்தைச் சுட்டிக்காட்டி. ஸ்ரீகாந்தனுக்கு ஒன்றும் புரியவில்லை. சற்று மௌனமாக நின்றவன், "அம்மா, நீ

தான் சும்மா இருக்கிறதில்லையே. விஜயாவை அழ விட்டிருப்பே. அழுது அழுது தொண்டை புண்ணாகி யிருக்கும். அதனால் கோழையுடன் ரத்தம் வந்திருக் கும். இனி அவளை அழ வைக்காதே தெரியுமா?'' என்று தேற்றிவிட்டுத் தன் மேஜையினருகில் வந்து புத்தகங்களையும் நோட்டுகளையும் புரட்டத் தொடங் கினான். பரீக்ஷைப் பேய் அவனைக் கெட்டியாகப் பிடித் திருந்தது. பரீக்ஷை தவறிப்போனது பெரிய அவமா னம் என்றுதான் மாணவர்கள் பலரைப்போல் அவனும் கருதத் தொடங்கிவிட்டான். போதாததற்குத் தன்னை இரண்டொரு சிநேகிதர்கள் பரிகசித்தார்கள் என்ற ஞாபகம்வேறு ஸ்ரீகாந்தனை உறுத்திக்கொண்டே இருந்தது.

விஜயா மட்டும் அதைப்பற்றி மறுபடியும் கேட்டாள்.

“அம்மா, அண்ணாட்டெ ஏன் சொல்லமாட்டேங் கறே! அவன் முன்போல என்கிட்ட இல்லேன்னாட்டு நீ சொல்லப்படாதோ! அதுதான் எனக்கு முக்கிய வியாதின்னு சொல்லு. மறக்கப்படாது. இப்பவே கூப்பிடு அவனை இங்கே. அவன் கல்யாணப் பேச்சு என்ன ஆச்சு? ஜாதகம் பாத்தையே!'' என்றாள்.

தாயின் மனம் நொந்து புண்பட்டுவிட்டது. மகன் செய்யும் பிடிவாதத்தை அவளால் பொறுக்க முடிய வில்லை. ஸ்ரீகாந்தன் அறையை அடைந்தாள் தீர்மானத் துடன். அவன் அப்பொழுதுதான் மஹா கவி ஷேக்ஸ் பியரின் அருமை நாடகங்களில் ஒன்றான, ‘பன்னிரண் டாம் இரவு (Twelfth Night)' என்னும் பாடத்தை உருப்போட்டுக்கொண் டிருந்தான். வெகு காலம் பிரிந்து, மறுபடியும் சந்தித்த அண்ணன், தங்கை இருவரின் அன்புவெள்ளம் கரை புரண்டு ஓடும் காட்சி ஒன்று அதில் உள்ளது. எத்தனை தடவை குறிப்புக் களுடன் அவ்விடங்களை அவன் பரிசீலனை செய்திருக்

கிறுன்! ஆனால் இன்று அவன் தன் சகோதரி விரும்பியும் அவள் பக்கத்தில்கூட உட்காராதபடி ஏன் அவன் மனம் தனித்திருந்தது? புஸ்தகத்தைப் படித்தும் துளி கூட வாழ்க்கையில் அதன் உண்மைகளைக் கொண்டு வராதவர்களே பெரும்பான்மையோரும். அதிலும் பரீக்ஷைக்காக ஏற்பட்ட கட்டாயப் படிப்பில், வேறு எவ்விதமான பலனையும் எதிர்பார்க்க முடியாதல்லவா? ஸ்ரீகாந்தன் பி. ஏ. யில் தேர்ச்சி பெற்றுவிட்டால் புத்தகத்தை எடுத்துத் தூர எறிந்துவிடுவான். அது வரையிலும் அவன் மனம் அதில்தான் உழன்று கொண்டிருக்கும்.

அவன் தாய் தைரியமாகத்தான் அவனை அணுகி ளுள்: "உன் நடத்தை எனக்குச் சுத்தமாகப் பிடிக்கல்லே. உன் பரீக்ஷைதான் உனக்குப் பெரிசு. உன்னைவிடச் சிறிசு அவள். உன்னோடே பேசணும்னு ஏங்கிப் போருடா. அவளை வந்து பாரு; எழுந்திரு உடனே!" என்ருள்.

"என்னம்மா, உனக்குப் பயித்தியம் பிடிச்சுடுத்தா? ஊளரறே. படிக்கச்சே தொந்தரவு பண்றயே! மறுபடி 'கோட்'டடித்தால் அவன்கள்ளாம் என்னை ஊரை விட்டே ஓட்டிவிடுவான்கள்; தெரியுமா உனக்கு?"

வாஸ்தவத்தில் நீலகண்டன் முந்திய தினந்தான் அவனிடம் வந்து, "டே ஸ்ரீ, நீ முதல் வகுப்பிலே தேறப்போறயாமே; நிஜந்தானு? பாஸ் பண்ணிளு மட்டும் போருதோ?" என்று கேலி செய்துவிட்டுச் சென்றிருந்தான். இவை எல்லாவற்றையும் அவன் தாய் அறிவாளா? மாணுக்கர்கள் உலகிலுள்ள உணர்ச்சி களைப்பற்றி அவள் என்ன கண்டாள்!

## 3

டாக்டர் கோபாலுக்கு விஜயாவின் ஸ்திதியில் வரவரக் கவலை அதிகமாகி வந்தது. ஸ்ரீகாந்தனுடைய

பரீக்ஷை இப்பொழுதுதான் எழுதி முடிவடைந்தது. ஆனாலும் அவன் அடுத்தபடி வெற்றிகரமான முடிவை எதிர்பார்க்கத் தொடங்கிவிட்டான். தனக்கு எப்படியும் முதல் வகுப்பில்தான் வெற்றி என்று எண்ணமிடத் தொடங்கினான். கோபாலனும் இனிமேல் விஜயாவை இடம் மாற்றுவது அவசியம் இல்லை என்று நினைக்கலானான். அவளுடைய தற்கால நிலை அவ்வளவு ரெயில் பிரயாணத்தைக்கூடத் தாங்கச் சக்தி வாய்ந்ததாக இல்லை.

ஸ்ரீகாந்தனுக்கு இவைகளில் புத்தி செல்லவில்லை. டாக்டரைக் கண்டவுடன், "என்ன, டாக்டர், பார்த்தீர்களா? அந்தப் பயல்கள்ளாம் இப்போ என்ன சொல்வான்கள் தெரியுமா! பாருங்கோ, என் ஸ்தானம் எவ்வளவு அவன்களுக்கெல்லாம் மேலே போகப் போறதுன்னு!''

டாக்டர் அவன் தாயிடம் மட்டும் ரகசியமாக, "அம்மா, இனிமேல் எங்கே போறது? விஜயாவுக்குச் சற்றுத் தென்பு ஏற்படட்டுமே. பிற்பாடு பார்க்கலாம். பகவான் புண்ணியத்துலே எல்லாம் சரியாகி விடும். பயப்படாதேயுங்கள்!'' என்று சொல்லிவிட்டு உள்ளே படுத்திருந்த விஜயாவினிடம் சென்றார்.

முன்பு பார்த்தவளாகவே அவள் தோன்றவில்லை. முகமெல்லாம் தேய்ந்து, கண்களின் கீழ்க் கரு வளையங்கள் விழுந்திருந்தன. உடலோ எலும்புக்கூடாக மட்டும் தெரிந்தது. புத்தியின் தெளிவு மட்டும் சற்றும் குறையவில்லை அவளிடம்.

டாக்டரைக் காணவும் அவள் வழக்கத்தைவிடச் சற்றுத் தெளிவான மொழிகளில், "டாக்டர், அண்ணா எங்கே?......எப்போதும் அவன் பரீக்ஷைதான் அவனுக்கு......இனிமே என்னைப்பத்தி யாருக்கு என்ன கவலே?.......நீங்களுந்தான் கைவிட்டுட்டேள்''

என்று மூச்சு வாங்கிக்கொண்டு, நின்று நின்று வார்த்தைகளைக் கூட்டிச் சொன்னாள். குரலும் மிகவும் கம்மிக் கிடந்தது.

"இல்லை, இல்லவே இல்லை....நன்றாக் குணமா யிண்டு வரச்சே என்ன கவலை?......உங்களை வேறு இடத்திற்குக் கொண்டுபோகக்கூட......" என்பதற் குள், அவள் சுவாஸம் திணறக் குறுக்கிட்டு, "ச்மசா னத்துக்குத்தானே!" என்று கேட்டாள்.

அவள் முகமெல்லாம் உடனே மாறியது. சுவாஸ மும் திணற ஆரம்பித்தது. கன்னங்களில் வழிந்த கண்ணீரும் தோய்ந்து கறையாக இருந்தது. உயிருடன் உண்ணும் வியாதியின் கோர சொரூபம், அவளைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்குவதே அன்றோ!

டாக்டருக்கு ஒன்றுமே ஓடவில்லை புத்தியில். அவசரத்தில் அவள் கண்களைத் தம் கைக்குட்டை யினால் துடைத்தார். இம்மாதிரி அவளை ஒரு நாள் கூட அவராகத் தொட்டதில்லை. ஆனால் அவருக்குத் தாம் செய்வது ஒன்றுமே மனத்தினுள் தோன்றவில்லை. தம் கண்களில் துளித்த நீரைத் துடைக்க எடுத்த குட்டையை அவளிடம் நீட்டியதும், ஒரு விதத்தில் டாக்டருக்கு உவந்த செய்கை என்றுதான் எண்ண வேண்டியதாக இருந்தது.

மறுபடியும் அவளிடம் சுவாஸத்துடன் ஒரு வார்த்தை கிளம்பியது? முகத்திலும் புன்சிரிப்பொன்று கிளம்ப முயலுகையில், அவள், "டாக்டர், என்னிடம் நீங்கள் என் அண்ணாவை விடக்கூடப் பரிவுடன் இருக் கிறீர்கள்" என்றாள்.

அவ்வளவுதான். இரு கண்களையும் மூடிக்கொண் டாள். ஆனால் முகத்தில் கிளம்பிய சிரிப்பு, பாதியில் நின்றுவிட்டது. பேசியதால் ஆயாசம் அதிகமாகி விட்டது. ஆகையால்தான் கண்களை மூடிக்கொண்டாள்

என்று டாக்டர் கோபால் ஊகித்தார். இருந்தாலும் படுக்கையினிடம் நெருங்கி அல்லித்தண்டுபோல் ஜில்லென்றிருந்த அவனுடைய கையை எடுத்துப் பிடித்து நாடியைக் கவனித்தார்.

அதே சமயம் ஸ்ரீகாந்தனும் உள்ளே வேகமாக வந்தான்: "டாக்டர், கேட்டேளா என் பரீக்ஷை சமாசாரம்?" என்றான். ஆனால் டாக்டர் எதையோ ஆழ்ந்து கவனித்திருப்பதைக் கண்டவுடன், படுக்கையின் அருகில் வந்து, "என்ன தூங்கறாளா?" என்று கேட்டான். மறுபடியும் பைத்தியம் பிடித்தவன்போல், "தெரியுமா என் பரீக்ஷையின் முடிவு உங்களுக்கு?" என்றான். "தெரிந்ததே, அப்பா, எல்லா முடிவும்!" என்று சொன்ன டாக்டர் அப்படியே நாற்காலியில் சாய்ந்து, தம் முகத்தை இரு கைகளாலும் மறைத்துக் கொண்டார்.

ஸ்ரீகாந்தன் போட்ட சப்தத்தால் ஓடிவந்த அவன் தாயும், டாக்டருடைய செய்கையைப் பார்த்ததும் கதி கலங்கிவிட்டாள். மறு நிமிஷந்தான் ஸ்ரீகாந்தனுக்கு விஷயம் விளங்கியது. "ஐயோ, அம்மா, விஜயா போய்ட்டாடீ!" என்று கதறினான்.

நன்றியுடன் டாக்டரிடம் தெரிவித்த முறுவலின் சாயை விஜயாவின் முகத்தில் அப்படியே படிந்திருந்தது. அவள் உதடுகள் மட்டும், தன் அண்ணனை ஒரு நாளும் கடிந்துகொள்ளாமல், தன் குறையைப் பொக்கிஷமாகக் கொண்டு ஜாக்கிரதையாக மூடியிருந்தன.

# வாஸ்தவம் எது?

“நீங்க பாட்டுக்கு வாயை மூடிண்டிருந்தா எல்லாம் தானுகச் சரியா நடந்துடுமோ?” என்று செல்லம்மாள் தன் கணவரைப் பார்த்துக் கோபத்துடன் சொன்னாள்.

அவரிடமிருந்து பதிலே இல்லை. சாய்வு நாற்காலி ஒன்றில் படுத்தபடியே அவர் அன்று காலை, ‘ஹிந்து’ பத்திரிகையைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

“காது கேக்கலையா? எல்லோரும் போன பிற்பாடு நீங்களும் நானுந்தான் இங்கே பாக்கி. ஒண்ணும் செய்யாமே உக்காந்திருக்கேளே!” என்று மறுபடியும் அவள் புருஷன் அருகில் வந்து கேட்கவே, அவர் முகத்தை மட்டும் நிமிர்த்தி, கவலைக் குறியுடன் வைத்துக்கொண்டார்.

அவருக்குத்தான் என்ன செய்வதென்று தெரியவில்லையே! இரண்டு மாதங்களாக ஊரில் இதே பேச்சுத்தான் எங்கும். குண்டு விழுந்துவிடும் என்று பயப்படாதவர்களே இல்லை. சிலர் ஜப்பான் யுத்தத்தில் இறங்கியது முதல் சென்னைக்கு எதிரிகளின் கப்பல்களும் ஆகாய விமானங்களும் வந்துவிடும் என்று பயப்பட்டார்கள். உடனே தங்கள் பெண்டாட்டி குழந்தைகளை, பந்துக்களிடம் அனுப்பத் தக்க ஏற்பாடுகளைச் செய்துவந்தார்கள். ஒன்றுவிட்ட சிற்றப்பாவோ அத்தை மகனே, பாட்டியின் இரண்டுவிட்ட சித்தியோ, யாரோ ஒருவர் தெற்கேயுள்ள கிராமங்களில் இருந்தால் அவர்களை நன்ருக ஞாபகப்படுத்திக்கொண்டு குசலப் பிரச்னங்கள் செய்து, தங்கள் குடும்பங்களைக் கொஞ்ச காலம் அவர்கள் வசம் அனுப்புவதாகவும் எழுதியிருக்

தார்கள். பலர் உடனே ஊருக்கு அனுப்பியும் விட்டார்கள், தங்கள் பெண்டு பிள்ளைகளை. மற்றும் சிலர் - கையில் கொஞ்சம் பணம் இருந்ததால் - தனி ஜாகையைக் கும்பகோணம், தஞ்சாவூர், திருச்சி போன்ற இடங்களில் ஏற்படுத்தியிருந்தார்கள். இவையெல்லாம் லக்ஷ்மீநாராயணையர் காதிலும் விழாமல் இல்லை.

ஆனால் காதில் விழுவதோடு நின்றன. அவருக்குச் சுபாவத்தில் எதையும் வேகத்துடன் செய்யும் மனப்பாங்கே இல்லை. வேகமாகச் செய்பவர்களைக் கண்டாலும் அவருக்குப் பிடிப்பதில்லை. வெகு நாட்கள் பழக்கமான சோம்பலைத் திடீரென்று விடுவதும் அவருக்குப் பிடிக்கவில்லைபோலும்.

"உங்களைத்தான். எத்தனை தரம் சொல்றது? எதிராளாத்தில் நேத்து ராத்திரியே எல்லோரும் கோயமுத்தூருக்குப் போய்விட்டார்கள்; தெரியுமோன்னோ? நீங்கமட்டும் ஏன் பேசாமல் இங்கே வீட்டைவிட்டு நகர உத்தேசம் இல்லாமல் இருக்கிறீர்கள்? இந்த வீடு என்ன, உங்களுக்கு ஸர்வ மான்யம் விடப்பட்டதா? உங்க யோசனையைத்தான் எனக்கும் சொல்லுங்களேன். தானாக மனத்தில் குழம்புவானேன்?" என்று செல்லம்மாள் விடாமல் சரமாரியாகப் பொழியவே, பாவம், அவரும் பதிலுக்கு, 'உம்' என்று சொன்னார்.

"என்ன உம்! இந்த எழவு வீட்டை விட்டுத் தொலையணும். இல்லாவிட்டால், இப்படியா ஒரு புருஷர் ஒண்ணும் செய்ய வகை இல்லாமல் இடிஞ்சு கிடப்பார்!" என்று அவள் அடக்க முடியாத ஆத்திரத்துடன் இரைந்தாள்.

இதனிடையில், "அம்மா, இன்னிக்கு என்னமோ ஜப்பான்காரன் வரப்போறானாமே. தெரியுமா, அம்மா? ரோட்டுலே நான் வறப்போ, ஒரு மோட்டார் வண்டி மேல் பெரிய குழாயை வச்சுண்டு யாரோ ஒரு

வெள்ளைக்காரன் சொல்லிண்டு போறும்மா. ஒரே கூட்டமாயிருக்கு மூலையில்!" என்று குழந்தை சுந்தரம் உள்ளே ஓடிவந்து சொன்னான்.

"உங்கப்பாட்டே சொல்லு" என்று செல்லம்மாள் சீறினாள்.

பையனும் அவ்விருவர் முகங்களையும் பார்த்து விட்டு, அப்பா வாயை மூடிக்கொண்டிருப்பதைக் கண்டு, "ஆமாம் அப்பா!" என்று ஆரம்பிப்பதற்குள், அவர், "சரிதாண்ட, போ!" என்று அதட்டினார். பையன் மறுபடியும் தான் கண்டதையும் கேட்டதையும் சொல்லுமுன், வாசலில் ஒலி பரப்பிக் குழாயின் ஓசை கெட்டியாகக் கேட்டது. பின்வருமாறு தமிழிலும் ஒரு குரல் சொல்லியது:

'பட்டணத்து ஜனங்களுக்கு இது எச்சரிக்கை! வேலை இல்லாதவர்கள் உடனே பட்டணத்தை விட்டு வெளியேற வேண்டியதுதான் கடமை; முக்கியமான தொழில்களில் இருப்பவர்கள் மட்டும் தங்கினால் போதும். மற்றவர்கள் ஊரைவிட்டுப் போவதற்குத் தகுந்த ரயில் வசதிகளும் அதிகாரிகளால் ஏற்பாடாகி இருக்கின்றன.'

லக்ஷ்மீநாராயணையர் மெதுவாக நாற்காலியை விட்டு எழுந்தார். எச்சரிக்கையைச் சொல்லிக் கொண்டே அந்த மோட்டார் வண்டி அவர் வீட்டு வாசலைத் தாண்டிச் சென்றது. அவர் மனைவியின் முகத்தில் மிகுந்த கலவரம் தெரிந்தது. இன்னும் என்னவெல்லாம் கலவரம் ஏற்படுமோ என்ற பாவனையாக அவள் கணவர் அவளைத் தாண்டிக்கொண்டு தம் அறையை அடைந்தார். பின் சென்றவள் அவருடைய அறையில் அவர், மேஜையின் அருகில் போடப்பட்டிருந்த நாற்காலியில் அமர்ந்து, ஏதோ யோசனையில் இருப்பதைக் காணவே, சற்று நிதானப்படுத்திக்

கொண்டு, 'போறது, இனிமேல் கிளம்பிவிடுவார்' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு தன்னைத் தேற்றியவளாகத் தன் காரியத்தைச் செய்யப் புறப் பட்டாள்.

லக்ஷ்மீநாராயணையர் வசித்தது மாம்பலம். அவர் உத்தியோகத்திலிருந்து விலகி மாதங்கள் பத்துக்கூட ஆகவில்லை. அதற்குள் ஊரில் அவ்வளவு கெடுபிடி என்றால் அவருக்குத்தான் நிம்மதி எங்கிருந்து வரும்? அவருக்கு ஒரு பெண் குழந்தை உண்டு. அவள் சுந்தரத்திற்குப் பதின் மூன்று வருஷங்களுக்கு முன்னமேயே பிறந்தவள். அவள் வெகு நாட்களுக்கு முன்னமேயே கல்யாணமாகிப் புருஷனுடன் சேலத்தில் குடித் தனம் செய்து வந்தாள். அவளைப்பற்றிய கவலை எதுவும் அவருக்கு இருந்ததாகத் தெரியவில்லை. சுந்தரத்தின் வயது பத்து. அவன் அம்மா செல்லந்தான். அவருக்குக் குழந்தைகள் என்றால் எல்லாம் ஒரே பிடுங்கலாகப் பட்டது. உலக வாழ்க்கையைத் தாம் சரியாக நடத்தியதன் சின்னங்களாக மட்டுமே குழந்தைகளை மதித்திருந்தார் போலும்! ஏனென்றால் மற்றப்படி தமக்குப் பிள்ளை ஒருவன் இருப்பதாகவே நினைப்புக் கிடையாது; அவராகப் பிள்ளையை, 'வாசித்தாயா?' என்று கேட்ட நாளே இல்லை. யாராவது, "பிள்ளையாண்டான் என்ன வாசிக்கிறான்? ஸெகண்டு பாரமா?' என்றால், ஒருவித அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு, ஏதோ சின்னக் கிளாஸ் படிப்பைப்பற்றி விசாரிப்பது கூட அவசியமில்லை என்று அவர் நினைத்தாரோ என்று பிறரை எண்ணும்படி செய்துகொண்டு சும்மா இருந்து விடுவார். கேள்வி கேட்டவர்கள் கோர்ட்டில் விசாரணை செய்பவர்களா? தங்கள் கேள்விக்குப் பதில் சரியான படி இல்லையே என்ற கவலை அவர்களிடம் இராது. அவர்கள் பேசவந்த காரியத்தில் குறியாக இருந்து விட்டுச் சென்றுவிடுவார்கள்.

யுத்தம் சென்னைக்குப் பக்கத்தில் வருவதைக் கேட்டதிலிருந்து உண்மையில் லக்ஷ்மீநாராயணையருடைய தைரியமெல்லாம் பறந்துவிட்டது. அவர் இயல்பாகவே தைரியம் இல்லாதவர்தாம்; ஆனாலும் ஒன்றையும் பற்றித் தாமாக அதிகம் பேசமாட்டார். தம் மனத்தின் எண்ணங்களை வெளிக்காட்டிக்கொள்ளாமல் பிறரை மட்டும் தொந்தரவு செய்வார். குண்டு விழுவதைப் பற்றிப் பேசுவதுகூட அவருக்கு ஒருவிதத்தில் பயம். பயங்கரமான எதையாவது கேட்க நேர்ந்தால் தம் இதயத்திற்குத் தீங்கு நேரிடும் என்ற கவலை ஒரு பக்கம் அவருக்கு அதிகம். மொத்தத்தில் இந்தப் பெரிய உலக யுத்தம் தம்மைத் தொந்தரவுக்கு உள்ளாக்கியதாகவே அவர் நினைப்பு. தீர ஒரு விஷயத்தை விசாரித்தால் நிஜம் தெரியலாம்; தெரிந்தால் ஒரு வேளை மனத்தை அது சிரமப்படுத்தக் கூடும் என்பது அவருடைய கட்சி. மொத்தத்தில் தாம் நடந்துகொள்வது முறை என்றும் மற்றவர்கள் சதா எல்லா விஷயங்களையும் பேசிப் பேசி அலுக்க வைப்பதாகவும் கருதுவது அவர் வழக்கமாகிவிட்டது.

கும்பகோணத்தில் தனி ஜாகை ஒன்று தமக்கு ஏற்பாடு செய்ய இரண்டொரு சிநேகிதர்களுக்கு முன்பே எழுதியிருந்தார். இன்று நிச்சயம் கடிதம் எழுதி ஏற்பாடுகள் செய்துவிடுவார் என்ற எண்ணமே செல்லம்மாள் சற்று மனநிம்மதியைப் பெறச் செய்தது. அவர் வழக்கப்படி ஸ்நானம் செய்யும் நேரமான மணி பதினொன்று ஆகியது. அதன் பிறகு ராமாயண பாராயணம் வேறு யதோக்தமாக நடைபெற்றதைக் காணவே, செல்லம்மாளுக்கு வந்துவிட்டது மனக் கசப்பு. "சமயம், பொழுது கிடையாதா, இந்தப் பேச்சுக்கும், ராமாயண பாராயணத்துக்கும்? எல்லோரும் என்ன என்னவோ வெளியிலிருந்து வந்ததும் வீட்டிலே சொல்றா. நீங்க ஒண்ணையும் சொல்லக் காணோம். ஊர்லே இவ்வளவு குழப்பமா யிருக்கு.

அப்போகூட என்னிடம் கலந்து ஒரு பேச்சைக் காணோம்! என் பாவந்தான்!'' என்று அவர் எதிரிலேயே நின்று நொந்துகொண்டாள். அவரும் வழக்கமாகப் பேசாதவர், இன்று தம் ராமாயணத்தை அவள் ஏளனமாகப் பேசியதும் ஒரு மாதிரி மனம் தவித்துவிட்டார்.

''ஆமாம்; எது என்னவாளுலும் நான் ராமாயண பாராயணம் இல்லாமல் சாப்பிடமாட்டேன். குண்டு விழட்டும்; விழாது போகட்டும்; நான் ராமாயணம் வாசிப்பது என்னவோ நிச்சயம்!'' என்று குரல் சற்று வேகத்தினுல் நடுங்க, உஷ்ணமாகப் பதில் சொன்னுர்.

அன்றைச் சம்பாஷணை அவ்வளவுதான். செல்லம்மாளுக்கு மனத்தில் வருத்தமும் ஆத்திரமும் பொங்கின. ஒரு காரியம் ஒழுங்காகச் செய்யத் தெரியாத புருஷனுக்கு ராமாயண பாராயணம் ஒரு கேடு என்று தான் அவள் உள்ளம் குமுறியது. தன் காரியங்களைக் கவனிக்கவே அவளுக்குப் பொழுது இல்லாததால், 'சரி, எது எப்படியாவது போகட்டும்' என்று வைராக்கியத்துடன் தன் சாமான்களையும், குழந்தை சுந்தரத்தின் துணி மணி நோட்டுப் புத்தகங்களையும் பெட்டியில் அடுக்கிவைத்துத் தயார் செய்துகொண்டாள். இதற்குள் ரெயில் பிரயாணம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. அதிகாரிகள் ஊரை விட்டு எல்லோரையும் கொண்டுபோய் வெளியில் விட ஏற்பாடுகள் செய்திருந்தார்கள்.

லக்ஷ்மீநாராயணையருக்கு மனத்தினுள் இருந்த அதிகக் கலவரத்தில் இன்னது செய்வதென்று தெரியவில்லை. முன்னும் பின்னுமாக வீட்டில் உலாவினுர். பீரோவைத் திறந்து பார்த்தார். என்றைக்கோ தட்டுகளில் அடைத்து வைத்த துணி மணிகளைக் காணவும், அவைகளைக் கவனித்து வேண்டியவை எவை என்று தீர்மானிப்பதே அவருக்குச் சிரமமாகி விட்டது. காலையிலிருந்து துணிகளைப் பார்வையிடுவதில் முழு

நேரத்தையும் செலவழித்தார். அன்று இரவுவேறு ரெயில் பிரயாணம் செய்ய வேண்டும். கிழிந்த துணி களை மடித்து மடித்துப் பெட்டியில் பத்திரப்படுத்திக் கொண்டார். தம் சாமான்களில் ஒன்றையும் பட்ட ணத்தில் விட்டுச் செல்ல அவருக்கு இஷ்டமில்லை. அதுதான் காரணம், கிழிந்துபோன துணியையும் விடாமல் எடுத்து வைத்ததற்கு.

ஆனால் நாழிகை ஆக ஆக அவருக்குத் தம் மனைவி யின் மேல்தான் புகார் சொல்லத் தோன்றியது. அவள் ஓர் அகப்பைக் காம்பையும் விடாது மூட்டை கட்டின தாக அவருக்குப் பட்டது. அவள் ஒரு வாரமாகச் சாமான்களைக் கவனித்து, வேண்டியவை எவை, வேண்டா தவை எவை என்று தீர்மானித்துப் பொறுக்கி வைத் திருந்தாள். லக்ஷ்மீநாராயணையரும் அதிகார தோரணை யாக மனைவியைப் பார்த்து, "நாழிகை ஆகிறது, நீ எதையோ ஆப்பைக் கூட்டைக்கூட விடாமல் மூட்டை கட்டறயே. கும்பகோணத்தில் ஆப்படாதா அது?" என்று தடபுடல் படுத்தினார்.

பாவம், செல்லம்மாள் மனத்திலும் ஒரே வேதனை. இத்தனை நாட்களாக இருந்த ஊரையும் வீட்டையும் விட்டுச் செல்ல யாருக்குத்தான் மனம் வரும்? மேலும் அந்த வீடு, திரும்பி வந்ததும் பார்க்கும் ஸ்திதியில் இருக்கப்போகிறதோ, என்னவோ? என்றெல்லாம் நினைத்து அவள் உள்ளம் உருகியது. ஆனால் அவள் தன் வேலையையும் செய்ய வேண்டியவைகளையும் ஒன்று கூட மறக்கவில்லை. விஷயங்களைக் கவனித்துப் பழக்க மானது அவள் புத்தி; ஒருபொழுதும் திகைப்பைக் காட்டாது.

அன்று இரவு ரெயிலில் கூட்டத்துடன் கூட்ட மாகத் தம்பதிகள் குழந்தை சுந்தரத்துடன் ஏறிக் கும்பகோணம் போய்ச் சேர்ந்தார்கள். லக்ஷ்மீநாராய

ணையருக்காகச் சில சிநேகிதர்கள் கீழை டபீர் தெருவில் ஒரு வீட்டை ஏற்படுத்தியிருந்தார்கள். காபி அருந்தி விட்டு லக்ஷ்மீநாராயணையர் தம் நண்பர்கள் தம்மிடம் காட்டிய மரியாதையை மனத்தால் வெகுவாக அநுப வித்தார். பிறகு மணி பதினொன்று அடிக்கவும் கிணற்று ஜலத்தில் ஸ்நானம் செய்துவிட்டு, மடி வேஷ்டியைப் பஞ்சகச்சமாகக் கட்டிக்கொண்டார். தமக்காக மனைவி போட்டிருந்த பலகையில் வந்து உட்காரவுந்தான் ஞாபகம் வந்தது, தம் கலவரத்தில் ராமாயண புத்த கத்தைப் பட்டணத்திலேயே விட்டு மறந்துவந்தது. தம் பூஜை அறையில் சிக்குப் பலகையில் ராமாயண புத்தகத்தை வைத்துவிட்டு வந்தது ஞாபகத்தில் நன்றாக வந்தது. என்ன செய்வது என்று புரியவில்லை. ஒரு வேளை தம் மனைவி அதைப் பத்திரமாக எடுத்து வந்திருப்பாளோ என்ற பிரமை தட்டியது மனத்தில். மெதுவாக அவளிடம் அவர், "என் ராமாயணம் உன்னிடம் இருக்கோ?" என்று கேட்டார்.

அவ்வளவுதான், செல்லம்மாளுக்குத் தெரிந்து விட்டது அவருடைய நிஜமான கவலை. அவள் மனத் தில் சற்றுத் திருப்திதான் அதில். ஆனாலும் சும்மா இராமல் அவள், "ஒரு நாழிகை பெட்டியின் பக்கத்தில் உட்கார்ந்துகொண் டிருந்தீர்களே. தினம் வாசிக்கும் ராமாயணம் மறந்து போயிடுத்தா? நல்ல ஞாபகந்தான்! ராமாயணத்திலுள்ள பக்தி அதைவிட ஜாஸ்தியா யிருக்கு!" என்று ஏசிக் காட்டினாள். அவரும் விட்டுக் கொடுக்காமல், "பூஜை சாமான்களை எடுத்து வந்தாயே, இதையும் எடுத்துவந்தாயோ என்றுதான் கேட்டேன். இதற்கென்ன இவ்வளவு அமர்க்களம்?" என்றார். "அமர்க்களம் ஒன்றும் இல்லை. நீங்கள் தாம் ராமாயண பாராயணம் செய்யாமல் சாப்பிடமாட்டேன் என்று அமர்க்களம் செய்தீர்கள். அப்படிப்பட்ட புத்தகத்தை ஊரிலேயே வைத்து வந்தீர்களே; ஏன் என்று கேட் கிறேன்" என்றாள் பரிகாசத்துடன். அகப்பைக் கூட்

டைக்கூட மூட்டை கட்டியதை அவர் பரிகாசமாகவும் கோபமாகவும் எடுத்துச் சொன்னதை அவளால் மறக்க முடியவில்லே. அதையும் சொல்லிக் காட்டிவிட்டாள். "அகப்பைக்கூட்டை நான் நம்பியதால் அதை நான் மறக்கவில்லே. உங்களுக்கு ராமாயணத்தின் உபயோகத்தில் சரியான நம்பிக்கை இருந்திருந்தால் இப்படி அதை மறப்பீர்களா?" என்ருள்.

'தினம் விடாமல் பாராயணம் செய்யும் ராமாயண புத்தகத்தை ஏன் மறந்தோம்?' என்று லக்ஷ்மீ நாராயணேயருக்கு யோசிக்க யோசிக்கக் காரணம் புரியவில்லே. ஜப்பான்காரன் வருகிருன் என்ற பயந்தான் அதற்குக் காரணம் என்று அவர் கடைசியில் தீர்மானித்தார். ஆனால் செல்லம்மாள் நினைத்தது, சரியான பக்தி அவருக்கு ராமாயணத்தில் இல்லாத காரணந்தான் அதை மறக்க வைத்தது என்பதே.

வாஸ்தவம் எது?

முற்றும்

